என்னுஞ் சாண்மையு மவனையுந துவனையு மிறுங்கும்
கொள்ளு முற்கமுங் கோத்திர வமுங்கொழும் புல்லுந்
தள்ளு நீர்மையின் றிடந்தொறும் பொலிவன தவாமே
எள்ளு மால்வரை காணக ணண்ணிய வென்ன. (௪௬)

தூய கூவிளங் குருந்துவண் கடுக்கைபைந் தூர்வை
மேய வானிலைந் தோடுகோன் யாற்றறல் விரைமிக்
காய முல்லையின் களம்பழ முதலமை தலினுன்
மாய வன்சிவார்ச் சனைசெய வகுத்தமை போலும். (௪௭)

போற்று மாயவன் மேனியின் கருமையைப் புகழ்கோ
சாற்று பூவையிற் றழைத்தபூக் கருமையைப் புகழ்கோ
வாற்று மாய்ச்சிய ரணிகுழற் கருமையைப் புகழ்கோ
தேற்று செங்கதிர்க் கிரணமுங் காரெனச் செய்யும். (௪௮)

கானப் பேரருங் கடிக்குழ லங்கைய ரோடுந்
தானப் பேரர சாதியர் தவாதுவந் திறைஞ்சி
வானப் பேர்முடி யாயென மருதருள் வழங்குங்
கானப் பேருறத் தவம்புரிந் ததுகமழ் புறவம். (௪௯)

அல்லை வென்றிகொள் கந்தரச் சுந்தரத் தண்ண
லெல்லை யில்லதாம் பேரருள் சுரந்தினி திருக்குந்
தொல்லை வைப்பென லாயவா டானையுந் துவன்ற
முல்லை மாதவஞ் செய்ததேற் பிறிதெவன் மொழிவாம். (௫௦)

வேதம் யாவையும் பிரணவப் பொருளெனல் விளக்கப்
போத நாயகன் மதலையை யுவந்தமர் புத்து
ரேதந் தீரக்கொண் டமர்வனத் தியல்பினென் னுரைத்தாஞ்
சீத மார்வய னிலவளத் தினுஞ்சில தெரிப்பாம். (௫௧)

மருதம். வேறு.

அருமணி வைரம் வாரி யகருவுஞ் சந்துஞ் சாய்த்துக்
கருமதக் களிற்றுக் கோடு கையரிக் கொண்டு விண்டோ
யொருவரை நின்றுங் கல்லென் றிழிந்துறப் பரந்து வாரிப்
பெருவயி றகங்கு ழம்பப் பெருகுறும் பொருநை யாறு. (௫௨)

பிறைமுடிக் கணிந்த வெலுங்கள் பெருந்தகைச் சுந்த ரேசர்
நிறைதலில் குழிவ யிற்றுக் குறட்குநீர் நசைத ணிக்க
முறைமுன மழைத்த வாறின் றழைத்தனர் மொழியின் மண்ணு
மற்றதரு மிதனுலென்ன லவ்வையும் பெருகா நிற்கும். (௫௩)

கங்கையின் பெருக்கோ தெய்வக் காவிரிப் பெருக்கோ வன்றிச்
செங்கையி னுடல் கொண்டார் திருவருட் பெருக்கோ வெற்பன்
மங்கைதன் னருட்பெ ருக்கோ மற்றிஃ தெதற்கொப் பென்னச்
சங்கையின் றுய்ப்ப ரந்து பெருகுறுந் தனிவெள் ளாறு. (௬௪)

பெருகிய நதிநீர் வெள்ளம் பெருமத கூடு சென்று
மருவிய வேரி புக்காங் குறுமத கூடு சென்றுந்
திருவியல் கழனி யெங்குஞ் செறிந்துபல் லுயிர்க டோறு
மொருபரம் பரன்வி யாபித் துறுதிறங் காட்டிற் றன்றே. (௬௫)

அளப்பரு முயிர்கள் செய்யு மன்பினுக் கேற்ப யாரு
மளப்பரு மான்ம நாத ரருணிறைந் தென்ன நாட்டு
ளளப்பருங் கழனி கொள்கைக் கியைதர வாற்று வந்த
வளப்பருநீர்நிறைந்த தார்த்தனர் களம ரெல்லாம். (௬௬)

சாதியின் றமையா தானஞ் சாதிசெய் வினையென் றோர்ந்தாங்
கோதிய பழையர் பாற்போய் வாய்க்கடை வழிய வுண்டு
மோதிய மூவ ருள்ளு முழுப்பல விராம னென்னக்
காதிய வலந்தோண் மேற்கொண் டெழுந்தனர் களம ரெல்லாம். (௬௭)

நுகநடு வேர்க்கால் சேர நோன்மையிற் பொருத்தி நத்தந்
தகமிளிர் கருங்க டாக்க டாழ்வுயர் பொழியப் பூட்டி
மிகமிளிர் தரவி டக்கை மேழிபற் றுபுவ லக்கை
யகமொரு முட்கோல் வாங்கி யார்த்துழு தனரான் மள்ளர். (௬௮)

புரத்தல்செய் பவனில் லாய புடவிமெய் வடுவ னைத்தும்
பரத்தல்செய் யாமற் செய்கை பாங்கெனக் கருதி யாங்கான்
குரத்தமுன் னோர்க டக்கு முறுவிளாப் படைச்சான் மாய்க்குந்
தரத்தது பின்னோர் பின்னுஞ் சார்வவத் தகைய மாதோ. (௬௯)

குறிகொளும் பகட்டு நாஞ்சிற் கொழுமுகங் கிழித்துச் செல்லச்
செறிபசும் புற்க ளாதி யாவையுஞ் சிதைந்து மாய்ந்தே
முறிதரு மூழ்த்த லெய்த முடியவு மாறி மாறி
நெறியுழு தொழின்மு யன்றார் நெடும்பணை யெலாஞ்சே றாக. (௭௰)

தழைதரல் புரிப னைக்கியாந் தழைதரன் முறையே யென்று
குழைதரு தழைக ளாய்ந்து கொடுவந்து நனிப ரப்பி
விழைதர மிதித்தல் செய்து மேயகங் கரிந்து யர்த்திப்
பழையதி தகருத் தேய்த்த பான்மைய தெனச்செய் தாரே. (௭௧)

கரம்புகா ணரிய தாக்கி மேடவல் கழியு மாறு
பரம்புமேற் றிடத்தி யூர்ந்து பாறிய தோட நாளில்
வரம்புறு வரம்பில் செய்யும் வாழ்கவென் றிறையை வாழ்த்தி
நிரம்புநென் முளைவி தைத்தார் நிரப்பெறு முளைசி தைத்தார். (௭௨)

கலங்கனீர் தெளிதல் கண்டு கவிழ்த்திளம் பருவச் சேயி
னலங்கிளர் பசியு ணர்ந்து பாலூட்டு நற்றாய் மான
விலங்குறு மள்ளர் நன்னீர் வேண்டிய காலத் துய்ப்பக்
குலங்கிளர் முளைக ளெல்லாங் கூழென வளர்ந்த வன்றே. (௭௩)

ஊறுநீர் பருவ நோக்கி நாறெலா முறப்ப றித்துச்
சேறுநீர் முளையின் மோதி முடிசெய்தோ ரிடச்ச ரக்கை
வேறுவே றிடத்தி னுய்க்கும் வாணிகர் விழைய மள்ளர்
மாறுநீர் பணைக டோறு மதித்தனர் சுமந்துய்த் தாரால். (௭௪)

ஆய்பிழி மாந்தி மீன்க ளளவும்வெற் றிடமின் றென்ன
வேய்புரை திரடோ ளாற்றுக் காலாட்டி மார்வி ராவிச்
சாய்தர நாறு நட்டார் சாய்வொழித் திடுந மக்குத்
தோய்தரா திதுவென் றம்ம நிமிர்ந்தன தோகை காட்டி. (௭௫)

முளைவிளர்த் தப்பாற் பச்சென் றுயதோர் முறைமை போலத்
தளைதொறு நாறு வெள்ளென் றுய்த்தனி பசப்பிற் றங்கக்
களைவருந் தவத்திற் கூறுக் காமமா தியசார்ந் தென்ன
விளைசரோ ருகமுன் னுய பற்பல மிடைந்த வன்றே. (௭௬)

களைகளை பருவ மென்று கடைசியர் தம்மைக் கூவித்
தளைதொறு மள்ள ருய்ப்பச் சார்ந்துவெள் ளோதி மங்கள்
விளைநடை கற்பா னெண்ணி விழைந்துபின் றொடர வாங்காங்
தளைபல களைக ளெல்லாங் கொல்லுவா னமைந்தா ரன்றே. (௭௭)

பேருற வுற்ற போதுஞ் சிறுபகை யேனும் பேணார்
சீருற வுயர்ந்தோ ரல்லார் செத்தவ ரென்றன் மெய்யே
யோருமா லுந்தி யாயு முழத்திய ருறப்பு நள்ளாச்
சாருமோர் பகையான் மாண்டு சாய்ந்தவம் புயங்க ளெல்லாம். (௭௮)

நகமெனுந் தோட்டி யாலே நக்கவெள் ளாம்ப லெல்லாந்
தகவொறுத் தனர்கை யேவாற் றுமலை பலவுங் கொன்று
நகமிர் புல்லின் மேலா லங்கிரி யெடுத்து வைத்துட்
புகடர்த் தனர்மற் றின்னும் புரிந்தவைக் களவுண் டாமோ. (௭௯)

# திருநாட்டுப்படலம்.

நெடியபுண் டரீக மங்கோ கனகநீ லோற்ப லஞ்சூழ்
கடியரக் காம்பல் வள்ளை முதற்களை யின்ற யாவுங்
கொடியவென் றொருபேர் பெற்றுக் கடைசியர் கொல்லப் பட்ட
படியிலெவ் வுயிர்க்குந் தீதே கொடியன வெனும்பேர் பற்றல். (௮௰)

சிலமலர் குழலில் வேய்ந்தார் சிலமலர் கழுத்திற் சேர்த்தார்
சிலமலர் கையிற் கொண்டார் சிலமலர் மோந்தெ றிந்தார்
சிலமலர் வாயின் வைத்தார் சிலமலர் வரப்பி னுய்த்தார்
சிலமலர் கான்மி தித்தார் தாரதரந் தெரிந்தா ரானோர். (௮௧)

விண்ணமை பவர்க்கூ றுஞ்சூ ராதியர் விளிந்தாற் போல
மண்ணமை பயிர்க்கூ றுய களையெலா மாய்ந்த பின்ன
ரெண்ணமை யுலோப மில்லா ரிரும்புகழ் பணைத்தாற் போலக்
கண்ணகன் கழனி யெல்லாம் பணைத்தன கழுகொ லென்ன. (௮௨)

இளங்கருக் கொடுமு திர்ந்து வயிரகெட் டீட்டிப் போலுந்
துளங்கருந் தோற்றங் காட்டி வெளிப்படூஉத் துவன்றி நின்ற
வளம்படு கதிர்க ளெல்லா மதிவிடு கதிர்வி ராவி
யுளங்கொளக் கனத்துச் சாய்ந்த வுயிரெலா நிமிர மாதோ. (௮௩)

கொல்லரம் பயின்ற தாய கொடும்பிறை யிரும்பு கைக்கொண்
டொல்லெனக் கழனி தோறு முழவர்க ளொருங்கு புக்குச்
சொல்லெனப் பட்ட வெல்லாந் தூரகத் தரிந்து சாய்த்தார்
வல்லையின் வரிந்து சென்னி வைத்தனர் களத்துச் சேர்ப்பார். (௮௪)

பாகசா தனன்சி னந்து பருப்பத மனைத்துந் தள்ளி
மேகவா கனத்தைக் கூவி மிதித்திட விடுத்தன் மான
மோகமார் செற்போர் தள்ளி மொய்கடாப் பிணையல் செய்து
வேகமா மிதிக்கச் செய்தார் வெவ்வலிக் களமர் மாதோ. (௮௫)

ஊர்தரு மிறைவன் மெய்வே றுயிர்வேறு படுத்தன் மானச்
சார்தரு கடாவை வேறு நெல்வேறு சமைக்கக் கண்டு
போர்தரு திண்டோண் மள்ளர் பொருந்திய பலால நீக்கி
யார்தரு நெற்கு வித்துத் தூற்றின ரளவை செய்வார். (௮௬)

கொற்றவ னாறி லொன்று கொளக்கொடுத் தறங்க ளெல்லா
மற்றமின் றுகத் தொன்று தொடுமுறை யமைய நீக்கி
மற்றதை வாரித் தத்த மனைவயி னுய்க்கு மார்ப்புக்
கற்றவர் புகழ்வின் னுடு காதலை யொத்தச் செய்யும். (௮௭)

கழைவடி சாறு காய்ச்சிக் கட்டிகொள் வாரு மிஞ்சி
விழையரி சனமுன் னாய வேறுபல் வளங்கொள் வாரும்
புழைமணப் பொதுமா தோடு புதுப்புன லாடு வாரு
முழைவிழிக் கிழத்தி மார்த மூடலை யுணர்த்து வாரும். (௮௮)

இறைபுரி யாட லெட்டெட் டியற்றுவா னேற்றமாக
முறைமையி னெவர்க்கு முந்தி முளைத்தவைப் பாய மூதூர்
நிறைசிவ லோக மென்ன நிகழ்திரு வால வாய்தன்
னிறைகெழு மருதத் துள்ள தெனினினிச் சொல்ல லென்னே. (௮௯)

மாவணை மேனிப் பொன்போல் வாளுகிர்க் குறிக போலத்
தேவணை மாலாக் கொண்டா ரேற்றினி தமரு மூதூர்
பூவணை மென்ப தந்த மருதத்தே புணரு மென்னி
னாவணைச் செம்மை யாரு ளியரவரே நயக்கி லாதார். (௯௦)

ஆடக மிளிரும் வையை யருகிற்சை வந்தா பித்த
வேடகங் கொண்ட தாய வேடக மாப்ப னூர்முற்
கூடகங் கொண்ட மெங்பால் வளத்தெவன் குறித்துச் சொற்று
நாடக நிகழு நெய்தல் வளஞ்சில நவில லுற்றும். (௯௧)

நெய்தல்.

மழைவளஞ் சுரந்து விண்ணு மண்ணும்வாழ் தரச்செய் கொண்மூ
விழைதரு முணவு நல்கு மேன்மைமிக் குடைய தாகிப்
பழையமா நதிகட் கெல்லாம் பதியெனப் பட்ட வாரி
யுழையுறப் பெற்ற நெய்த லோம்புவன் வருண னானும். (௯௨)

பொருசுறு மருப்பொன் றூன்றிப் புன்னையம் போது சூட்டிப்
பெருகமீ னுணவு நல்கிப் பேணுபு வணங்கூர் தோறும்
வெருவறக் கோட்டி னின்றும் வெளிப்பட வருணன் றோன்றித்
திருவமப் பரதர்க் கீயுஞ் சிலைத்தல்வான் செவிடு செய்யும். (௯௩)

இரும்பினைத் திரித்தா லன்ன விருங்கருங் கோட்டுப் புன்னை
யரும்புகொள் குடுமி பற்றி யந்துகிர்க் கொடிவ ளைப்பக்
கருங்கடற் றிரையெப் போது மறைவது கண்டு மாங்கே
விரும்பியல் குவவி லாபம் விளைவதை யறிகி லேமால். (௯௪)

இடர்தப வாரி மேய விருஞ்சுற வாதி மீனை
மடர்வலை வீசிக் கோற லன்றியுந் தூண்டி லிட்டுப்
படருறக் கோறற் காகப் பரதவ ரமைத்தாற் போலுந்
தொடர்புடைப் பகன்றை யெங்கு மரும்புக டோற்றுங் காட்சி. (௯௫)

இறையவன் சினக்கு மாறொன் றியற்றியா மிழிந்தா மேனு
மறைகட லுவக்கு மாறொன் றாற்றிமிக் குயர்வா மென்று
முறையுற வெண்ணித் தாழை மொய்பல புலவு மாறக்
குறையறப் பூத்தெண் டிக்குங் கொளப்படும் வாசம் வீசும். (௯௬)

தளிர்படு பிண்டி வைப்புந் தவாக்கொடி முல்லை வைப்பு
மொளிர்செழுங் கமல மாம்பூ வுற்றதண் மருத வைப்பு
மிளிருண வாக்கா நீலம் விராயதே யாக்கு மென்று
குளிர்திரை நெய்தல் வைப்பிற் குடிகொளுங் காகப் புள்ளு. (௯௭)

திரையெடுத் தெறியுஞ் சங்குஞ் செழுந்துகிர்த் திரளும் விண்மீன்
புரையொளி முத்து மற்றும் பொருந்துவ வனைத்துங் கொள்வான்
கரையகஞ் செறியும் வண்ணா கங்கள்பொற் பொதிய விழ்க்குந்
தரையிது கண்டும் புன்மை யடைமொழி சாற்ற லென்னே. (௯௮)

ஓரொலிக் குவமை சொல்லி னுலகஞ்சூழ் பார்த்த வாழி
யாரொலி யுரைப்பர் கற்ற வறிவுடை யவர்க ளியாரும்
பாரொலி நிகழு நாவாய் பற்பல படைத்த லாலே
பேரொலி யுடைய தென்று பேணுபு மதித்தார் போலும். (௯௯)

நல்லவை நல்ல செய்யு நாட்டவர் மதிக்க நாளு
மல்லவை யல்ல செய்யு மென்பதை யறிந்தா மன்றே
பல்லமுண் டகம்புன் னாகம் பானனல் வாசம் வீசு
முல்லமுன் னாய பன்மீ னுற்றதீ வாசம் வீசும். (௪00)

நல்லது தீய தோடு நண்ணுறிற் றீய தாகன்
கல்லது நல்ல தோடே யணுகுறி னல்ல தாகு
மொல்லுநன் னீல மீன்சார்ந் துறுபுலா னாறு மீனும்
புல்லுநீ லஞ்சார்ந் தேநன் மணநாறு மிகுபு ணர்ப்பால். (௪0௧)

மழைவளம் வேண்டி நிற்கு மருநிலத் தவர்போ லாது
விழைவள நமக்கீதென்று வெயில்வளம் வேண்டி நிற்குந்
தழைதொழி லுமணர் தம்மாற் றாரப்படு முப்பி னோங்கல்
பிணியற வெவரும் வேண்டும் பெருஞ்சுவை யாயிற் றம்மா. (௪0௨)

உருவள மிரண்டி னாலு முறப்பெரி யவரே யேனும்
பருவரல் கண்டுஞ் சற்றும் பயன்படா ரவ்வி ரண்டு
மருவிய சிறிய ரேனும் பயன்படு வாரு முண்டாற்
பொருதிரைக் கடல்சிற் றூற்றற் கேணியாற் பொருந்த வோர்ந்தாம். (௪0௩)

சிலைவலி யிராமற் குற்ற பாதகந் தீர்த்த மேன்மை
நிலைமரு விராமே சஞ்சீர் நிலாக்தனுக் கோடி யோடு
மலைவற வைக செய்தன் மாதவஞ் செய்த தென்னிற்
கலைவலீ ரனைய செய்த னிலப்புகழ் களையப் போமோ. (௧௦௫)

வளையிரு சிறகு மாய்த்தான் வானக வாழ்க்கை மேவிக்
களையறு மகிழ்ச்சி யெய்தக் கைமல ரொருவே றொட்ட
விளைகமழ் கடப்பந் தண்டார் மேலவன் செந்தில்வைப்புந்
திளையெறி செய்தன் மேய தெனினினிச் செப்ப லென்னே. (௧௦௬)

கனியருள் சுரக்குந் தீர்த்த நலமெலாந் தன்பாற் கொண்ட
புனிதமல் கியபே ராழி பொருந்திய செய்தன் மேன்மை
தனிலெவ னுரைத்தாய் கொற்றி தனியர சிருக்கப் பெற்ற
கனியழற் சுரமாம் பாலை யினுஞ்சில கரைவா மன்றே. (௧௦௬)

பாலை. வேறு.

பாலை யென்பது நானில மருங்கினும் பரல்கூர்
மாலை வன்றிட ரேமுது வேனில்வாய் மாலை
காலை தீர்ந்துவெங் கதிர்சுடு கடும்பக லாய
வேலை வெப்பமிக் காய்கிணைப் பினுஞ்சுடும் விறற்றே. (௧௦௭)

ஈந்து மேய்சிறு குரம்பையாங் காங்குற வியைத்துப்
போந்து வாழ்குவர் மறத்திய ரோடுபுள் ளுவர்கள்
காந்து வெஞ்சின விந்தைதா டொழுந்தொறுங் கடும்போர்
நீந்து வன்றிற லளித்திடப் பெற்றநீர் மையராய். (௧௦௮)

சுரநி லத்தமர் தரினுமா றலைத்திடு தொழிலாற்
பரவு நானிலப் பொருள்களு மிறுக்கர்கைப் பற்றி
யுரவு மேவுற நுகருவர் கல்லுண வுண்டு
விரவு மென்புறு வுயர்தல்கண் ணேரக்கியும் விடாரால். (௧௦௯)

கொடுமை யாளரே யாயினுங் கூடுபே காரப்
படுவ துண்டுகொச் சுரத்தா னெல்லியாற் பலவா
யிடுகே னிக்கள விலைவிளைப் பாடல மதுவாற்
றொடுவே றுங்கிணற் றகநிறைத் துறுவதச் சுரமே. (௧௧௦)

இந்த நாடுகோப் பவன்றிர யோனமிசை யிவர்க
பந்த முண்மைதேர்ந் தாங்கின் வேம்புகள் பரவு
மந்த நாயகன் சிவக்குறி யவாவுலோர்ந் தறியச்
சந்து மார்கனி கிளையெலாந் தந்ததரப் பழுக்கும். (௧௧௧)

எருவை பேட்டிற்குச் சிறகரால் வெயின்மறைத் தியங்கிப்
பொருள்க ருத்துறப் போமவர் செலவுழுங் குவிக்குந்
தெரிய வாவயி னியங்குவான் சென்றகெட் டாரக்கள்
புளிமு றுக்குடைந் தாலெனப் புராணுவ போகா. (௧௧௨)

இலங்கை மாநகர் வாழ்நருள் வீடண னென்னத்
துலங்கு மாவயிற் கன்னிகா ரம்பல துவன்றி
கலங்கொள் காதலர் பின்றொடர் நங்கையர் வருந்தா
தலங்கு சீறடி யின்புறப் பஞ்சிக ளமைக்கும். (௧௧௩)

ஓங்கு நம்பெய ரிங்கில முற்றதென் றுறந்து
வீங்கு பாலைக ளாவயிற் பழுப்பன மேன்மே
லாங்கு மேவியக் கனியுணின் வெளிப்படா ததர
நீங்கு ருழலோட் டத்தொடும் பொருந்துத னிசமே. (௧௧௪)

இன்ன பாலைவெந் தழலெனக் கொதிப்பினு மிகழார்
முன்ன மாலைய னுடிய தெதையென முன்னி
னன்ன பாலைசால் வளத்திலென் னறைந்தன மறைவாஞ்
சொன்ன நானிலத் தைந்திணை மயக்கமாந் தொடர்பும். (௧௧௫)

திணைமயக்கம்.

வரைகொள் பாகன்மேற் படர்தரு கறிக்கொடி வாவி
விரைகொண் முல்லைநீள் குருந்தின்மேற் படர்தர மேவிப்
புரைகொண் மஞ்ஞைகான் வாரண மெதிர்புரிந் தியங்குங்
கரைகொள் கூத்தியர் கயிற்றெறி ரெதிர்நடப் பதுபோல். (௧௧௬)

மேய வான்குழக் கன்றுண லொழிந்தபின் வீடுபோ
லாய தோரவ லகம்புக வவ்வவ லகத்தே
பாய மாமரு தக்கத லிக்கனி பலவுந்
தோய வீழ்வது கண்டுல கெடுத்தின்னுஞ் சொல்லும். (௧௧௭)

செய்ய முண்டகச் செய்வள ரோதிமச் சேவன்
மெய்யி னெய்தன்முண் டகத்துறு மகரந்தம் விராவுத
லைய லார்பெடை புதுக்கடித் தன்மைதேர்ந் தூட
லைய மற்றஃ தடிக்கடி தான்பணிந் தணையும். (௧௧௮)

அலையு றும்பவ ழக்கொடி செழும்பணை யகத்து
நிலைபெ றும்வய லைக்கொடி நெடிபடு முல்லை
மலைவில் பூவையைத் தழுவுவ மாலைமா மகளு
மூலைவில் பூமக ளுந்தழீஇ யுவப்பதை யொக்கும். (௧௧௯)

கடலெ திர்ந்திடு தாளமென் கரும்பெறி தாள
மிடல்கொள் வேழவெண் மருப்பெறி தாளமான் மிளிர்பல்
லிடல்செய் முத்தமற் றிவைமணு கத்தல ரியைய
வடைண்ம றத்தியர் வாரியோர் கறையிலிட் டவைப்பார். (௧௨௦)

கன்ன ரிவ்வள மலிதரு குலத்திணை நான்கு
மன்ன வெவ்வகைக் குடிகளு மரபுளி வைகச்
சொன்ன மேயெனத் துலங்கிடும் வழுதிநாட் டெறுசீ
ரென்ன சொற்றன நகர்வளத் திறுஞ்சில விசைப்பாம். (௧௨௧)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௨௮.

# திருநகரப்படலம்.

பேசரும் வளத்தான் மிக்குப் பிறங்குறு வானங் காப்போன்
றேசமை வாழ்க்கை வேண்டேஞ் செய்பதா மனமே லண்ணல்
வீசரும் வாழ்க்கை வேண்டேம் விண்டுவின் வாழ்க்கை வேண்டேம்
வாசகப் பெருமான் செம்பொன் மலரடி வாழ்க்கை யோமே. (௧)

வேறு.

நிலமெ லாம்புகழ் நெடுநகர் பலவுளு நினைத்த
பலமெ லாந்தரு நகரமுஞ் சிலவவை பரவ
வலமெ லாம்பொலிந் துயர்ந்ததொன் றேயென வயங்கு
நலமெ லாம்பொலி நாம்புகழ் பெருந்துறை நகரம். (௨)

கூட்ட வல்லது பல்வகைக் குடியையுங் கூட்டி
யூட்ட வல்லது பலவகைப் போகமு மூட்டிக்
காட்ட வல்லது புண்ணியப் பொருளினைக் காட்டி
நாட்ட வல்லது கயிலையிற் பெருந்துறை நகரம். (௩)

நீடு வானவர் குழாத்தொடு திகழ்மக வானுங்
கூடு முண்டகா சனத்தனுங் கொண்டன்மே னியனும்
பாடு மெல்லையி னிறைஞ்சியுய் புக்கனர் பரவ
நாடு மான்மியம் படைத்தது பெருந்துறை நகரம். (௪)

அறிய வானவ ரியாவரும் வீதிதோ றணைந்து
செறிய வீழ்ந்துவீழ்ந் தடிக்கடி பணிந்தெழு திறத்தான்
முறிய கற்பக நாறுறு முண்டகத் தோடு
நறிய பைந்துழாய் நாறுறும் பெருந்துறை நகரம். (௫)

ஒளிகு லாம்பல விமானமு மதப்பெருக் குண்ணு
வளிகு லாங்கவுள் வெள்ளைவா ரணமும்வெள் ளனமுங்
களிகு லாங்கலு ழனும்புற நகர்த்தலை காப்ப
நளிகு லாம்வளம் படைத்தது பெருந்துறை நகரம். (௬)

மதிசெய் வெள்ளிய மாடமு மாடமேன் மதியுந்
துதிசெய் வாலிய கொடிகளுஞ் சூழமுத் தார
நிதிசெய் மாலையும் படைத்தமைக் கேற்பநீள் வெள்ளை
நதியு மோர்புறம் படைத்தது பெருந்துறை நகரம். (எ)

மறைக ளாகமந் தோற்றலாற் பரமன்வாய் மானுங்
குறைத ராவொளி யாலகித் தியமுறுங் குணத்தான்
முறையி னியாவரும் வணங்கலான் முதலவன் போலு
நறைவி ராவிய பொழில்சுலாம் பெருந்துறை நகரம். (அ)

ஆய விந்நகர் வளமெலா நோக்கிமிக் காசை
மேய தன்மையா லாசைமா நகரென்றும் வெறுக்கை
பாய தன்மையால் வெறுக்கைமா நகரென்றும் பகர்வார்
சேய மார்புல மையர்நிறை பொன்னக ரினையே. (௯)

எந்த மாநக ரெங்கணும் புகவியங் கிடுவா
ரந்த மார்சிறு துறையதைப் பற்றுவ ரிதனை
நந்த வெய்துநர் பெருந்துறை நயந்தகா ரணத்தா
லந்த மில்லதோர் பெருந்துறை யென்றதா லிஃதும். (௧௦)

குரவு பூண்பவ ரியாவரோ யாயினுங் கொன்றைப்
புரவு வேணிய னேயெனப் பாவனை புரிவா
ரரவு சூடவ னேகுர வேற்றினி தமரும்
பரவு மாநகர்க் குவமையு முண்டுகொல் பார்மேல். (௧௧)

மதிமி லைச்சிய சடாடவிக் கடவுளை மதியிற்
கதிவி ருப்பமை யடியவர் சூழ்வது கடுப்பப்
பொதிவ ளத்தமை திருப்பெருந் துறைநகர்ப் புறத்தே
துதிவி ருப்பமை யிளந்தளி ரிரும்பொழில் சூழும். (௧௨)

மணிநி றத்தவன் மார்பமே லையமம் மார்பி
னணிக வுத்துவ மணிதிருப் பெருந்துறை யாகும்
பணிசெ யம்மணி சூழ்தரு பைந்துழாய்ப் படலை
திணிம திற்றிரு நகரிது சூழ்திகழ் சோலை. (௧௩)

ஆய சோலையின் மங்கைய ரம்மனை யாட்டப்
பாய வானர மதுகண்டு மாங்கனி பறித்துத்
தோய விண்ணக மெறிதரச் சுரரவை பற்ற
நேய மாரிவை மீடரா தென்னென நினையும். (௧௪)

பொங்கர் சூழ்பசுங் கமுகின்மேற் றுவுவ புனாநீர்
மங்கு றச்செழுந் திரையலின் கொழுந்துமாத் திரமோ
பங்க மொன்றறப் பன்மலர் வாருபு பரவக்
கொங்கு கொண்டெழு சிதநதித் திரையலின் கொழுந்தும். (௧௫)

சோலை வாய்நிலா மிலாங்கலித் தலையுமஞ் சுரும்பார்
மாலை மாதரார் மார்பமுந் தாங்குவ குரும்பை
பால வாமொன்று சிறுமையின் மறைப்புணும் பருமை
யேல வொன்றஃ தண்ணுமால் வேற்றுமை யிதுவே. (௧௬)

வாவி வாளைதாய் வலிமுக மச்சுற வியற்ற
மேவி மற்றது தென்னையின் பழக்குலை மிதிப்ப
வோவி யப்பழ மாவிவீழ்ந் ததனையச் சுறுத்துந்
தாவி யாவரு மிடர்க்கிடர் செய்வது தகவே. (௧௭)

நெடிய கந்தியஞ் சூழல்வாய் நிலவுவெள் ளாற்றுக்
கடிய வெண்டிரை வளைப்பவீழ் பழம்பசுங் கதலி
முடிய வாங்குலைக் கூனக மோதுதல் முன்னாள்
வடியி ராகவன் வில்லுண்டை கூனுறன் மானும். (௧௮)

தெங்கு சேர்பொழின் மாயவ னிற்பது சிவனுந்
தங்கு செவ்விய தேத்தடை சக்கரம் போலு
மங்கு வெண்பிறை யொருபுறத் துறல்வளை யாகும்
பொங்கு செங்கதிர் நவேறல் கவுத்துவம் புரையும். (௧௯)

நந்த னங்களி னுல்வுகை மலர்தரு நந்தி
மந்த மாருத மேற்றமர் தரக்கரு வண்ட
ரந்த மில்லென வீழுத லமரர்தே மென்று
முந்த வந்தவு ணர்கள்பொர மொய்ப்பது புரையும். (௨௦)

மன்னு மேன்மைசா றிருப்பெருந் துறைப்பெரு வளத்துண்
முன்னு சிற்சில பொதுமையின் மொழிந்தன மப்பாற்
றன்னு மூவகை நகருளும் படைபல துதைந்து
மின்னு கின்றதா கியபுற நகர்வளம் விரிப்பாம். (உக)

## புறநகர்.

### யானைக்கூடம்.

கோடு கொண்டன மணியுடை யனமதங் குலவு
நீடு பேரரு வியவுருப் பெரியன நிலவு
மாடு வன்மைய வரைபொரூஉம் யானைநின் றிடுவ
வீடு சான்றியங் கிடுவன வேற்றுமை யிதுவே. (உஉ)

கறைய டிப்புகர் முகவரை நின்றிடு கம்ப
வுறைதெ றித்திடு மதப்பெருக் குவட்டெடுத் திடலா
னிறையு மற்றது மூவகை யெனப்படு நிகழ்பாற்
பிறையு ணர்ச்சியர் வாரியென் றிட்டனர் பெயரே. (உங)

ஒரும ருப்புநால் வாய்க்கரி போகிய தண்ட
மருவு றக்கறை யடிச்சுவ டுறுவமற் றவற்றுட்
பெருகு றக்கடா நிறைதலாற் பெட்டளி யுண்ப
வொருக லக்கள்பன் மறையவர் கூடியுண் பதுபோல். (உச)

கறைகொள் காற்றொடர் கைத்தொட ரன்றியுங் கால்பன்
முறையெ ழுஞ்செவி யடித்தொட ரெதற்கென மொழிய
நிறைக டாம்பொழி குஞ்சர மியங்குறு நிலத்திற்
குறைவி லாக்கருங் கோலஞ்செய் தெனவவை குலவும். (உரு)

எதிர மேவிய மருவலர் மருவல ரென்னக்
கதிர்கொள் வானகக் கால்கொடு கயங்குற மிதித்தும்
பிதிர்செய் தீகிரி யாணமோ வாப்பெருந் தும்பி
யதிர யாத்தகூ டம்பல வயங்குவ வாங்கே. (உசு)

### குதிரைப்பந்தி.

பரியெ னப்பலர் வேண்டலிற் பரியெனு மொருபேர்
தெரித ரப்பெறு குதிரைக டம்முருச் சிவணு
மரிபு ணர்ச்சிமெய் வடிப்பரா விதமுளத் தமைத்தே
யிரித லற்றிடத் தோய்ந்துந்தோ யாவித மியங்கும். (உஎ)

பரிக்கு ழாங்கடன் முழக்கமீ ரிடத்தினும் பரவும்
விரிக்கு நெட்டலை கவிழ்தலை மற்றவை வீசுக்
தெரிக்கு முத்தினம் விலாழியிற் சிதருறை யெனினு
மரிக்கு மோர்வட வைப்பெயர் முரணுடைத் தன்றே. (உஅ)

சிறையி லாமலே பறந்துசொக் கெனும்பெயர் தேற்று
மறையில் பூப்பின்றி முளைத்தபா டலப்பெயர் வயக்கு
நிறையி லக்கண மேவியுஞ் சோரப்பேர் நிலவு
மறையு ளுதமே லெழுந்தகத் தகப்பெய ராக்கும். (௨௯)

எங்க டம்முரு வாதிநா லெடுத்திட விளைத்த
திங்கள் சூடிமற் றதன்மிசைச் சிவணவா லளைய
வங்கண் மாலையான் மறைக்குமே லானென்ப ரதனு
னங்கள் வான்புகழ் பெரிதென சவிறல்பேரன் முழங்கும். (௩௦)

பகைத்த மன்னவர் மணிமுடி மிசைக்குரம் பதிக்கு
முகைக்கும் வீரர்க்கு வெற்றியே நாடொறு முய்க்குந்
திகைத்த தன்மையில் வாம்பரி பற்பல செறித்த
நகைத்த மந்திர மாவயினெண்ணில நண்ணும். (௩௧)

தேர் நிலை.

அம்பொன் செய்தகா லதன்மிசை வயிரஞ்செ யச்சா
ணும்ப ரொண்பது மரகதஞ்செய் பரப்புதன் மிசையே
நம்பு நீலக்கான் மிசையொளிர் மேதக நயந்த
பம்பு தேரெலாம் பூதமைந் தடுக்கிய படியாம். (௩௨)

வெற்ற மேபொரு ளெனக்கொண்டு விளங்குமே தகவாற்
கொற்ற மார்சயந் தனமென வொருபெயர் கூறிக்
கற்ற நாவலர் புகழுந்தேர்க் காற்கடப் பதனுக்
குற்ற காற்கடப் போரணக் காற்கடப் பொவ்வா. (௩௩)

அருக்க னென்பவ னுடொறு மாழ்கட லாழ்த
றிருக்கு றுவொரு செலவன்றி மீடலுந் தெரிந்த
பெருக்க மாருமிப் புறநகர்த் தேரெனப் பிறங்கு
முருக்கு லாவுதேர் பெருவொரு காணத்தா லன்றோ. (௩௪)

விண்ணி ழித்திடு முடியுமோர் வியாளமு நடுங்க
மண்ணி ழித்திடு மடியுங்கொ ளிர்நகர் மணித்தே
ரெண்ணி ழித்திடும் படிசெலுந் தன்மையெய்த் தன்றோ
கண்ணி ழித்திடு நுதலிதேர் நிலையுற்ற கடனே. (௩௫)

அடரு மாற்றல ரெதிர்ப்படி னுகவத் தன்னூர்
குடரு மூளையுஞ் சோரியுங் கொழுவும்வன் னரம்பின்
றொடரு மென்புமற் றுள்ளவுந் துவையலே யாகப்
படருங் கால்வலித் தேர்நிலை யாவயிற் பலவால். (௩௬)

## வீரரிருக்கை.

கண்ணி மைத்திடார் வேலெதிர் கன்றமே விடினுங்
கண்ணி முன்வைத்த கால்பின்வை யாக்கழல் வீரர்
கண்ணி வப்புறு தும்பைசூ டுதல்கண் மேனுங்
கண்ணி வாகையே சூடலென் றும்மவர் கற்றோன். (௩எ)

ஆசை யெட்டினு நிறாஉம்பிர தாயத்தி னமைந்தார்
மாசை சேர்வது வரினுயிர் பொருளென வையார்
தேசை யார்கழ லார்பகை யெதிர்சினங் கழலா
ரீசை பாலின னிளமுளை யெனத்தகு மியல்பார். (௩அ)

சிலைவ ணக்குமு னெதிர்ப்படு மாற்றலர் திண்டோண்
மலைவ ணக்குவர் வாள்கொடு வீசுமுன் மாற்று
ரலைக டற்புவி யவர்கொள வீசுவ ரனையர்
நிலையு டைத்திற லிற்றென நிகழ்த்துவா ரெவரே. (௩௯)

இனைய வீரர்த மேவலா ளருமிகல் யானை
துனைவ யப்பரி சயந்தனக் கருவிதோற் றூகரு
முனைய வாயுதஞ் செய்நரு மாய்ப்பலர் முற்றி
நினைய மேவிய விருக்கைக ளாவயி னெருங்கும். (௪0)

வருவ செல்வன கரிபரி முழக்கமு மணித்தேர்
தருவ தாகிய முழக்கமும் பகனெடுஞ் சலதி
யொருவ மிக்கெழும் புறநகர் வளஞ்சில வுரைத்தாம்
பொருவ தொன்றிலா விடைநகர் வளஞ்சில புகல்வாம். (௪௧)

### இடைநகர். வேறு.

தொகுபொன் மாடமுஞ் சுடர்செய் கூடமுந்
தருபல் சோலையுந் தடநன் மாலையும்
புகுந ரியாவரும் பொருந்த நோக்குபு
நகுசு வர்க்கமு நாக மென்பரால். (௪௨)

பற்ற வாநளி படருஞ் சோலைவாய்க்
கற்ற மங்கையர் கைதொட் டாட்டத்தோ
மற்ற மாதரா ரூச லாடியாங்
குற்ற மைந்தரா யூச லாட்டுவார். (௪௩)

மாட மேலிவர் மங்கை மார்கைசற்
றோட நீட்டிமே னுற்ற கற்பகப்
பாட வாங்கனி பறிப்ப ரிம்மையே
பீட வாமறு மையும்பெற் றாரரோ. (௪௪)

பலவின் மாடமேற் பனிக்கை நீர்நிறை
தலமெ னுகபச் சுரபி தாவிடு
மூலவு தேவுரு வுற்ற போதினு
மலம றுதெனின் மயக்கந் தீருமோ. (சுரு)

கொடிய மாடமேற் கூடு வார்திற
நெடிய வானவர் நிரம்ப நோக்கியுட்
படிய வோரமுக் காறு பற்றலா
லடிய தாமக வாக்க நீத்தனர். (சுக)

முகைசெய் கூந்தலார் முறிசெய் கைகளாற்
றகைசெய் பந்தெடுத் தறைத ரக்கொங்கை
யுகைசெய் தொண்டுகி னோக்கு மோரிடர்
பகைசெய் வார்க்குறித் பார்ப்பு றுரெவர். (சுஎ)

தைய லார்முக்கு சரிகொ லோவெனுக்
கைய தாமதி காலை மைந்தர்கள்
செய்ய மாடமேற் சேர்ப்பக் கண்ணிடு
மைய ளாவலான் மறுவென் றுயதே. (சுஅ)

கோல மாதரைக் கூடும் வாஞ்சையுட்
கோல மைந்தர்மேன் மாடங் கூடவைங்
கோலன் றேர்மிசைக் கொண்டு மென்றதக்
கோல னுய்ப்புகுங் குறுங்க ணூடரோ. (சுகூ)

இலக்க மாயபா சவலி டிக்கும்போ
துலக்கை தாக்கலா லுதிர்வ மாங்கனி
நலக்க வொன்றனை நண்ணுங் காலையொன்
றலக்க ணிங்குற வடைத லுண்டரோ. (௭0)

வஞ்சி யங்கலார் மாட மீமிசைக்
கஞ்சி யார்துகில் கமழ வூட்டிய
வஞ்செ ழும்புகை யடைத லாலன்றே
மஞ்சு வான்புகை வண்ண மென்பரால். (௭க)

முல்லை மாதரார் மூலைக்குத் தோற்றன்றே
வொல்லை யம்புய முறுக்கு டைந்திடும்
புல்லு றுதபங் கம்பு ரிந்திடிற்
சொல்லு மீதொன்றே பல்ல துன்னுமே (௭உ)

பிணைய னார்முலை பிறங்கு கைத்தழீஇ
யிணையு மைந்தர்த மார்ப மூழ்துவ
துணையி லாத்தமிழ் முனிகை தொட்டபோ
திணையி லாவவா யழுந்த லென்னவே. (௩௩)

துங்க மைந்தர்தஞ் சிகையிற் றோகைமார்
பங்க யப்பதச் சுவடு பாய்தலா
லங்க நான்மறை யாய்ந்த வேதியர்
தங்கண் மைந்தரெச் சாதி யாருமே. (௩௪)

ஆவி வாயினி தாடு மாதரா
ரேவி னும்விழி யிருளை மாறெனத்
தூவி யோதிமந் தொடர்ந்து செல்லுவா
ரோவில் பேதைமை யொழிக்க வல்லரோ. (௩௫)

மங்கை மாதரார் வாரி சம்பொருஉஞ்
செங்கை மேவுவ கிள்ளை தேருங்கா
லங்கை யாவடி வந்த லார்தடங்
கொங்கை யுந்தக மேவல் கூடுமே (௩௬)

நீடு தோள்வலி நிலைஇய மைந்தர்கள்
பாடு மாதரைப் பரிந்து வேட்டொளி
யோடு பேர்மறு கூடு லாவுத
னாடு மிந்திர னறுமொ றுப்பனால் (௩௭)

காவ ணத்திடைக் கதலி யாத்துமென்
பூவ ணத்தொடை புனைதல் செய்தபே
ராவ ணத்தெழில் கேட்ட டைந்தவர்
மாவ ணத்தவா னுலகம் வஞ்சியார். (௩௮)

மண்டு தீஞ்சுவை வாய்ந்த சிற்றுணாக்
கண்டு நேருறுக் கனியு மற்றவுங்
கொண்டு போமெனக் கூறுந்தேமமு
துண்டு ளார்க்கும்வா யூற்றுண் டாக்குமே.

நயம மைந்தசொன் னங்கை மார்முலை
யியலு மைந்தர்க ளியாவ ராயினும்
புயநெ ருங்குறப் புரியும் வீதிக்கு
நியம மென்றபேர் நீதி யாங்கொலோ. (௪0)

கடையு றப்படா வளங்க ளிந்நிலை
மிடைக ளர்ச்சிறப் பென்னு மாத்தனை
மடையும் விண்ணுல கதனை யென்றுபு
மிடையு முண்ணகர் வளமும் விள்ளுவாம். (௬௧)

அகநகர். வேறு.

அ க ழி.

போழ்ந்தவண் குசைநுனி யனைய புந்தியர்
தாழ்ந்தபல் கலைகளு முணர்ந்த சான்றவர்
வீழ்ந்தநண் புலமையர் மிளிர்க ருத்தினு
மாழ்ந்தது சூழ்ந்தபே ரகழி யென்பவே. (௬௨)

எண்ணிய டடலெலா மிந்த வண்ணமாப்
பண்ணிய வெனவிதிக் குணர்த்தும் பான்மைகொண்
டண்ணிய சிவபிரா னமைத்த வாழியா
நண்ணிய பெருந்துறை நகர்க்கி டங்கரோ. (௬௩)

வாரியு ளொளித்தமை நாகம் வண்டமி
ழாரியன் குடிக்குந்தெவ் வறியு மேயென்று
பேரிய லரணமாப் பிறங்கிப் பாம்புரி
சேரிய நினைக்குமேற் செப்ப லின்னுமென். (௬௪)

ஒருகடல் கண்டமேற் றுள்ள வாரியுந்
திருநகர்ச் சேர்த்தறி வாஞ்சை தீர்ந்தனஞ்
சுருதிசொ லிந்நகர் சூழ்கி டங்கெனுங்
கருதருங் கடலினைக் கண்ட பின்னரே. (௬௫)

வெளியுற மணவர லிந்த மாதிலீ
களிகரா முள்ளுறக் காணும் பேருதெ
தெளிநல மகம்புறந் தீய தேற்றமை
யளிநலப் புத்தர்மா றுய மைந்ததே. (௬௬)

ம தி ல்.

மும்மதில் வானவர் முனிய மேயதா
லம்மதி லிறைவனு லழலப் பட்டவென்
றிம்மதின் மற்றவர் விரும்ப வெய்தியற்
றெம்மதி லிதற்கிணை யென்னக் காக்குமே (௬௭)

கொடியது கொடியது கோனை நாஞ்சில்சா
னெடியதென் பாரகெக் கன்று நீள்பொற்றிக்
கடியதா லொருபொருள் கண்ணிற் கண்டன
முடியதொன் றனைவிழி முகர்ந்த தில்லையால். (௬௮)

உயர்மதி துயர்மதி லென்று னாக்குமிப்
பெயர்மதி லிதுமற்றைப் பெரும திற்கெலா
மூயர்மதி ரூன்விதி யண்டத் தூச்சியாம்
பெயரதி துயர்திறம் பெற்ற தில்லையால் (௬௯)

பொறியடக் குபுபகைப் புலங்க டந்தகஞ்
செறிதர வுயர்பொருட் சிவமி யாவரு
மறிதர வுயர்தலா லனைய மாமதி
னெறியமை முனிவரர் நிலைமை காட்டுமே. (௭௦)

கதிர்மதி முதலவாக் கரையுங் கோளெலா
மதிர்வற வழங்குதற் காய கொச்சிவாய்
முதிர்பகைக் கஞ்சபு மூடு ரூப்புத
வுதிர்தலி லாத்திறத் துற்ற வென்றுமே. (௭௧)

பரத்தையர்வீதி.

இராப்பக லெனுநிணை விழைச்சி யற்றலால்
விராய்த்தழு வுநரிவ ரெனுத மெய்ம்மையா
லராப்படக் கடிதடக் கணிகை யர்கலா
ரொராப்பெருஞ் சேரிமற் றம்பூர் சேரியே. (௭௨)

அடிநிலங் கூடில வணியல் வாடில
நெடியகண் ணுடில நிற்ப வோவியங்
கடிமனைச் சுவர்ப்புறங் கணிகை யர்கலார்
படிநல நகைஇச்சுரர் படர்க்த தொக்குமே. (௭௩)

நகைக்குறி நகக்குறி நயந்த ணைத்திடல்
வகைப்பய னறுசுவை யமுத மார்திட
றகைதிற முருதுகை தட்ட லாதிய
முகைத்தவோ வியக்தெரி மாண்பின் முற்றுவ. (௭௪)

பாடலாற் சிலர்பொருள் கருவி யம்பரின்
ருடலாற் சிலர்பொரு ளலர்வி னோதத்தி
னீடலாற் சிலர்பொரு ணேயம் போல்விராய்க்
கூடலாற் சிலர்பொருள் கொள்ளை கொள்வரே. (௭௫)

முன்னவர் கலப்பினு மூரி நீர்ப்புவி
மன்னவர் கலப்பினும் வணிகர் கூடினும்
பின்னவர் கலப்பினும் பெட்டின் பாக்குவா
ரென்னவ ருக்குமின் பாக்கு மீசன்போல். (௭௬)

முன்னிய வெச்சில்யா வருமு கத்தலால்
வன்னியும் பொதுமட வாரு மொத்தன
ரென்னினு மிருவரு மீயும் வெப்பத்தான்
றன்னிடி னீங்கிடிற் சுடுதல் வேற்றுமை. (எஎ)

கணிகையர் பொதுநலங் கருத்தி லெள்ளுநர்
தணிவறி தாகிய தருமமெள்ளுவா
ரணிதரு மூருணி யறலை யெள்ளுவர்
பிணிதவிர் முத்தியின் பழமுட் பேணலார். (எஅ)

வெள்ளணி செவ்வணி மேவி மற்றவ
ரொள்ளணி வீதிவா யுலாவு மங்கையர்
தள்ளரு மலர்பெருந் தவத்திற் பூந்தளி
விள்ளரு மங்கையர் விராய தொக்குமே. (எகூ)

கலையழுக் குறுமையாற் சிவிறி கைவிடா
நிலைதிறத் துடம்பின்வே ரெழாத நீர்மையான்
மலைமலர் வாடுறா வண்ணஞ் சூடலா
லலைகடற் புவியகத் தரம்பை மார்களே. (அ0)

இப்புவி யரம்பைய ரென்ற தென்னெனிற்
றப்பில்பூ சுரரெனு மொழியுந் தப்பதா
மொப்பரும் பரத்தைய ருறையுஞ் சேரியி
னப்பெரு வளந்தெரிந் தளகை தோற்றதே. (அக)

### வேளாளர்வீதி.

கரைபொரு நதிகளுட் கங்கை மேலதவ்
வுரைபெறு நதிகுலத் துதித்த வேதவாற்
றரைபுகழ் தூய்மைமுன் னுய சார்ந்தசீர்
வரைவில்வே ளாளர்தந் தெருக்கள் மல்குவ. (அஉ)

தினகரன் முனமிருள் செறிவ தாயினு
முனகரு ணல்லருள் முயங்கு மாயினு
மனகமெய்ச் சுகுணவே ளாண்மை மாக்கட
மினமனை யிடைப்பசி யில்லை யில்லையே. (அங)

அருமருந் தனையவே ளாள ரோம்புவர்
வருவிருந் திலரெனில் வாட்டந் தீர்வரோ
கருமுகில் வேண்டிய காலம் பெய்வதை
யொருவுறி னுய்குவ துலக மெங்ஙனம். (அச)

மின்னிய புலமையர் மேவி னுடொறு
மன்னிய பொருட்கவி மாலை சூடுவர்
துன்னிய வுற்பலத் தொடையின் வாட்டமுள்
ளுன்னியத் திறத்தர்மற் றெதையு வப்பரே. (அ௫)

கொடையொடு முகமனுங் குறிக்கொள் சீலநன்
னடையொடு ஞானமு நக்க வுற்பலத்
தொடையொடு செந்தமிழ்த் தொடையு நாடொறு
முடையவர் தெருவள முரைக்க முற்றுமே. (அ௬)

வைசியர்வீதி.

கணிதமில் வயிரமுங் கமல ராகமு
மணிமணித் தரளமு மவிர்கோ மேதமுந்
தணிவில்வித் துருமமுந் தாம்ப ரம்பலால்
வணிகர்த நெடுந்தெரு வலன விந்ததேம். (அ௭)

எதுபுகூஉ வினவினு மினஞ்சுட் டாமலே
யதுதர வல்லவ ரிம்மி யாயினு
முதுகணக் கிடையொழி யாமு யற்சியர்
கதுவுதல் விடுதலுட் கணித்துச் செய்வரால். (அ௮)

கொள்ளுநாட் கொள்ளலுங் கொண்ட யாவையுந்
தள்ளுநாட் டள்ளலுந் தெரிந்த தன்மைய
ரள்ளுநா ளுவப்பதி னவைதம் பானின்றும்
விள்ளுநா ளுவப்பது மிக்க தாமன்றே. (அ௯)

நிறையுயிர் புணர்தர முன்ன நின்றதாங்
குறையுயி ரொழிதரல் குறித்துக் கற்பவ
ருறைதரு நந்தொழி லொத்த தாமென
மறைதலி லாப்பெரு மகிழ்ச்சி பூப்பரே. (௯௰)

ஒருபுணர்க் கிரண்டுமூன் றுற்ற காலையுங்
கருதுறு தோன்றலி லுவத்தல் கைக்கொள்வா
ரருநிதிக் கிழவனி னுதுந் தாளினுற்
றிருவெனு மவர்தெருச் செப்ப முற்றுமோ. (௯௧)

அரசர்வீதி.

மருவல ரொடுசமர் வலியச் செய்தவர்
திருவுறக் கவர்ந்துவிண் செல்ல வுய்த்துமண்
ணொருசில ரைத்தடித் தாண்டின் புய்த்திடும்
பெருமனிற் பொலிபவர் தெருப்பி றங்குவ. (௯௨)

மகபதி யமர்த்தகான் மந்றிம் மன்னர்பாற்
றகவடைக் கலம்புக றகவெ ளுச்சில
நகமடைந் தெனப்பொலிந் துயர்நன் மாளிகை
யிகவரு மன்னர்த மியல்பென் சொல்லுகேன். (கூ௩)

வண்டெதாட் டிமுனம் வண்டு தொட்டிடா
மண்டுதார் தரியலர் மார்பிற் சூட்டவான்
கண்டுநேர் மொழியவர் கண்டு கொள்வரே
லண்டமெற் றவர்திற லறையப் போவதோ. (கூ௪)

அரியுகைப் பவளைத்த மம்பு யங்கொடு
கரியுகைத் திடுதலுங் கலினம் பூண்டவாம்
பரியுகைத் திடுதலு முருளை பாய்பரிக்
கிரியுகைத் திடுதலும் வல்லர் கேடிலார். (கூ௫)

ஆடலும் பாடலு மனுப வித்திரா
வூடலுங் கூடலு மொருங்கு துய்த்துநைந்
தோடலும் வாடலு முருப்ப கைத்திற
நாடலு முளார்திற நவில முற்றுமோ. (கூ௬)

மறையவர்வீதி.

மிகுமறை யங்கமோ டுணர்ந்த மேன்மையாற்
றகுமறைக் கொடியொரு கையிற் றாங்கினோர்
நகுமறைப் பொருளுற நயந்த சிந்தையார்
தொகுமறை யவர்தெருச் சொல்ல நின்றதே. (கூ௭)

தவமறை யவர்மகச் சாலை வாலெரீஇக்
குவலயம் பயிலுமா கூட்டி யூட்டலா
லிவர்தரு பெரும்புக ழிந்தி ராதிய
ரவரையும் பூசுர ராக்கி னாரரோ. (கூ௮)

முதல்வழி சார்பெனு மூன்று நூல்களு
மிதமுறத் தங்களெஞ் சிருக்கு மென்பதைச்
சுதமின்முந் நூல்களுந் தோயப் பூணலாற்
கதமறக் காட்டுவர் கரிசின் முன்னவர். (கூகூ)

விற்படை வாட்படை யாதி வேறுள
கொற்படை சுமப்பவ ரியாருங் கும்பிடப்
பொற்படை மந்திர மென்று போற்றிடுஞ்
சொற்படை சுமந்தனர் துன்ன லாரற. (௪00)

அதிதியர் பசித்தழ லவித்துக் கற்பெனும்
பொதிதழல் வளர்த்திடும் பொன்னங் கொம்பனார்
மதிநுதற் பார்ப்பன மடந்தை மார்செறி
துதிமறை யவர்தெருச் சொல்லத் தீருமே. (கoக)

### ஆதிசைவர் மாளிகைகள்.

மறையுட னாகம முணர்ந்த மாட்சியர்
பொறையொடா னமர்த்தப ரார்த்தம் போற்றுவா
ரறைபெரும் புகழ்மிகு மாதி சைவர்வாழ்
நிறைவள மாளிகை நிலாமொர் சாரெலாம். (கo௨)

### வைதிகசந்நியாசிகள் மடங்கள்.

மறைமுடிப் பொருளுணர்ந் தவர்ம யக்கமோ
ரிறையுமில் லவர்பகை யெறிம ழுப்பொரூஉங்
குறைவிறன் டியாத்தவெண் கோவ ணத்தின
ருறைதிரு மடங்களு முள்ள வாங்கொர்சார். (கoங)

### சைவாசாரியர்களிருக்கை.

மேவரும் பக்குவம் விரும்பி நோக்குபு
மூவகைத் தீக்கையு முறையி னாற்றிமுன்
னேவருஞ் சரியைமுன் னியங்க வுய்த்துயர்
பாவனஞ் செய்பவ ரிருக்கை யும்பல. (கoச)

### சைவசந்நியாசிகள்மடங்கள்.

பதிபசு பாசத்தின் பகுப்பு ணர்ந்தற
முதிர்தர வுருவமுன் மூன்று முற்றரு
ளொதிருறக் கண்டுமே லின்ப மார்சைவ
மதிமுனி வரருறை மடங்க ளும்பல. (கoரு)

### கல்விச்சாலையும் பிறவும்.

இலக்கண விலக்கிய மெலாமு ணர்த்துவார்
கலக்கமில் கழகமுங் கவிமுன் னூல்வரு
முலக்கரும் வாதஞ்செய் துறையி டங்களும்
விலக்கரு மற்றவு மேய வோர்புறம். (கoசு)

### அன்னசத்திரம்.

மூரிவரு முல்லைவெண் முகைய மூரலுந்
தெரிசெழும் பொன்னிறப் பருப்புந் தீஞ்சுவை
யிரிதராக் கருனையும் பாகு மேனவும்
பரிவொடூ மூட்டுசத் திரமும் பல்லவே. (கoள)

### தண்ணீர்ப்பந்தர்.

தினகர னெழுமுனீர் தெவ்வி மோரளா
யினநிறை தோறுமுப் பிலிகு சங்கலந்
தினலுற வாக்கியோர் கனியு மொப்பகல்
கனபுனற் பந்தரு மனந்த முண்டரோ. (கoஅ)

### திருக்கோயில்.

தூயபல் வளப்பெருந் துறைசெம் பொற்றக
டாயது பற்பன்மா ளிகைய தன்கணே
மேயபன் மணிநடு வுறவி ளங்கிடு
நாயக மாமணி நம்பி ரான்றளி. (கoகூ)

### மாணிக்கவாசகசுவாமிகள் மண்டபம்.

சிகரமுன் மேயதோர் தெய்வ மண்டபங்
ககனமார் விச்சுவ கன்ம னேயடைந்
தகலறப் புரிந்ததென் றோத லாமலா
லகனிலத் தாக்குந ரரியர் போலுமே. (ககo)

கோடிய கொடுங்கையுங் குலவு தூண்டொறு
நீடிய விம்பமு நிகரி னுண்டொழில்
கூடிய யாவுமுட் குறித்து நோக்கினு
மாடிய சேடனு மறைய வல்லனோ. (ககக)

### திருக்கோபுரம்.

யானள வுரைப்பதற் கெளிய தாகுமோ
வானள வுயர்ந்தபொன் மணிசெய் கோபுர
மீனள வோங்குபு மேலும் போங்கொடிக்
கானள வதேநெடுங் ககனந் தாங்குமால். (ககஉ)

### திருமதில்.

மதில்கடந் தவனென வயங்கு மையனிம்
மதில்கட வானென வழங்க வோங்குபொன்
மதில்பல கதிரவன் மதிமுற் கோள்கணம்
மதிலென நாடொறும் வைக வைகுமே. (ககங)

### குதிரைச்சேவகர்மண்டபம்.

ஒருபரிச் சேவக னாய வுத்தமன்
மருவுமற் புதப்பெரு மணிசெய் மண்டபந்
திருவமிக் கோங்குறு தெய்வ காட்டினு
மருமைய தெனிற்பிறி தறைவ தென்னையே. (ககச)

### குருந்தவிருட்சம்.

மறைமுத லாகமம் புராணம் வங்கவ
முறைதரு புராணமந் திரங்க ளொண்கிளை
யறையிலே யரும்பலர் வாசத் தேனர்தாக்
குறைதவிர் ஞானமாக் குருந்த நிற்குமே. (கசுகூ)

### குருந்தமூலச்சபை.

செழுமலர்க் குருந்தமேற் கவித்தல் செய்திடப்
பழுதில்பொற் றகடுறப் பரப்பு மோர்சபை
யெழுதரு மறைமுடிக் கெட்டு ருவொரு
முழுமுத லுருவென முன்ன மேவுமே. (சுகக)

### சிவயோகாம்பிகைகோயில்.

ஒள்ளிய வருந்தவ யோக நாயகி
வள்ளிய வருவென வயங்கு மோர்தளித்
தெள்ளிய பொன்மயச் சிகர மாதிய
கள்ளிய கவர்தரு நயனம் யாவையும். (சுகஎ)

### மாணிக்கவாசகசுவாமிகள்கோயில்.

மன்னிய மாணிக்க வாச கப்பிரான்
றன்னிய பெருந்தளித் தொக்க பன்மணி
மின்னிய விளங்குதல் விழைந்து நோக்கிமிக்
குன்னிய கதிர்வெதுப் புற்றி யங்குமால். (சுகஅ)

### படைகற்புகை.

ஆயபொற் படைகளின் றூவி மேலெழூஉ
வாயிலின் வெளிப்படல் வழுதி முன்னைநா
ளேயகொண் டலைச்சிறை யிட்டு விட்டிடத்
தாயது செலுமொரு தன்மை தேற்றுமே. (சுகசு)

### ஒலிவகை.

மகதியாழ் முனிவரன் வடித்த வீணையி
னிகரிலா வொலிமறை நிகழ்த்து பேரொலி
குறையிலாத் தமிழ்மறை குலாய பேரொலி
முறையறு காலமு முழங்கு கின்றவே. (சுஉ0)

இன்னவாம் பெருவள மியைந்த கோயிலு
ளுன்னரும் பெருந்தவ யோக மாதெனு
மன்னமென் னடையொடு மான்ம நாயகர்
கன்னலத் தருணெறி நடாத்தி வைகுவார். (சுஉக)

மறுவறு பெருந்துறை வளமெ லாஞ்சொல
வுறுநசை யொருவிதத் தோதித் தீர்த்தன
மறுபகை யுந்தவிர்ந் தையர் வாழ்தரப்
பெறுவன நைமிச வளமும் பேசுவாம். (கஉஉ)

திருநகரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் உ௲ம்.

---

# நைமிசப்படலம்.

மந்தி ரிப்பவர் மனத்துளாய் மற்றவ ருறுகன்
மந்தி ரிப்பவ ரின்னும்வான் பேரரு ணனிசு
மந்தி ரிப்பவ ராகிந்தத் துய்ப்பவர் வழுதி
மந்தி ரிப்பவ ரவரெமைப் புரப்பவர் மன்றே. (க)

மந்தி யாயிர கோடிவீழ் பசுந்துழாய் மார்ப
னுந்தி யாகிய தாமரை முளைத்தெழு மொருவன்
முந்தி யாரையும் படைத்தநா ளிடைத்தவா முயற்சிப்
புந்தி யாதிய விடங்களிற் றோன்றிய புனிதர். (உ)

அனையர் தம்வழித் தோன்றிய பற்பல வறிஞர்
நினைய வல்லமற் றவரரு ணிரம்பிய நெறிசால்
வினையம் வல்லவ ராயபன் முனிவரு மேவித்
துனைய வோரிடைக் குழுமியுள் ளத்திது சூழ்வார். (ங)

வந்தி டத்துமை மணாளன்மிக் காரருள் வழங்க
வெந்தி டத்துநா மிருந்தருந் தவஞ்செய வியலு
மந்தி டத்திடை யூறுறா தென்றெடுத் தறைய
நந்தி டத்தவன் மதலையை நண்ணுவா மென்று. (ச)

தண்ணந் தாமரைக் கிழவனை யடைந்தனர் தாழ்ந்தார்
வண்ணம் பொன்னினும் வயங்குவா யருந்தவம் வயக்க
வெண்ண மெங்களுக் கதற்கியை தேமிதென் றிசைப்பாய்
வெண்ணந் தேர்ந்தியோ னறிதரா னருளொடு விராவி. (ரு)

என்ற புண்ணிய முனிவர்சொ லஞ்செவி யேற்று
நன்றெ னின்கொடி யுயர்த்தியோ னுள்ளத்து நாடி
முன்ற யங்கொரு தருப்பையை நேமியா முடித்து
சென்ற லங்கிட விவர்க்கிடங் காட்டெனச் செப்பி. (சு)

உருட்டி விட்டன னீதரு ளாழிதங் கிடமே
தெருட்டி நின்றநீர் தவஞ்செயு மிடமெனச் செப்ப
வருட்டி றங்குறித் தஞ்சலி செய்தன ரவனி
வருட்டி யேகுமவ் வளைவழி மாதவர் சென்றார். (௭)

சென்ற நேமிவெண் டிரையெறி கங்கையந் தீரத்
தொன்ற மேவிய வுதக்குறு மொருவனந் துற்று
நன்ற மைந்திடத் தங்கிய தாதலா னாளும்
வென்ற வவ்வன நைமிச நாமமே வியதால். (௮)

மன்னு மாதவர் தவத்தினுக் கூறுவா ளவுணர்
துன்னு மாசெயி னவர்தலை துணித்திடற் பொருட்டு
மின்னு மாமணி மார்பினான் விடுத்தசக் கரம்போ
லுன்னு நான்முகன் விடுத்தசக் கரமவ ணுறையும். (௯)

அகைக்கும் வெம்பொறி யாகிய பகையைந்து மடக்கி
நகைக்கு முண்மையா கியபெருஞ் செய்யகோ னடத்தி
முகைக்கு மாதவ வரசவ ணமர்ந்துமூ வுலகு
முகைக்கு நேமியொத் ததுமல ரோனுய்த்த நேமி. (௧௦)

வான யாறுதோய் தலின்மதி தவழ்தலின் மதலைக்
கான மேவலின் வில்லுவங் கமழ்தலிற் கண்ணொன்
றான நெற்றியான் சடாடவி நைமிச வடவி
யேன மான்மகன் காண்பதொன் றெய்தில தொன்றே. (௧௧)

இருக்கு மேவிய வலக்கைமா முனிவர்வெண் றினைவைத்
தருக்கு மேயமா றொருபுறத் துரிஞுபு தவிர்க்க
மருக்கு லாமல ரிடக்கையா லவரதை வருட
விருக்கு மோருரு வெய்தினோர் திடத்தழா லேய்க்கும். (௧௨)

உரைக்குஞ் சீதள மவ்வன முறப்பரப் புதலால்
விரைக்குந் தார்முடி வானவ ரொடுதின மிளிர்தா
மரைக்கு நாயகன் சருக்கொள மேவுவன் குறுத
கிரைக்கு நாயக னேயெனத் தோன்றுவ னிரம்ப. (௧௩)

கனிசெய் மாதவப் பெருமைய ரார்தழ லுப்பட்
கனிவி னுள்ளல வமர்ந்துளங் கலங்குறு திருத்தில்
பனிய டர்ப்பவன் வெப்பமுட் புகாவகை பாற்றித்
தனிவ யக்குமவ் வனந்தரு தண்மையா லன்றே. (௧௪)

பெருகு மாதவர் புரிமக குண்டத்துப் பெருந்தீ
யருகு நீர்கவைக் கொழுந்தெழீஇச் சுடுதலி னந்தோ
வுருகு நம்முல கெனச்சுர ருள்ளஞ்சி யன்றோ
கருது மாமுகில் வானயா றடியுறக் கண்டார். (கசு)

யோக மாதவர் பலர்சூழீஇ னிமுயன் றுஞற்றும்
யாக சாலையி னெழும்புகை யிடைப்படிந் தன்றோ
மேக சாலங்கள் கறுத்தன மற்றவை விராவ
வாக மெங்கணுங் கறுத்ததா லுவர்க்கட லம்மா. (கரு)

நாத மேலவ னடிக்கலப் புறுவது நயந்தா
ரோத மேவுறு ரடிசிலெப் போதுநீத் திருத்தல்
போத வாம்பலர் விளாவுயர் நாவல்பூங் கதலி
சூத மாதிய தருங்கனிச் சுவையுணர்ந் தன்றே. (கஎ)

கண்ட பேர்சுத ரிசனமா னமக்கெனக் கரையத்
தண்ட வாத்தளி ரிலைமலர் காய்கனி தழையக்
கொண்ட மேன்மைய தஃதுணர்ந் தேகுல மலர்மே
லண்ட னேமிதன் பெயரியை யவட்டவிர்ந் தன்றே. (கஅ)

ஒளிக்கு மாறொரு முனிவரன் வையவு முறந்து
களிக்குந் தானவ ரலைக்கவு மொருவன்கைக் கவர்ந்து
தெளிக்கு மாநில நிறுவவும் படாத்திரு வனத்தை
யளிக்கும் வன்மையி லாதயாம் புகழுதற் காமோ. (கக)

இன்ன நைமிசப் பெருவன வாழ்க்கைய ரின்னு
மன்ன மேனமு முணர்தரா னலங்குவெண் ணீறும்
பன்ன வாம்புகழ்க் கண்மணி மாலையும் பரிப்பார்
சொன்ன வைந்தெழுத் தோதுவ தலறற்பிற சொல்லார். (உ௦)

சதம கத்திறை வாழ்பத மறுஞ்சத தளஞ்சா
ரிதம லர்ப்பொருட் டிறைபதங் கொடும்பகை யெறியுங்
கதமி குத்தசக் கரத்தவன் பதமெலாம் வமன
பதமெ னக்கருத் துறநினைப் பவரருட் பவரே. (உக)

இன்ப மெய்தினு மெதிர்மறை யெய்தினு நமக்கு
முன்ப வைமைத்தன வீமுட லூழென முன்னும்
வன்ப மைந்தவர் வரைபொரு குணத்தவர் வயங்கு
நன்ப யச்சுர தேனுவிற் பயன்படு நலத்தார். (உஉ)

கொடியகா லெழுஉக் குலவரை யொன்றன்மே லொன்று
படிய வீழ்தர வெறியினும் பரவையே யெழுந்து
முடிய மூடினும் பூதமைந் தடுக்கிய முறைமை
மடிய மேவினுந் தந்நிலை மடிதரா வலியார். (௨௩)

மன்னு சங்கரன் மான்மியப் புகழ்ச்சிர வணத்தார்
பன்னு மற்றவ னருட்குறி பூசிக்கும் பண்பார்
துன்னு மாநிக மாகம வுணர்ச்சியிற் றேலார்
பின்னு மிப்பவஞ் சத்தியல் பொழித்துயர் பெரியார். (௨௪)

மாத வத்துயர் சவுனக னகத்தியன் வசிட்டன்
கோத மன்சுதீக் கண்ணன்போ தாயனன் குசுரு
காதல் விந்துசாண் டில்லியன் சருச்சரன் கபிலன்
சாத நீர்புகழ் விச்சுவா மித்திரன் சங்கன். (௨௫)

ஆணி மாண்டவி யன்கருக் கன்னர பத்தன்
பாணி னிப்பெய ரான்பரா சரன்பயி லவனே
கோணி ரண்டோ லினன்பிர சண்டன்குச் சகனே
மாணி ரப்பியன் புருசுண்டி புலத்தியன் வச்சன். (௨௬)

கிருதன் பார்க்கவன் றிரணனு மாக்கினி கிரீசன்
றிருதன் சம்புச தானந்தன் சனகன்மா தேவன்
பிருகு ரோமசன் சனந்தன்மா தேசனே பிருங்கி
வருப ரத்துவா சன்புல கன்வாம தேவன். (௨௭)

அத்தி கூசுமாண் டன்றத்தாத் திரேயனங் கிரசு
முத்தி சால்சனற் குமாரன்ரு லப்பியன் முற்க
னத்தி ரிப்பெய ரான்சுனப் புச்சனே யசிதன்
சித்தி சாலக மருடணன் புகழ்ச்சுனச் சேபன். (௨௮)

இலகி தன்வசு காத்தியா யனனிரும் பகவன்
வலசு கன்றதீ சிப்பெய ராளிமார்க் கண்ட
னலச ஞதன்கண் ணுவன்விபண் டகனகு சாதன்
மலமி லாபத்தம் பன்கிரி சரன்றுரு வாசன். (௨௯)

கற்கி சந்திர சூடன்கா சிபனருட் காணன்
முற்க லன்சம தக்கினி சரபங்கன் முழங்கு
நற்க லைச்சிருங் கன்சுனன் புசுண்டனு ரதன்சீ
ரொற்க மில்சிலா தன்றூம பானனென் சுதன்மன். (௩௦)

பதுமன் சிருப மணியன்சா தாதபன் பரவு
மூதபு லத்தசா பாலிபப் புருமொழி சுமந்து
சதுமு கன்சொலுக் கிரவீரி யன்றவு மியனே
விதுமு டிக்கன்பு சால்கவுண் டின்னிய மேலோன். (௩௧)

அரித கன்சவு ப்ரிபருப் பதனரு ளமைந்து
பிரிய மார்தரு மாசுவி லாயனன் பிறங்கி
விரியுஞ் சிர்ச்சுன கன்குணக் காலவன் மேன்மை
திரித ராததே வலன்றிர ணவிந்துமுற் செய்யோர். (௩௨)

சிறந்த வோரிடைக் குழீஇயினர் திகழிம வரைத்தோன்
றறந்த வாக்தொடி பங்கின ருளத்தருள் கூர
வுறந்த வாறிரண் டாண்டள வுஞற்றுமோ ரியாக
மறந்த பப்புரி வதற்குபக் கிரமித்தார் மன்னோ. (௩௩)

விதிய மைந்தபுண் ணியமகச் சாலையின் மிக்க
துதிய மைந்தபன் னியர்மகார் துவன்றுமா ணாக்க
ரதிவி ருப்பினிற் றத்தமக் கியல்பணி யாற்ற
மதியின் மிக்கவர் மனுப்புகன் றழல்வளர்த் திடுகால். (௩௪)

முன்னு மாதவர் தங்குழாத் திற்கொரு முகமாப்
பன்னு பேரருட் சவுனக முனிமுகம் பாரா
மன்னு மாநில வனைப்பினி லளவின்மான் மியத்த
வின்னு மாலய னுணர்தரான் றளிபல வென்ப. (௩௫)

அனைய மாத்தளி யருவுரு வுபயமென் றறையு
மினைய மூன்றனு ளுருவமு முபயமு மெய்திப்
புனைய நன்றமை தலம்பல வுள்ளன புந்தி
நினைய போக்கியுங் கேட்டிமியா நிரம்பின மூவகை. (௩௬)

ஆதி யோதிய வருபமாய்ப் பரசிவ மமருஞ்
சோதி யார்தல மின்றள வுணர்ந்திலந் தோன்றுங்
கோதி லாயஃ தளதில தென்பதுங் கூறியே
மோதி னின்னல துணர்த்திடு வார்பிற ருளரோ. (௩௭)

என்று கூறலுஞ் சவுனக னப்பொழு தெண்ணி
நன்று கூறினீர் நானுமோர் தருகதை யுடையே
னின்று தேற்றுவார் சூதனை யன்றிமற் றியாரே
யன்று நீரவ னுற்றெளி வாமென வறைய. (௩௮)

அந்த வேலையீ ரொன்பது புராணமு மளவாச்
சந்த வோருருக் கொண்டுவெண் ணீற்றொளி தயங்கப்
பந்த மேவிய கண்மணி மாலிகை பரித்து
நந்த வைந்தெழுத் துளம்பதி தரநடந் தென்ன. (நக)

இரவின் முன்செலல் பகலெனிற் பின்செல வியைந்தார்
வரவு போக்கிலா னமக்கிவ னேயென மதித்தார்
புரவு பூண்டவன் வாழ்க்கையோர் பொருளெனப் போற்றார்
கரவு தீர்ந்தமா ணாக்கர்தாந் தொடருபு கலப்ப. (சo)

அருள மைந்திடு நாட்டமும் விகசித மாய
பொருள மைந்திடு வதனமும் புண்ணியம் பொலிந்து
தெருள மைந்திடு சிந்தையும் வடிவமுஞ் சிறப்ப
மருள மைந்திடாச் சூதமா முனிவரன் வந்தான். (சக)

வந்த சூதனை மழைவர வெதிர்கொளு மயிலிற்
சந்த மேயபொன் வைப்பினை யெதிர்கொளுந் தணியாப்
பந்த மார்வறி ஞனிற்குரு வெதிர்கொளும் பழநா
ளந்த வோர்நரி லருந்தவ ரெதிர்கொள நயந்தார். (சஉ)

இருக்கை நின்றெழீஇ யாடினர் பாடின ரெதிர்சென
றிருக்கை யோதினர் பணிந்தன ரியம்பினர் முகமன்
றிருக்கை நீத்தவ ரழைத்துவந் தாதனஞ் சேர்த்துத்
திருக்கை யாலருக் கியமுதற் செய்வன செய்தார். (சங)

நின்ற காலையி னீயிசொல் லீறுநே ரிருக்க
வென்ற தோர்ந்திரு மருங்கினு முவப்புட னிருந்தா
ரன்ற வேலையிற் சவுனகன் கைதொழு தறைவா
னன்ற வூமக மொன்றுநாந் தொடங்கின நயப்ப. (சச)

ஆய வேலையெற் பார்த்துறு வரலொலா மமல
நாய னூரரு வாயமர் நற்றல முளதோ
மேய பாரிடை யில்லதோ சொல்லென வினவத்
தூய நிற்கொடு தெரிதர லாமெனச் சொற்றேன். (சரு)

நீயு மப்பொழு தெய்தினை யாமெலா நெடுநா
ளாயு மாதவ மாற்றின மாலென வறிந்தாம்
பாயு மால்விடைப் பகவனே யனையநீ பரிவுற்
றேயு மெங்களுக் கிசைத்திடல் வேண்டுமென் றிரந்தான். (சசு)

உரைவி ளுவிரு செவிக்கணு மமுதமூற் றியது
புரைய வேறலும் புந்தியு ளுவப்புமீப் பொங்க
நரைகொ ளேற்றின னருள்கொலிவ் வினுவென நயந்து
கரையு ளத்துற நெடும்பொழு தெண்ணுபு கண்டு. (சஎ)

இருக ரங்களுங் குவித்தனன் கண்கணீ ரிறைப்ப
மருவு மன்புளந் ததும்பிட வாய்மலர்ந் தருள்வான்
பொருவி லீர்வினு வியதல முளதொன்று புதிதன்
றொருவு றுதுளத் துறுத்துமின் பெருந்துறை யதன்பேர். (சஅ)

இந்த மாத்தலம் வேதவே தாந்தங்க ளெல்லா
முந்த வோதிடு மருபமா யமர்ந்துநம் முன்னேன்
பந்த மோக்கமாங் கருளுவ னதன்றிறம் பகர்வா
ரிந்த மாநிலத் தில்லையெப் புவனத்து மிலையால். (சகூ)

அரிய வித்தல மான்மியங் காந்தத்தி னூர்க்குந்
தெரிய மேவிய வுருத்திர சங்கிதை செப்பும்
விரிய வோர்பவு டிகமுமுற் றுரைக்கு மெய்த் தவத்தீர்
பிரிய மேவிய மந்தண மாமது பேசின். (ருo)

முதுபு கழ்த்தவ முனிவிர்காண் முழங்குமிப் புராண
மிதுவ லாக்குநா மொருவர்க்கு முரைத்தில மெனினுஞ்
சதும றைப்பொரு ளுணர்ந்தநுங் களுக்குறச் சாற்று
வதுசி றப்பென மனமெழு மாதலால் வகுப்பாம். (ருக)

பாங்கு மாதவர் பற்பலர் குழீஇத்தவம் பயில
வோங்கு நைமிசச் சிறப்பினிற் சிறிதெடுத் துரைத்தாம்
வீங்கு சீர்கெழு புராணத்தின் மிஎரிர்வர லாற்றை
யீங்கு நாமினி யாவருந் தெரிதர விசைப்பாம். (ருஉ)

நைமிசப்படல முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருருஉ.

---

# புராணவரலாற்றுப்படலம்

நண்ணிய மூகை பேச நல்லரு ளாட்டம் வைத்த
புண்ணிய வாத வூரர் பொன்னடி சென்னி சேர்த்தா
மெண்ணிய விப்பு ராண மொன்றுகொ லெல்லாம் பாடத்
தண்ணிய வாக்கு முன்னு யாவையுந் தருவ ரன்றே. (க)

வெள்ளிய வுருவம் வாய்ந்து வெள்ளிய வருவி போர்த்து
வெள்ளிய மதியந் தாங்கி வெள்ளிய படிக மேனி
வெள்ளிய நீறு பூசி வெள்ளிய பிறைகு டோர்பால்
வெள்ளிய முறுவ லாளோர் வெள்ளிய கைலைக் குன்றில். (உ)

இனிதம ரந்தி வண்ணத் தெம்பிரான் பாதம் போற்றிப்
பனிமதி முகத்த ளாய பருப்பத ராசன் செல்வி
கனிவொடு மருப மாய்நீ கலந்தமர் தலமற் றியாது
நனிநசை யுடையேன் கேட்க நயந்தருள் புரிதி யென்றாள். (ந)

என்றலு முவகை பொங்க விரும்பெருந் துறையென் றோதி
யன்றதன் சிறப்பு முற்று மமைதர வருளிச் செய்தா
னன்றமை யுமையா ளோடு நந்தியெம் பிரானு நோற்கும்
வென்றியம் புலிக்கா லண்ணன் மைந்தனும் விருப்பிற் றேர்ந்தார். (ச)

ஆயமா தவத்து நந்தி யண்ணறன் னடிகள் போற்றும்
தூயசீர்ச் சனற்கு மாறற் குரைத்தன னனைய தோன்றன்
மேயதன் னடிகள் போற்றும் வியாதனுக் குரைத்தா னன்னு
னேயமோ டெனக்கு ரைத்தா னிகழுமோர் வகையா லின்னும். (ரு)

மலைமக ளோடு நந்தி வானவன் கேட்ட காலத்
தலைவற வொருங்கு கேட்ட வடபுலிக் காலோன் மைந்த
னிலையுப மன்னி யப்பேர் நிகழ்மழ முனிவன் சிந்தித்
துலைவிலற் புதத்த ஞயாங் குரைந்தான்பன் முனிவ ரோமே. (சு)

உறைதரு நாளு ளோர்நா ளுயர்சிதம் பரத்திற் றொல்லை
மறைமுத் றந்தை காணப் புரியுமா நடனங் கண்பா
னிறைபெரு வாஞ்சை மேவ நிறைந்தபன் முனிவ ரோடேங்
குறைதவிர் தில்லை மூதூர் குறுகின னெடுஞ்சீ ரன்னான். (எ)

தெரிபெருந் தளியுட் புக்குச் சிவகங்கை தன்னீர் தோய்ந்து
பரிதரு சபையோர் சென்று பயில்பரா மாகந் தக்கூத்
தரியவற் புதத்த தென்னு வமைதரத் தரிசித் தேத்திப்
பிரியமிக் கவன்றன் றந்தை யடிகளும் பேணிப் போற்றி. (அ)

செழுமுனி வரருஞ் சூழத் தெய்வத சபையென் றோதும்
வழுவறு மாயி ரக்கான் மண்டப நாப்ப ணெய்திக்
கொழுமணி பீடத் தேறி யிருந்தனன் குற்றந் தீர்ப்பான்
முழுதுல களந்த மாயோன் முடியடி வைத்த மூர்த்தி. (௯)

இந்தவா றிருக்குந் தெய்வ வியலுப மன்னி யப்போச்
சந்தமா முனிவன் பாத தாமரை வணங்கிப் போற்றி
நந்தவா தரவு பொங்கி நயப்புறக் கனிவு தோன்ற
வந்தண்மா முனிவ ரெல்லா முமைதர வினவ லுற்றார். (௧0)

மருவருங் கயிலா யத்து மருவுநாட் டென்பா லேயோர்
பொருவருஞ் சோதி தோன்றப் பொருக்கென வெழுந்து கும்பிட்
டொருவரும் புளகம் பொங்க விருவிழி யுறைப்ப நின்றாய்
வெருவரு முளத்தி னேமீ தென்னென வினைத லோடும். (௧௧)

தூயமா தவத்தா லால சுந்தரர் தென்பாற் றோன்றி
நேயவா தரவிற் றெண்டத் தொகையரு ளிரம்பப் பாடித்
தாயனா பாங்கர் மீள்வா ரென்றவர் சரித மெல்லாந்
தோயநீ யருளிச் செய்தாய் சொல்லிய விரிவினாலே. (௧௨)

காழிநா டைய ராய கவுணிய ராமூர் வந்த
வாழிநா வரைய ராதி யறுபத்து மூவர் மாண்பு
மாழிசூ ழுலகு போற்றுந் திராவிட வேத மாய
வூழிநா யகனு வக்க வுற்றதே வாரச் சீரும். (௧௩)

மற்றதுந் தெரிந்தே மின்னும் வாசக வேதச் சீருஞ்
சொற்றவர் சீரு மன்னார் வழியடேத் தூய மேன்மை
பெற்றமாத் தலத்தின் சீரும் பேசுகென் றுரைத்த லோடேங்
கற்றவர் புகழு மந்த முனிவரன் களிப்புத் தூங்க. (௧௪)

அருளமை யான்ம நாதர் சிறப்புமற் றவர்வி ராய
பொருளமை தலச்சி றப்பும் பொங்கழற் புனற்சி றப்புந்
தெருளமை மறையோன் மாயோன் றிறனுருத் திரப்பே ரண்ணல்
வெருளமை யாது போற்றி மிக்கபே றுறுசி றப்பும். (௧௫)

மற்றவர் போற்றி வேண்டும் வரமெலாம் பெறுசி றப்பு
மற்றமில் வாதவூர ரவதாரம் புரிசி றப்புங்
கற்றவர் புகழ மைச்சாய்க் காரியம் புரிசி றப்பு
முற்றவெம் பரிமாக் கொள்ளப் பொருளுட னுறுசி றப்பும். (கசு)

பெருந்துறை யடைந்து ஞான வடிவமாய்ப் பிறங்கித் தெய்வக்
குருந்துறை குரவற் போற்றி யுபதேசங் கொள்சி றப்பு
மிருந்துறை யெவர்க்கு மாய வாசக மெடுத்தி யம்பி
யருந்துறை யல்லாப் புத்த ராறழித் திடுசி றப்பும். (கஎ)

பூரண வடிவ மாகிப் பொலிந்தினி தமர்சி றப்பு
நாரணன் முதலோ ரேத்த விழாக்கொண்ட நகுசி றப்பு
மாரண விசேட மாய வாசகத் தருஞ்சி றப்பு
மேரண வெடுத்து ரைத்தா னியாவரு மின்ப மெய்த. (கஅ)

தெருளுப மனிய வள்ளல் சிவகண முனிவர்க் கிவ்வா
றருளுப தேசஞ் செய்தா னனையருட் டௌமி யப்பேர்
மருடபு முனிசிந் தித்து மாற்றருந் தலைமை பெற்று
னிருடப முனாக டந்த நீதமே லுரைப்பா மன்றே. (கக)

மருடரு மலர்து மிக்கும் வன்மைமே வியபு ராணத்
தருடரு வரலாற் றைத்தேர் தரவெடுத் தறைந்தா மப்பாற்
பொருடரு கல்வி கேள்விப் புண்ணிய முனிவீர் தேர்மின்
றெருட்டரு புகழ்ப்பு ராணச் சிறப்பினை யுரைப்பா மன்றே. (உ0)

புராணவரலாற்றுப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருஉ.



# புராணச்சிறப்புரைத்தபடலம்.

எந்தப் பிறப்புங் கொடியதென விம்மா நிலத்தி லெல்லாரு
முந்தப் புகல்வ ரதனிற்க வாத வூரெம் முழுமுதலைச்
சந்தப் பனுவல் கொடுதுதிக்கச் சாந்த பிறப்பெப் பிறப்போமற்
றந்தப் பிறப்பைப் பல்காலு மன்பிற் றொழுதஞ் சலிசெய்வாம். (க)

அருவா யுருவா யருவுருவா யாதி யாய்நித் தியமாயின்
புருவாய்ச் சத்தாய்ச் சித்தாய்மற் றென்றாய்ப் பலவாய் நிர்க்குணமாய்க்
கருவாய்ச் சருவ வியாபகமாய்க் கண்ணாய்க் கண்ணுட் கருமணியாய்
மருவாய் மலராய் மணியொளியாய் வயங்கு மான்ம நாதசிவம். (௨)

மூல மலமாஞ் சகசமல மொழியா நின்ற வியாபகமே
யேல வமைந்த வியாப்பியமே யென்னு மிரண்டு மாகாது
சால வியாத்தி யாய்ப்பிணிக்கத் தழுவிக் கிடந்த வுயிரனைத்துங்
கோல வின்பம் பெறவாதி சிருட்டி யாற்றக் குறித்தநாள். (௩)

எல்லா வுயிரு முயுநிமித்த மிலிங்க மூர்த்தி யாய்த்தலமாய்ச்
சொல்லா நின்ற தீர்த்தமாய்த் துவன்ற வுலகெங் கணுமாயிற்
றல்லா மலநோய் மருந்தாய வனைய தலங்க ளாமுன்னே
நல்லா தரவி னருபமாய் நயந்தீ திந்தப் பெருந்துறையை. (௪)

எங்கு மரூப வியாபகமா யிவைவ தெனினு முடம்பனைத்துந்
தங்கு நறும்பான் மூலத்தோற்றுந் தகைபோ லான்ம நாதசிவம்
பொங்கு வளஞ்சால் பெருந்துறைக்கட் டோற்றும் புகலிவ் வேதுவினாற்
கொங்கு மலிபூம் பொழிலதுகா ரணமாத் தலமாக் கூறுவார். (௫)

இதுகா ரணப்பேர் பெற்றதனா லெல்லாத் தலமுங் காரியமா
முதுபா ரிடைப்பேர் பெறுமுனிவீர் மொழிந்த தன்மை யெத்தலத்து
மதுவார் கழுநீர் மாலிகைதோள் வயங்க வொளிர்கா ரணகுருவாய்ச்
சதுமா மறையத் தலத்தன்றி யமரா நிற்குந் தனிமுதலே. (௬)

அன்ன தலத்தின் மான்மியமுற் றறையா நிற்கும் புராணமுமுன்
முன்ன வருளுங் காரணபு ராண மென்று மொழிந்திவோ
ரென்ன புராணத் தினுஞ்சிறந்த வீது கரும ஞானமெனச்
சொன்ன காண்ட மாய்ப்பொதுமற் றுண்மை யென்றுஞ் சொலப்படுமால். ()

இன்னு மியலுந் தந்திரமே யியம்பா நின்ற மந்திரமே
மன்னு முபதே சம்மேயென் றுரைக்குங் கலைமூ வகையுமாம்
பன்னு மிவற்றுள் வாதவூர்ப் பனவர் பெற்ற துபதேச
முன்னு மிரண்டு மேனோர்பெற் றனவென் றுணர்மி னுணர்வுடையீர். (௮)

ஞான முண்மை யுபதேச கலையோ டொன்று நலத்தினவா
வேன விரண்டு மற்றுமுள் விரண்டு கலையோ டொன்றுவன.
வான வினையப் பெருஞ்சிறப்பா ளவாப் புராணங் களிற்சிறந்து
கான விதழி புனைவாருக் குவகை செயுமுட் கருதிடுவீர். (௯)

புரூரவா தவமியற்றியடைந்த படலம்.

சத்தி பதியும் பரிபாகந் தங்கப் பிறந்த வெறுத்தின்ப
முத்தி விரும்பு மவரேயிப் புராணங் கேட்கு முறைமையினர்
சித்தி யமைந்த புராணத்தின் சிறப்புச் சொற்றாந் தவமியற்றிப்
பத்தி யமைந்த் புரூரவா வடைந்த பரிசு பாவோம். (௪0)

புராணச்சிறப்புரைத்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௬௯௨.

---

# புரூரவா தவமியற்றியடைந்தபடலம்.

ஒருவாத மலக்குரம்பை யேகாமென் றுரைப்பாரும்
பெருவாத வாருகதம் பிடகமுதற் பெட்பாரும்
வெருவாதத் தோபகுதி மேன்முத்தி யென்பாருந்
திருவாத வூராடி சிந்திக்குந் தரத்தரோ. (௧)

கண்ணின்மணி நமக்கென்று கலைமகளா லவாவுநரு
மெண்ணினளப் பரியவளா மியல்பமைந்த மாநகரம்
விண்ணினம ராவதிதன் னிலைவழீஇ வீழ்ந்தவரி
மண்ணினமர்ந் திருந்தென்ன வயங்குறுமத் தினநகரம். (௨)

அந்தவள நகர்புரப்பா னந்தவள நீறணிவா
னந்தவள வெனுங்களத்தா னந்தவளக் கருங்காம
முந்தவளத் தரும்பென்ன முயங்கரிளை வடிவழக
னெந்தவளக் கருமொவ்வா தெனப்பொலியு மிரும்படையான். (௩)

கலைபலவுங் கற்றவர்க்கோர் கண்ணுய கல்வியினு
னிலையெனவா யுரைத்தல்பெற ரெனக்கொடுக்குங் கரதலத்தா
னலைகடல்சூழ் நெடும்புடவி யனைத்துமொரு குடைநிழற்றிப்
புலைமிடிவே றறக்களைந்து போக்கியெழும் விறல்வீரன். (௪)

உரைப்பார்வா யுரைப்பவைதன் புகழேயாம் படியுயர்ந்தோன்
றரைப்பால்வா ழுயிர்க்கன்றித் தரியலரே யாருர்க்கும்
வினைப்பால்வன் கற்பகத்தார் மிலைச்சவான் கொடுத்தவப்பான்
றிளைப்பான்மால் விழிவளரத் திசையுருட்டு நேமியினான். (௫)

ஒருபுடைவெவ் வராக்கொளினு மொருபுடையா லுலகனைத்துங்
கருதிருடீர் தரவிளக்குங் கடவுண்மதிக் குலத்துதித்தா
னிருநிலத்தி னுயிர்வருத்தந் தன்வருத்த மெனக்கொண்டே
பொருதளித்திட் டவையுவப்ப வுவப்பெய்து மிப்புர்த்தியினன். (௬)

எண்ணியபல் பரசமயக் களைகடலை யெடாதிடர்ந்து
கண்ணியவண் பெருஞ்சைவப் பயிர்வளர்க்குங் காட்சியினான்
றண்ணியதிப் பியகுணத்தான் றத்துவமா நெறிநிற்பான்
புண்ணியமே வடிவென்னும் புரூரவா வெனும்பெயரான். (எ)

ஆன்றபல பெருங்கேள்வி யமைச்சர்புரோ கிதராதி
யேன்றவர சுரிமையுடைச் சுற்றத்தா ரெலாஞ்சூழத்
தோன்றமதிக் குடைநிழற்றித் துன்னலர்வெம் பகைமுருக்கித்
தேன்றதும்பு வாகைகொளீஇச் செய்யகோ னடாத்திடுவோன். (அ)

குணநிறைந்த பேரழகின் கொள்கலமா மனையவிருந்
தணவரிய தன்னேவற் றலைநிற்கு மைந்தர்களு
மணவரிய விருந்தினரு மொக்கலா யமைந்தாரு
மணமலியன் பொடுதழுவ வாழுநாள் களுளொருநாள். (கூ)

அள்ளல்வயற் பெருந்துறைவாழ் மான்மகா தப்பெருமான்
விள்ளலமை யாதவருண் மேவுபரி பாகமுறத்
தள்ளலமை யாச்சுற்றந் தனைநீங்க விடைகொடுத்தே
யெள்ளலமை யாததனி யிடத்திருந்தி தெண்ணுவான். (க௦)

நீரிலெழு மொக்குளே நிகர்க்குமிள மைப்பருவ
நீரிலெழுந் திரைபோலு நிரம்பவெழுந் துடைசெல்வ
நீரிலெழு தெழுத்தினையே நிகரவழி தருமுடம்பின்
நீரிலமை பெருவாழ்க்கை யென்னென்று நிகழ்த்திடுவோம். (கக)

குடருமெலும் புங்கொழுவுங் குருதியுமீ ருளுந்தசையுந்
தொடருநரம் பும்போர்த்த தோலுமூ னையும்வழும்பு
மடருமுவர் நீருமனி யருவருக்கும் பவ்வீயும்
படருமுடை லியும்பொருளா நினைப்பரோ பண்புடையோர். (கஉ)

இயக்கமிரண் டொழித்திடுகோ லெவ்வளவின் பவ்வளவே
முயக்கமிகு மங்கையர்த மோகத்தால் வருமின்பம்
நயக்கவிது கருதாது நாளுமவர்த் தோய்ந்துவத்தல்
வியக்குமின் பெனல்வன்றி பவ்வீவீழ்ந் துவத்தல்பொலும். (கங)

மிதவையிலேனுக் கமைத்துழலு மீன்கொலைஞன் போற்கவரும்
பதமிதெனப் பார்த்துழலும் பாழ்ங்கூற்றுண் மையினுலெவ்
விதமுமுடம் பொழியுமதன் மேற்புரிவ தொன்றுமிலை
யிதமகித மேயுயிர்க்குத் துணையாக வெய்திடுமே. (கச)

கரிமுதற் படைக ளோடுங் காணவிக் கிலத்தி யங்கும்
பெரியவ ரிதற்கோர் பாங்கர்ப் பெருந்துறை மருங்கு வந்தார்
தெரியுமவ் வெல்லை வந்து சேர்தலு நெக்கு நெக்குப்
பரிவுள முருகிற் றிரண்டைப் படுமெழு கினும்வி னாந்தே. (௪௭)

பொறுக்கலா காத பாரம் பொறுத்தவ னிறக்கி யாங்குக்
குறுக்கலா காத வாதை யாவையுங் குலைந்து போக
வெறுக்கலா காத வின்ப மேவிய திரண்டு கண்ணு
மறுக்கலா காத வாரி பொழிந்தன வருவி மான. (௪௮)

இந்திய மைந்த னுக்கு மினியன வெய்தா நிற்கச்
சந்திய றோளுங் கண்ணுந் துடித்தன தகவ லத்தே
நந்திய விவற்றா லென்னை யாள்பவ னயந்து வைகு
முந்திய விடமீ தென்றே முன்னின ருவப்புக் கொள்வார். (௪௯)

சிவிகைநின் றிழிந்தா ரிந்தத் தேமடைந் தார்தஞ் சென்ம
மவிகைசெய் திடுத லாகு மாதலா லமர்வா மென்றார்
குவிகைய ராகிப் பக்க நின்றவர் குறித்த வாறே
கவிகையீர் செய்வ தென்று காரியஞ் செய்ய லுற்றார். (௫௦)

கரிபரி யிரதஞ் சூழ நிறுத்தியக் கடையி னுள்ளால்
வரிகழல் வீரர் சூழ்ந்து வைகிட விருக்கை செய்து
தெரிதர வதனுக் குள்ளாற் றிகழ்பட மாடஞ் செய்து
புரியுடை முந்நூன் மார்பர் பொருந்திநன் கமரச் செய்தார். (௫௧)

அணிபட மாடத் துள்ளா லமர்பவர் வேத நான்குந்
துணிபொரு ளான்ம நாதர் துணையடி வணங்க வெண்ணிக்
கணிதமில் சனங்க ளோடுங் கைகுவித் தெழுந்து வல்லே
மணிமதிற் கோயில் புக்கார் வாரழற் றீர்த்தந் தோய்ந்தார். (௫௨)

நீறுகண் மணிபு னைந்து நிழலுவ வாத வைங்கை
யாறுசெய் தான மோனப் பிள்ளையை யடிவ ணங்கி
யேறுவந் தேறு மான்ம நாதர்தந் திருமு னெய்திப்
பேறுவந் தளிப்பா யென்று பேசுபு வணங்கி னாரால். (௫௩)

வெள்ளிய நீறு வாங்கி விளங்கநெற் றியிற்பு னைந்தே
யொள்ளிய கருணைத் தாயாம் யோகநா யகிமுன் சென்று
வள்ளிய வன்பு பொங்க மனநெகிழ்ந் துடையத் தாழ்ந்து
தெள்ளிய கருணை பெற்றுச் சென்றனர் சுற்றஞ் சூழ்ந்தே. (௫௪)

பரிசன முன்னும் பின்னும் படர்தர வந்து தாழ்ந்து
தரிசனஞ் செய்து செல்வார் தமையறிந் தாங்க னுள்ள
புரிமறை யுணர்மூன் றூறு பூசுரர் களுந்தொ டர்ந்தார்
வரிகழலரச மைச்சர் தமக்கிது வகுக்க லுற்றூர். (ருரு)

இத்தல மாதி மூர்த்தத் தலமிதி லடைந்து போற்றி
முத்தலம் படைப்போன் முன்னு மூவரும் பேறு பெற்றூர்
கைத்தல நெல்லி யென்னப் பலந்தரும் கருதி னூவு
மெத்தல மிதனுக் கொப்பென் றெடுத்துரை யாட வல்லேம். (ருசு)

என்றுபற் பலவு மைாத்துத் தொடர்தரு மினைய ரோடு
நன்றுதம் மிருக்கை யெய்தி நகவவர்க் கிருக்கை நல்கிக்
குன்றுத லில்லாச் செம்பொன் கோடிசன் மானஞ் செய்து
பொன்றுத லில்லா வன்பிற் போக்கினர் தனிய மர்ந்தார். (ருஎ)

மறையவர் போன பின்பு மஞ்சனஞ் செய்து கொண்டு
பிறைமுடிப் பெருமான் பூசை பேணுபு பிறங்கச் செய்து
நிறைசுவை யமுத முண்டு நிலவவாய் பூசிப் பின்றை
யறையயர் வுயிர்த்த மர்ந்தா ரடியனேன் மனத்த மர்ந்தார். (ருஅ)

வழியியங் குதலால் வெப்பம் வாதலூ ரடிகட் காய
தழியுநா மறையே மென்னி லரும்பழி யாகு மென்று
பழியறத் தன்னு ளோர்ந்தோர் பசும்பொழில் புகுந்து ளான்போற்
கொழிகதிர்ச் செல்வ னேடிக் குடகட லழுவம் புக்கான். (ருக)

தாவர மாகி யுள்ள சைவந்தா பிக்க வல்லார்
மேவர வோரூர் நின்றும் வேறோரூ ரடைந்தா லென்ன
மாவர வொளியோன் றென்பா லொரீஇவட பாலிற் சாரச்
சீவரப் போர்வை யென்னச் செக்கர்வா னெழுந்த தன்றே. (சுo)

ஒருங்குவா தாட வல்லா ரொருவரு மில்லை யென்று
நெருங்குபல் பவுத்த ராய நிறையிலார் வளைந்தாற் போல
மருங்குகு ரியனு மில்லை மதியிலை யுடுவு மில்லென்
றிருங்கடல் சூழ்வைப் பெங்கு மிறுத்தன வந்த காரம். (சுக)

இரவுமே விட்ட டந்தோ வென்செய்வா ருலகத் துள்ளார்
கரவுமே விடுமே யென்று கண்ணோட்ட டனிய டைந்து
பரவுசெய் மதிக்கு முன்னம் போயுப கரிப்போ மென்று
தரவுகூர் தாமு ளைத்த தாரகைக் கணங்க ளெல்லாம். (சுஉ)

இவைகொலோ நமையி ரிக்கு மெண்ணுமை யொன்று செய்த
னவையடா ததுவோ வென்று நத்தமெண் ணுற்ற காலைச்
செவையுறு வதுபொ ருளுய்ச் செழுமதி யுதயஞ் செய்தான்
குவையுறு வருமல் லம்ம கொடிசெடி யகத்தொ துங்க. (கரு)

இன்னண நிகழுங் காலை யிரவுசெய் கடன்கண் முற்றி
நன்னலத் தமுது செய்து நருபுக ழமைச்ச ஞர்தா
மின்னகு மமளி மேலான் மேவினு ரான்ம நாத
ருன்னரு மருளா லாங்கோர் சிறுதுயி லுற்று ரன்றே. (கசு)

கனவிடை யான்ம நாதர் கதிர்க்குமேர் ருருவந் தாங்கி
யனகமார் குருந்த நீழ லமரவும் விடாது சூழ்ந்து
வினவுமா ணுக்கர் பல்லோர் மேவவுந் தாமெ திர்ந்து
மனநெகு மாறு மேன்மேல் வணங்கவுங் கண்டா ரன்றே. (கஎ)

அருந்தவத் தினரிவ் வாறு கண்டமு தழுதி ரங்கிப்
பொருந்தமுன் காணுக் காட்சி கண்டனம் பொய்யா காது
திருந்தமற் றவனே யென்னை யாட்கொளுந் திறத்தோ னென்று
வருந்தலற் றிருந்தார் வெய்யோன் வருதலை நோக்கி மாதோ. (கஅ)

சீதநீர் வளத்தான் மிக்க திருப்பெருந் துறையை நாடி
வாதவூ ரடிகள் வந்து சார்ந்தமை வகுத்துச் சொற்றும்
போதநா யகனே யான பொங்கொளிக் குரவற் கண்டு
காதலி னுபதே சம்பெற் றிடுதிறங் களைய லுற்றும். (கசு)

திருப்பெருந்துறையடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ககஉரு.

---

# உபதேசப்படலம்.



பரம்பரன் செவ்வாய்ப் பாடல் பந்தத்தை நல்க லோடு
நிரம்புமுத் தியையு நல்கு நிகழ்திரு வாத வூரர்
வரந்தழை செவ்வாய்ப் பாடன் மயக்கறுத் தெந்த ஞான்று
முரம்பெறு முத்தி யொன்றே நல்கிடி னுரைப்ப தென்னே. (க)

கதிரவன் வரவு நோக்கிக் கண்டுயி லாம லையு
ரதிர்புன லிருகண் வார வழுதழு திரங்குங் காலை
முதிரருட் குரவன் காட்சி முந்துபு தானுங் காண
வெதிரற வருவான் போலவ் வினன்குணக் குதயஞ் செய்தான். (உ)

சிவப்பிர காசந் தோன்றுஞ் செயிரறு காலத் தேமுன்
னவப்பிர காச மாகி யமைந்தன மாய்ந்தாற் போலத்
தவப்பிர காசஞ் செய்த சந்திர னுடுக்க ளெல்லா
மெவப்பிர காச மெய்திற் றென்றுபோய் மாய்ந்த வன்றே. (ரு)

கருமல மென்னப் பேசுங் காரிருட் டடைவுற் றுங்குப்
பொருமிருள் வலையப் பட்டுப் போதற்றே மதுபோய் மாள
வொருகதி ருதித்த தூசெறன் றுளதுகொ லினியென் றையர்
திருமுக மலர்ந்த தென்னச் செய்யதா மரைம லர்ந்த. (சு)

ஒள்ளிய வாத வூர ருபதேசம் பெறுவா ரின்று
தள்ளிய நமக்கென் றுங்கொ லெனப்பர சமய ரெல்லாந்
துள்ளிய வாய்கு வித்த தோற்றம்போ லோடை யெல்லாந்
தெள்ளிய வாம்ப லாதி செய்யவாய் குவிந்த வன்றே. (எ)

இன்னண நிகழுங் காலை யெங்களை யாளு மையர்
சொன்னதங் கரும மாற்ற வெழுந்தொரு துறைக்கட் சென்று
ரன்னவர் வருமு ஞன்ம ராதரா ரியராய்ப் பல்லோர்
துன்னவொண் குருந்த நீழ லமர்திறஞ் சொல்ல லுற்றும். (அ)

கதிரொரு கோடி யொன்றாய்த் திரண்டெழு காட்சி யென்ன
முதிரொளி மேனி காட்ட மூவுல கத்து மொய்த்த
பிதிர்தலி வழுகெ லாம்ப் பிறங்குருக் கொண்ட தென்ன
வதிர்மறைக் கப்பா லாரோ ரந்தண வடிவங் கொண்டார். (எ)

வீழ்சிக ழிகைக்கு மேலான் மிலேச்சிய வுருத்தி ராக்கத்
தாழ்வட மிலங்க நெற்றி தடம்புய நிறமுற் பாவம்
போழ்திரு நீற்றி னோடக் கண்மணி பொலிய வுந்தி
யாழ்திரு வரையில் வெண்கோ சள்ளொளி நிலவு வீச. (அ)

துலங்குமிவ் வுருக்கொண் முன்னந் துதைமுடி மதியொ ழுக்கு
மிலங்கமு தொருவு றும விளைந்தென மூந்நூல் பொற்ப
வலங்கிள ரிருசெ விக்கண் வளைக்குழை பிணங்கா நிற்ப
நலங்கிளர் பொன்செய் வேற்றக் குழைமரீஇ நயப்பத் தூங்க. (கூ)

வந்துபைங் குருந்த நீழல் யோகவா சனம்வ லத்தா
னந்துறக் கிழ மைத்தாங் கிடத்தாண்மே னகவ ளைத்து
முந்துமுத் தரியம் யோக பட்டத்தின் முயங்கப் பூண்டு
கந்துசெய் கூற்ற முட்கக் கருதவ னுகை நோக்கி. (௧௦)

தெருளிர வுரவத் துள்ள சிவஞ்ஞான போதந் தாங்கி
யருளிடக் கரங்க வித்து ஞானமுத் திரைய மைந்த
பொருள்வலக் கைவி ளங்கப் புன்னகை முகத்த ரும்ப
மருளற வீற்றி ருந்தார் மாலயன் றேடிக் காணர். (கக)

இவர்நிலை யின்ன தாக வொருவரி லீரைஞ் ஞூற்று
ருவரிலா மனத்தார் முன்சொ லுத்தர கோச மங்கைத்
தவர்சொறே மிருந்தா ரெல்லா மானிட ராகிச் சார்ந்து
கவரிலார் வணங்கு வைகி யாற்றலுங் கழறி யுய்வாம். (கஉ)

வேதநூ லுரைப்பார் சில்லோ ருணர்த்தவை விளக்க மிக்குப்
போதமாம் படிப குத்துப் பொருளுணர்த் திடுவார் சில்லோ
ராதரம் பயப்பக் கன்ம காண்டத்தை யறைவார் சில்லோர்
மேதக வமைந்த ஞான காண்டமே விரிப்பார் சில்லோர். (கங)

உரைத்ததன் சென்னி யாய வுபநிட முரைப்பார் சில்லோர்
வரைத்தவிப் பொருளை நிற்கச் சிறப்பென வகுக்கப் பட்ட
விரைத்தவா கமங்கண் மேலு மேலுமோ திடுவார் சில்லோ
ரிரைத்தமற் றவற்றி னுள்ளு முண்மையேற் றிசைப்பார் சில்லோர். (கச)

பரசம யத்தின் றேடம் பகுத்தெடுத் துரைப்பார் சில்லோர்
தர்மிகு சைவ மொன்றே சான்றதென் றிசைப்பார் சில்லோர்
விரவது வுளுஞ்சித் தாந்த சைவமே விட்ட காலை
யுரனறு மென்பார் சில்லோ ருண்மையென் றுரைப்பர் சில்லோர். (கரு)

சரியையே முதலு னூலுந் தனித்தனி யோதி யோதி
விரிதரு பொருளு மாய்ந்து மேதகப் புகல்வார் சில்லோர்
தெரிதரு புராண மெல்லாந் தெரிந்தெடுத் திசைப்பர் சில்லோர்
பரிதரு முபபு ராணந் தனித்தனி பகர்வார் சில்லோர். (கசு)

உடைவெண்கோ வணமே கீளே யுணவுகைப் பலியே யொண்கண்
படையக லிடமே சாந்தங் பரிப்பது தெய்வ நீறே
மிடைகல னுருத்தி ராக்க மாலையே வேறு வேண்டா
நடையினர் தனித்தி ருக்கை நயந்தவ ரானார் சில்லோர். (கஎ)

திருவிய றங்க ளுள்ளாற் றிகழ்ஞான பானு விற்கு,
மருவிய வுதய மத்த மயமென்ப தின்மை யாலே
கருவிய விருளு மில்லார் காண்டகு பகலு மில்லா
ரருளிய லென்னுந் தானத் தமர்ந்துவாழ் கின்றார் சில்லோர். (கஅ)

ஆடுவேர் சிலர்கை கொட்டி யாடுதற் கிசையா வண்ணம்
பாடுவர் சிலருன் மத்தர் பாலர்பை சாசர் போல
நீடுவர் சிலர்கை கூப்பி நேருறத் தொழுவார் சில்லோர்
கூடுவர் சிலர்நி னைந்து குழைந்துனைந் தழுவார் சில்லோர். (கக)

இத்தகை யடியா ராகு மொருவரி லிளைஞ் ஞாறு
வித்தகர் விருப்பிற் சூழ நமெிளிர்குருந்தி னீழ
அத்தம ரமரும் காட்சி யொளிர்தாரா கணங்கள் சூழ
முத்தவெண் மதிய நாப்பண் முயங்கிய தோற்றங் காட்டும். (உ0)

வழிபடு காலவ ருக்கா வடகிழ லமர்ந்த காட்சி
மொழிபடு வாத வூர்மா முனிவரற் காகப் பைந்தேன்
கொழிபடு மலர்க்கு ருந்தக் கொழுநிழன் மேவ வோவென்
றொழிபடு திறமில் காட்சி யுறுவர ருவகை பூத்தார். (உக)

அழகிய துறைக்கட் சென்று நாவயிற் கரும முற்றி
மழவிளங் கன்றை நாடி மனம்பதைத் தணையாப் போன்று
குழகர்தங் கோயில் வாயில் குறுகினர் நெடுங்க ணீர்த
வழவகன் மார்பின் மேனி மயிர்ச்சிலிர்ப் பொருங்கு மேவ. (உஉ)

நெஞ்சநெக் குருகா நிற்க நேர்பணிந் தெழுந்துள் புக்கார்
வஞ்சமி லான்ம நாதர் சந்நிதி வந்து கூடிக்
கஞ்சமென் கரங்கள் கூப்பிக் கரைந்துயோ காம்பி கைத்தாய்
செஞ்சரண் டொழுது சூழ்ந்து சென்றனர் திகைத்து நின்றார். (உங)

நின்றுள மதித்த லோடு நெடியமா லயன்முன் னோனோர்
சென்றுசென் றணுகுந் தோறுஞ் சேயனாய்ச் சிந்திப் போருக்
கன்றவர் சிந்தை யுள்ளே யணியனாய்ச் சுடரோர் மூன்றும்
வென்றுமிக் கொளிவிட் டோங்கு சோதியை விளங்கக் கண்டார். (உச)

மறைமுழு மையுமென் கோவம் மாமறைச் சென்னி யென்கோ
நிறைபெருந் தொண்ட ராணர் நெஞ்சகக் கோயி லுன்கோ
நறைசெயிக் குருந்த நீழ லுயனா ருறைவ ரேலோர்
குறைவிலா விறையா தென்று குறித்துளங் கூறு கிற்பேம். (உரு)

பைங்கள்வார் குருந்த நீழ லென்னனும் பார்த்த தில்லை
கங்கணன் குடைய தேவுங் காணும்மா தவமுன் னாரனே
செங்கண்மா லிடந்துங் காணத் திருவடி மலர்மண் டோய
வெங்குளே யாள வென்றே வெழுந்தரு ளியுளிங் கென்பார். (உசு)

வெள்ளிய நீற்றி னோடு வெள்ளிய முறுவ லாயெங்
கொள்ளிய வமைந்த மூல மலம்விளர்த் திடக்கு மைக்குந்
தெள்ளிய மேனித் தேசே சிந்தையுட் டேசு செய்யு
மள்ளியத் தொழித்தற் கெண்ணி னடியர்தங் குழுவே சாலும். (உஎ)

பொருகலிற் கனவிற் கண்ட வண்ணமே நிரம்ப வின்று
கருதுதற் கரிய காட்சி நனவிலுங் கண்டே மீது
பெருகொளி யமர ரேனுங் கனவிலும் பெறுவ ரோவென்
றுருகுவர் நெக்கு நெக்கு ளுடைவரோ வியம்போ னிற்பர். (உஅ)

மறையவ ராகி யிங்கண் வைகுவார் காந்த மொத்தார்
பொறையவ ரருணோர் நின்று பொருத்திடு வாரை யொத்த
திறையுமன் பில்லா நாயேன் மனமிரும் பொத்த தென்றாற்
குறையவ னுய்யுங் காலங் குறுகிய தென்று வப்பார். (உகூ)

இவ்வண்ண மெண்ணி மற்று மெண்ணுவ தொன்று மில்லை
செவ்வண்ண விவரே நம்மை யாட்கொள றேற்றந் தீரா
நவ்வண்ண மவ்வண் ணம்போய் நசித்தவென் றோடிச் சென்றே
யவ்வண்ண மாயி னார்த மடிவண்ண மலர்க்கீழ் வீழ்ந்தார். (ஙo)

வீழ்ந்தவ ரெழுந்தி ராமல் வீழ்ந்தவா கிடப்ப நோக்கி
யாழ்ந்தவான் கருணைச் சோதி யெழுகவென் றருள நேர்ந்து
வாழ்ந்தனேன் வாழ்ந்த னேனென் றெழுந்திரு மலர்க்கை கூப்பித்
தாழ்ந்தடி மலரின் பாங்கர்ச் சார்ந்துளைந் துருகி நின்றார். (ஙக)

ஆயவப் பொழுதாங் குள்ள வடியவ ரொருங்கு கூடித்
தூயதம் பெருமான் செம்பொற் றுணைப்பதந் தொழுது வாழ்த்தி
நேயமிக் கணைந்து ளாரை யாட்கொள னெறியே யாகு
நாயனே யென்று வேண்ட நகைமுகக் கருணை பூத்தார். (ஙஉ)

கண்ணிய காலம் வேண்டேங் கனவிய துணர்தல் வேண்டேம்
புண்ணியர் திரண்டு வந்தநற் போன்றமற் றிவர்பொ ருட்டியா
மெண்ணிய தெண்ணி யாங்கே முடித்துமின் றிரவே யென்றார்
தண்ணிய வடியா ரெல்லாந் தாழ்ந்தர முழக்கஞ் செய்தார். (ஙங)

ஐந்தொழி னடாத்துந் தேமா யான்மகா யகர்வீ ளங்கு
மைந்தெழிற் சபைக்குப் பின்னர் வண்குருந் தடியொன் றேயவ்
வைந்தொழி லுங்க டந்த வநுக்கிர கத்தே மென்ற
மைந்தடி யவர்பல் லோரு மதித்தன ரலங்க ரிப்பார். (ஙச)

விரிமலர்க் குருந்தஞ் சூழ வெண்பளிங் குன்ற மப்போ
தரிபளிங் கெடுத்தோர் வேதி யாக்கிமற் றதற்கு மேலாப்
புரிசெய்காற் றூணி றீஇமேற் போகட லனைத்தும் போகட்
டெரியபைம் பொன்ப ரப்பி யொருசபை விளங்கச் செய்தார். (ஙரு)

தேசிக னமருந் தான மென்பதுதேற்றி யாங்குத்
தேசிக மமரா நின்ற செம்பட்டு விதானஞ் செய்து
கோசிகப் பிரியர் வைப்பா மிதுவெனல் குறிப்பிப் பார்போற்
கோசிகங் கொய்தெ டுத்துச் சூழவுங் குலவத் தூக்கி. (ஙசு)

அரும்புவெண் டரள மாலை யலங்காற் புறத்துந் தூக்கி
விரும்புகப் புரச்சாந் தத்தால் வேதிமே லிடத்தை நீவி
வரும்புது ஞாயி றென்ன மணிவிளக் கனந்த மேற்றி
யிரும்புனுங் கனைய மற்று மியல்புற வலங்க ரித்தார். (ஙஎ)

செய்யசீ ரடியார் கூடி யின்னன செய்யும் வேலை
வையமுற் றுய்ய வந்த வாதவூ ரடிகண் முத்தித்
தையலைப் புணருங் காலஞ் சார்தரே யுறுத லன்றி
வெய்யயா முறல்கூ டாதென் பானில்வெய் யோனொ ழிந்தான். (ஙஅ)

கதிரவன் மறைத லோடுங் காரிருள் வான ளாய
ததிர்தா வுடுக்க ளாங்காங் கரும்பின வவைக்கு நாப்பட்
பிதிர்தலில் கலைகள் வீசிப் பிறங்கினன் மதிநீ லப்பட்
டெதிர்வின்முத் துறநட் டுஞ்ச மியைந்தமேற் கட்டி மானும். (ஙகு)

பூவினுட் சிறந்தா மேனும் பொழுதுபோ குற்ற காலை
மேவுநந் தமக்கென் னுமென் றரவிந்த மொருங்கு வீந்த
தேவினுட் சிறந்தார் பாதஞ் சிவனுவம் யாமே யென்று
வாவியுட் பொலிந்த மூந்தி மாண்டசெங் கழுநீ ரெல்லாம். (சo)

அளிகிளை ரந்தி யாதி யத்தயா மத்தின் காறுந்
தளியமை பணிசெய் வாருந் தகச்செய்து கழிந்த பின்றைத்
தெளிகிளர் மூன்றாம் யாமந் தீர்ந்தது காலாம் யாம
மொளிகெழத் தோன்றிற் றுங்கண் வாதவூ ரருமுற் றூரால். (சக)

கனிமலர்க் குருந்தி னீழ லக்கவூ சனத்தின் மேலாற்
றனிமுத றென்பா லேக்கி முன்புபோற் சார்ந்தி ருந்து
புனிதமிக் கமைந்து வந்த வாதவூர்ப் புலமை யோனைக்
கனிவுற வெதிரி ருத்திக் கனிந்துபக் கிரமஞ் செய்வார். (சஉ)

## உபதேசப்படலம்.

அருள்கொடு மனுமுன் னுமா றத்துவா வையுஞ்சோ தித்து
வெருள்கொடு பழைத்து நீங்க வவற்றினை வேறு செய்து
தெருள்கொடு பயிலா நிற்குஞ் செவ்விய திருநோக் கத்தான்
மருள்கொடு மறைத்து நின்ற மாமலஞ் சிதைய நோக்கி. (சங)

கரமலர் சென்னி சூட்டி மாயையுங் கருமந் தானும்
விரவுறு வண்ணம் போக்கி விளங்குபொற் கலையர்ன் மூடி
யுரமிகு ஞக்க பஞ்சாக் கரவுப தேசஞ் செய்து
வரமிகு முயிர்தா மாகும் வண்ணம்பா வனையி யற்றி. (சச)

ஊத்தொடு முயிரை வவ்வி யுற்றதோர் பிரம நாடி
வளப்பெரு நெறியே போய்த்து வாதசாந் தத்தின் மேலா
லளப்பரு மிருப குப்பற் றுணர்ந்தந் துய்க்க வுய்த்துக்
கொளப்படு மொருபற் றின்றிக் கோதிலா வொருதா மாக்கி. (சரு)

உடல்பொரு ளாவி மூன்று மொழுக்குநீ ரொடுகை வர்ந்து
விடலரும் விருப்பிற் பாத பூசனை விளைத்தி யென்ன
மடலவிழ் கழுநீர் சாந்த மான்மத மாதி யாய
கெடலில்பல் பொருளுங் கொண்டு நேழ்கிளர் தரப்பூ சித்து. (சசு)

மறைபுகன் முகம னெல்லா மரபுளி முடித்த பின்னர்
நிறையருட் குரவர் தாட்கீழ் சேர்பணிந் தெழுவார் சென்னிக்
குறைவிறம் பாதஞ் சூட்டிக் குறிக்கொளு நுதலின் மீது
கறையில்வெண் ணீறு சாத்திக் கழுநீர்மா லையுந்த ரித்தார். (சஎ)

ஆரிய னடிப்பூ மாலை யணிமுடி புனையப் பெற்ற
சீரிய வாத வூரர் செவ்விய வான்ம நாத
ரேரியற் கருணை யோகாம் பிகையிவர் பதம்ப ணிந்து
மூரியம் பரம ஞான மூர்த்தியா யமர்ந்தா ரன்றே. (சஅ)

—நுண் மாறு மாறு போதரு மென்னைப் போல
மறவிரு ளாய தீய வகவிருண் மாது மாறே
யறவுரு விவர்வாய் நின்றோ ரருங்கதி ருதிக்கு மென்று
திறமுறத் தெரிக்க வந்தான் போற்றின கரனெ ழுந்தான். (சக)

தினகர னுதயங் கண்டு திருவருள் பெற்ற வீவயர்
மனநெக வெழுந்து போந்தக் கினிப்புனன் மருவி யாடி
முனகர்கொள் ளாத நீறு கண்மணி முயங்கத் தாங்கி
யனகவா ரியன்பொற் றாட்கீழ்ப் பணிந்தெழுந் தருகு நின்றார். (நிo)

வேறு.

நின்றமையும் வாதவூர் முனிவரனை யருளேறுக்கா னிரம்ப நோக்கி
நன்றமைய நேரிருத்திச் சிவஞான போதமெனு நன்னூல் கைக்கொண்
டின்றமைய வுலகோப காரமாக் கைக்கொண்மி னென்று நல்கி
யன்றமைய வதனகத்துப் பொருளனைத்துந் தொகுத்தருளி னறைவ தானூர்.

புறமகமா மதத்துழன்றும் புகல்வருணுச் சிரமநிலை போற்றி நின்று
மறமிருதி மறைபகரு மாற்றுவழு வாதுமக மனைத்துஞ் செய்து
முறவுயரும் வேதாந்தப் பொருடேர்ந்து முற்றியபி னுணர்வான் மிக்கோர்
நிறமருவு பெருஞ்சைவ நெறித்தீக்கைக் கிழமையுறு நேய ராவார். (௬௨)

புரிதருமத் தீக்கைபல திறனுகு நோக்கூறு புகற லெண்ணல்
விரிதருமா லியோகமவுத் திரியெனவே ழிவற்றீற்று விளம்புந் தீக்கை
பரிதருமா றமைகிரியை ஞானமொரோ வொன்றேமூப் பால தாகு
முரிதருமா றமைசமய விசேடநிரு வாணமென வுனுற்ற லானே. (௬௩)

எண்ணியவித் தீக்கையடைந் தவர்நம்மைச் சேர்தவமீ ரிரண்டே யாகு
மண்ணியவண் சரியையெனக் கிரியையென யோகமென வமல மாக
நண்ணியமெய்ஞ் ஞானமென வவைகொடுத்த னம்முலக நண்ண லாதிக்
கண்ணியநம் மொடுகலத்த லீறாக நாற்றிறனுங் கனைந்த நான்குள். (௬௪)

அறிவுருநா மமர்கோயி லலகிடுதன் மெழுகன்மல ரடவி மேவிச்
செறிமலர்குற் றெண்ணிறொடை செய்தணிதல் விளக்கமிகத் தீப மேற்றன்
முறிவினம தடியரைநா மெனக்கருதிப் பணிபுரிதன் முதலாந் தாத
நெறியமைய்ஞ் சரியையினை யாற்றுவா ரெம்முலக நிலவி வாழ்வார். (௬௫)

தூயமக நெறிக்காகும் விசேடமெய்திப் பூசைசெயச் சொற்ற கொண்டே
யாயதிற லாதார சத்திமுதற் சத்தியெனு மம்பு யத்து
மாயமிலா தனமுதலாப் பாவித்தா வாகித்தா வரண மாதி
யேய்வியற் றுபுதீயோம் பிடுகிரியைப் புத்திரரெம் மருகி ருப்பர். (௬௬)

இயமாதி யெட்டுறுப்பி னியல்படைந்தே யிருவளியி னியக்க மோப்பி
வயமாரு நடுகோடி யுறப்பயின்று ருதார மரீஇய வோர்ந்து
நயமாக மதிவரைப்பி னெய்தியமு தருந்தியொளிர் நம்மோ டொன்றும்
வியமாய சகமார்க்க யோகுழப்போ ரெம்முருவ மேவி வாழ்வார். (௬௭)

பழியிலவை முற்றியருள் பதிந்துவினை யொப்பெய்தும் பருவத் தியாமே
கழிமகிழ்விற் றோற்றமுறீஇ நிருவாணத் தத்துவாக் கழலப் போக்கி
யழிவிலரு ளுறுக்குமெழுத் தைந்தாவின் றைம்பாச மகற்றி யின்ப
மொழிவரிதா வுய்த்திடுதல் சன்மார்க்க மென்பதலீ துரைக்க லுற்றும். (௬௮)

உருவருவங் குறிகுணங்கள் கட்டுவீ டொரீஇயனைத்து முயிர்க்கு நல்கி
மருவியுடன் றொழிற்படுத்துப் புலன்கொளுவி வீடுதவு மாட்சித் தாகி
நிருமலமா யழிவறநின் றோங்கொளியாய் நனிவிளங்கி நிகழும் வேதத்
தொருமுதலாம் பதியொன்றே யன்னதுநா மேவுயிரி னுண்மை கூறின். (௫௯)

அரிபளிங்கிற் பற்றியவை தாமாய்ச்சத் தசத்தும்பாத் தறிசத் தாகித்
தெரிவசிப்ப வருநிறைவாய் மூவகையெண் ணிலவாய்நித் தியமாய் நாளும்
பரியிருளு மொளியுமலாக் கண்ணியல்பா யுறுநம்மாற் பகருஞ் சுத்தி
விரியவமைந் தின்பமொன்றே யுறுவனசிற் றுணர்வினவாம் வெம்பா சந்தான்.

ஒன்றுயெண் ணருமாற்ற லுடைத்தாய்நித் தியமாய்ச்செம் புறுமா சொப்பா
தொன்றாய்நம் மருளினு னீங்குவதிக் கருமலத்தின் றொடர்ச்சி நீங்க [ய்த்
நன்றாய தனுவாதி தருமாயை யுணவாக நவிலுங் கன்ம
மென்றாய மூன்றொடுமா யேயநிகழ் திரோதாயி யிரண்டுங் கூட்ட. (௬௧)

ஆயமல மைந்தாகு மவற்றினொடு பழவினையு மாண வத்தின்
மேயவொரு முதனுநமக் கில்லையான் மாவிற்கே விரியுமாயை
யேயகன்ம நமதருளல் லாமலா விக்கென்று மியங்கா வாகுந்
தாயமல பந்தவுயிர்க் கிப்பந்தம் பொருத்தலப்பந் தந்தீர்த் தற்கே. (௬௨)

மாசுகழித் திடப்புடைவைக் குவரூட்டு திறம்போலும் வைய மாதி
வீசுப்டைப் பளிப்பழிப்பு மறைப்பதுநீக் குதலாய வினையோ ரைந்துந்
தேசுமலர் மிசையுறைவான் முதலியவை வகைகொடுநாஞ் செயவு மோர்நா
மேசுவிகா ரம்பண்டயே மவிகார வியல்பினுக்கோ ரீறின் றாமால். (௬௩)

விடமரவை யெவன்செய்யுந் தீயினைச்சூ டெவன்செயுமிவ் விதமே போல
வடருநெடு மாயையெம துடைமையா யினுமயக்க மாற்றா தெம்மைத்
தொடர்தருமிந் திரஞாலம் புரிபவனை மயக்குவதோ தொடங்கான் மாவை
யிடர்செய்மல மயக்காதேன் மாயையுங்கண் மூமயக்கா விரிந்து போகும். ()

தெளிசிவமா யகாமு நமைநீங்கா வருளாஞ்சத் தி|மான் மாவுந்
களிதிரோ தாயியும்பிற் பமோமுற் பமேலத்தின் கருமை தேய
வளிகெழுநஞ் சத்திகலப் புறுங்கலப்பப் புண்ணியமே லாகு மாக
வுளிமலவா கமும்பிறக்குஞ் சத்திபதி தரும்பின்வினை யொப்பு மேவும். (௬௫)

அன்னதுசார் தரமலமென் றறைந்ததிரோ தாயியருளாயே நிற்கு
மன்னவது ஞான்மூல மலத்தொலைவ தல்லாமன் மற்றொன் றுண்டோ
சொன்னவெம திச்சைமுதன் மூன்றுமுயி ரிச்சைமுதற் றொக்க மூன்றும்
புண்ணவிளக் கம்புரிந்து வியாப்பியமாக் குபுமேலாய்ப் படரு மன்றே. (௬௬)

அருளினைமை யுந்தனையு மறிந்தவுயிர் கதிரோகெண் ணணைர்தாற் போலத்
தெருளினைம துள்ளடங்கி யாணந்த மொன்றுமே நிலையா நிற்கு
மருளில்யான் முதலென்ற லருளின்யான் முதலென்றன் மாறி மாறாப்
பொருளினருண் முதலென்ற லிலமூர்த்த றவிர்ந்தெம்மைப் புணர்தன் முத்தி.

முன்னமே யழிந்ததுசஞ் சிதமேறு வினையுளதேன் முற்றா தாகுஞ்
சொன்னவா ரருளினுன் வாதலைமெய் யியங்களவுந் தோன்றா நிற்கு
மன்னதுமஞ் செழுத்தைவிதிப் படிகணிக்கப் போகமையா லயமுன் மூன்றிற்
பின்னமற வழிபடுதல் சிவன்முத்தி பரமுத்திப் பேறு மீண்டே. (கஅ)

என்றுதிரு வாய்மலர்ந்து தொகுத்துரைத்த வனைத்தும்விரித் தியம்பிற் றாக
நன்றுபலித் திடுகவென நகைமுகத்தி னருளூட்ட நல்க லோடும்
வென்றுமிளிர் திருவாத வூர்முனிவர் மனங்கரைந்து மெய்பொ டிப்பத்
துன்றுமல ரடியின்முடி தோய்தரவீழ்ந் தெழுந்துநின்று துதிப்ப தானார். ()

வேறு.

தொழுபவ ரொருபாற் றுதிப்பவ ரொருபாற் றுதித்துள நெக்குநெக் குருகி, யழுபவ ரொருபா லிவரெலா நிற்க வடியனேன் றனைப்பிடித் தாண் டாய், பழுதினின் கருணைத் திறத்தையென் புகல்கோ பாண்டிநா டியற்றிய தவத்தாற், கொழுமலர்ச் சோலைத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந் தருள் பரனே. (எ0)

உள்ளுதோ றிழிபை யுள்ளுபு பவஞ்சத் துழிதரூஉ வொதுங்கிய வெனக்கு
மள்ளுதோ றன்பூ றாக்கையொன் றருளி யாண்டுகொண் டனையிது தகுமே
விள்ளுதோ றப்பா லாய்ப்பொலிந் தோங்கும் விமலனே விமலமார் சிந்தை
கொள்ளுதோ றுவக்குந் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே.

வழிவழி யடிமை யுவர்திலேன் மலடு மலர்க்கரங் கன்றிடக் கறந்து [மோ
கழிதுய ரடைந்து கிடக்கின்ற வெனையுங் கண்டுகொண் டாண்டதெத் திற
மொழிதடு மாற நெஞ்சநெக் குருக முனிவறத் தொடர்பவர் முதலே னே.
கொழிமலர்ப் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பர

ஏலவே யொருப்பட் டெற்றைக்கும் பாழுக் கிறைத்தொரு பயனுமில் லேனைச்
சீலமா முனிவர் திருக்குழாத் தோடுஞ் சேர்த்துநீ யாண்டது தகுமே
காலகா லாகங் காளவே தாள கணம்புடை சூழ்தர நடிப்பாய்
கோலமார் செல்வத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. ()

கனிவிள விருக்கக் காய்கவர்ந் துண்ட கள்வனு மென்னையும் பற்றி
முனிவரு முனிவர் கூட்டத்து ளொருசார் முனிவறக் கூடுமா றளித்தாய்
புனிதமென் கனியே புந்தியூ றமுதே பொங்குமா னந்தவான் பெருக்கே
குனிகொடி மாடத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே. ()

சவைப்படு மவனித் துயிலுணக் கொள்ளார் தொழுத்தையேன் றனைவலிந் திழு
தவையிலா னந்த வமுதமூட் டினையா னைகவினைத் திமெடி யேற்குந் [த்து
கவையழ லடைந்த மெழுகென வுருகக் கற்றநற் றவருளத் துணையே [னே.
குவைமலர்ப் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பர

திருநெடு மாலன் றொருகரு மாவாய்த் திண்புவி பாதல மிடப்புற்
றொருவற முயன்றுங் காணரு மலர்த்தா ளுத்தையேன் றலைக்கெளி தாமோ
வருமணி விளக்கே யானந்தப் பிழம்பே யளிகனிந் தெழுசுவைக் கனியே
குருமணி மாடத் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே.(எக)

அண்டரு முனிவர் கணங்களு மற்றை யவர்களு நறுமுறப் படைய
வண்டரு மலர்த்தா ளென்கருந் தலைக்கு மணிமுடி யாயதற் புதமே
பண்டரு மொழியாள் பங்கவோ மேலாம் பரமவோ பரவியெஞ் ஞான்றுங்
கொண்டலின் முழவார் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே.

என்னைநா னறியே னையகோ பகலோ டிரவெனப் படுவது மறியேன்
முன்னைநான் செய்த தவமெவ னென்னை முழுமதோன் மத்தனுக் கினையா
லன்னையே யப்பா வொப்பிலா மணியே யடியவர்க் கெய்ப்பினில் வைப்பே
கொன்னைமா மதில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே.

செம்மையொன் றில்லாச் சிறியனேன் கவலை தீர்தர யோகநா யகியா
மம்மையோ டெழுந்து வந்தினி தாண்டா யான்மநா யகவதற் கடியே [கோ
ளிம்மையே செயுங்கைம் மாறெவன் மறுமை யேனுமொன் றில்லையென் செய்
கொம்மைமா மதில்சூழ் திருப்பெருந் துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே.

இன்னணந் துதிக்கும் வாதவூர் முனிவ ரிருந்துதி திருச்செவி யேற்று
முன்னவர் மலர்ப்பைங் குருந்தடி யமர்ந்தார் முனிவிலாப் பேரருள் பொங்க
மன்னநன் மணியே வார்த்தையாய்த் திரண்டு வருமொரு காரணக் குறியா
லன்னமா ணிக்க வாசக ரெனும்பே ராகவின் றுதியென் றறைந்தார். (அ0)

அதுசெவி யேற்று நெஞ்சநெக் குருகி யடிக்கடி தாண்மிசைப் பணிந்தே
யிதுபெறுந் தரத்த னேவடி நாயே னெரிமணிப் பொலன்றவி சொன்று
கதுமென ஞமலிக் கிடுவது மியல்போ கடையன்பா லெக்குணங் கண்டாய்
மதுமலர்க் கழுநீர் மாலிகைத் தடந்தோள் வள்ளலே யெனப்பணிந் தெழுந்தார்.

அடியனேன் கொரணர்ந்த செம்பொருண் முழுது மையநின் னுலயத் திறுக்கு
முடிவினின் னிடப்பால் வீற்றிருந் தருள்வாண் முனிவிலா தமர்திருத் தளிக்குங்
கடிவினின் னடியர் குழாத்திற்கு மாகக் கைக்கொளல் வேண்டுமென் றிரப்ப
நெடியமா லின்னு முணர்தரா ரதற்கு நேர்ந்தன ராயருள் செய்தார். (அ௨)

வேண்டுவோர் வேண்டு வதனையே நல்கும் விமலனூர் திருவருள் பெற்றுத்
தாண்டுவாம் புரவி கொளக்கொடு வந்த சாற்றரும் பெரும்பொரு ளெல்லா
மீண்டுமா தளிநண் பணிசெய வல்லா ரியாவருங் கொள்கவென் றிறைத்துப்
பாண்டுநீற் றொளியெம் மண்ணலார் கோயிற் பணிசெயு முயற்சிய ராஞர். ()

உருக்கிவார்த் தன்ன தூணமு நெடிதா யோடுபு திகழ்கொடுங் கையுந்
தருக்கிமே லெழல்போற் றலெய்டுப் பமைந்த தம்பவிம் பங்களு மழகு
பெருக்கியோர் படித்தா யிடந்தொறு மலமர்ந்து பிறங்குமுத் தாங்களு மாசு
கருக்கிவார் பலகை பரப்பிய தென்னக் கவினுறப் பாவுபல் கல்லும். (அச)

இவைமுத லமைத்துக் குருந்தகன் னீழ லிருந்தபொற் சபைமுதற் புதுக்கிக்
குவைமலர்க் குழல்யோ காம்பிகை யமருங் கோயிலும் புதுக்கிமற் றிவைசூழ்
நவையின்மண் டபமு நகுதிரு மதிலு நக்கபொன் செய்தகோ புரமுஞ்
செவையுறச் செய்து முடித்தன்ர ழற்போர்த் தீர்த்தத்தின் படிகளு ம்மைத்தார்.

புனிதராய்த் தொண்டு புரியும்மூன் றூறு பூசுரர்க் கிருக்கையுஞ் சைவ
முனிவ ருறையத் தக்கமா மடமு முனிவிலா லயப்பணிக் குரிய
வினியரா யுள்ள மற்றைய ரமரு மிருக்கையு மினிதுற வமைத்துப்
பனிமலர்ப் பொழிலு நந்தன வனமும் பலவிளை நிலங்களு மாக்கி. (அசு)

எஞ்சிய பொருளை யாலயத் துள்ளா லியைத்திடு மொருகரு வூலந்
துஞ்சிய விருத்தி யான்மகா யகர்தக் தொக்கவைப் பாலிஃ தெவரு
மஞ்சிய காவல் வீரபத் திரரே யன்னதுங் காக்கவென் றோதி
விஞ்சிய புகழெம் வாதவூ ரடிகள் வேறிடத் தமர்ந்துயோ கிருந்தார். (அஎ)

ஆயவக் காலைப் பாண்டியன் றமரா யடைந்தவர் யாவருங் கூடி
மேயமற் றிவரென் செய்தன ரந்தோ வேந்தர்தம் பொருள்விட மன்றோ
தூயநற் புரவி கொண்டதெங் கெனினென் சொல்லுவார் மிகத்தெரி யிவரே
பாயவித் தகாத தொழிறலைநின் றீற் பரிப்பவு ரார்மனு நீதி. (அஅ)

என்றுரைந் துருகிச் சென்றவ ரடிதாழ்ந் தியாவரு மெழுந்துகை குவித்து
நன்றுசெய் தில்லீ ரையரே யரசர் நகுபொரு ளமைனிலுங் கொடிதால்
வென்றுமேம் பயெல் குதிரைகொள் ளுவதெவ் விதமெனப் பன்முறை விளம்ப
வொன்றுமாங் குணரா திருந்தன ரனையா ருரைப்பதிற் பயனிலை யென்றா. ()

மீண்டுதம் மிருக்கை புக்கன ரின்றே வேந்தனுக் கறிவியோ மென்னி
னீண்டுமிக் குற்ற நம்மதே யாமென் றெண்ணுபு வாதவூ ரமைச்சர்
தாண்டுவெம் பரிமாக் கொளக்கொடு வந்த தனமெலாம் வேறுறப் போக்கித்
தூண்டுமோ னத்தி லிருப்பரென் றெழுதித் தூதுபோக் கினார சனுக்கே. ()

சென்றது துவர்வெங் காலினுங் கடித்து சென்றபாண் டியனவைப் புகுந்து
நன்றவாய் வணங்கி முடங்கன்முன் வைப்ப நகைமுடி வேந்தனு மதனை
யொன்றவோர்ந் துரையென் றொருவனை யேவ வுவனிரு கைகுவித் தேந்தி
வென்றசீ ரமைச்சர் தஞ்செய லனைத்தும் விரித்துரை செய்தனன் மாதோ.()

பழிதப வரசர் காரிய நடாத்தும் பண்புசால் வாதவூ ரமைச்சர்
செழிபொருண் முழுதும் வேறுவே றாகச் செலவுசெய் தாரெனல் கேட்டுக்
கழிசினம் பெருகக் கண்சிவப் பேறக் கடுமொழி யுடையவ னாகி
யொழிவரு மற்றை யமைச்சரை நோக்கி யுறத்துடி துடித்திவை பகர்வான்.()

வாதவூ ரமைச்சர் செய்கையிற் றென்னின் மற்றினி யாரைநம் பிடலா
மேதமே யொருவர் தம்மைநம் பிடுகை யெனவவர் நாணமுற் றகன்றார்
போதவங் குள்ளா ரியாவரும் விலகிப் போயினு ரச்சமேற் கொண்டே
காதர முறமற் றொருவனின் றனைக் கடிதொரு முடங்கறீட் டென்றான். ()

வழுதியர் பெருமா னெழுதிய முடங்கல் வாதவூ ரமைச்சர்கண் காண்க
முழுநிதிக் குவையோ டெய்தினி ரதற்கு மொய்பரி கொண்டிலீ ரெனினச்
செழுவயப் பரியோ டெய்தலா மின்றேற் செம்பொனோ டெய்தலா மொன்று
தழுவிலீ ரெனின்மேல் வருவது நமக்குச் சாற்றவும் வேண்டுமோ கொல்லோ.

என்றெடுத் தெழுதிக் கயலிலச் சினையு மிட்டொரு தூதனைக் கொடுத்துச்
சென்றுநீ வாத வூரர்பாற் சேர்த்துத் திருமுகென் றுரைத்தன னுரைப்ப
வன்றவன் றொழுது வாங்குபு காலே யாமிவன் காலென விரைந்து [டான்.
மன்றலங் குருந்தப் பெருந்துறை யடைந்தான் வாதவூ ரமைச்சரைக் கண்

திருமுகங் கொடுத்தான் வாங்கிமுற் றுணர்ந்த சிவானந்தச் செல்வராங் கெழுந்து, குருமணி முன்போய்ப் பணிந்துகை தலைமேற் குவித்தெதிர் நின் றெனை யாண்ட, வொருபாஞ் சுடரே பாண்டிய னோலை யுய்த்தனன் கடுஞ் சினத் தினனாய், வருமிதற் கடியே னென்செய்கோ வென்ன வள்ளலார் வாய் மலர்ந் தருள்வார். (கூ)

ஒன்றுமஞ் சற்க வாவணி மூலத் துறுபரி யனைத்துங்கொண் டணைவா
நன்றவை காண வழுதியர் பெருமா னனியுள மகிழ்தரு மின்னும்
வென்றமை பரிகட் கிலாயமும் பிறவும் விசாலமா வமைத்திடல் வேண்டு
மென்றுரைத் திடுமுற் சிறப்பொடு மதுரைக் கேகுமின் னேயென் வுரைத்தார்.

உரைத்தசொற் றலைமேற் கொடுபணிந் தைய ரொய்யென வான்மகா யகரை
விரைத்தபூங் குழல்யோ காம்பிகைத் தாயை மேவுபு தாழ்ந்துதாழ்ந் தெழுந்து
புரைத்தபொன் மாட மாளிகை சூழ்ந்து புந்தியை யாவயி னிறுவி
யிரைத்தபல் லியமு மியம்பத்தன் படைதன் னியவிடத் தடைந்தனர் மன்னோ.

பரிகரி முதலாம் படைகடங் கிடத்துப் படர்ந்தாம் வாதவூ ரையர்
தெரிதர வினைத்துத் திருக்கணு ளேக்கிச் சேனைகா வலரையு நோக்கி
விரிபுகழ் மதுரை மீனவன் முன்ன மேவுவா மியாமின்னே நீருந்
தெரிதர விரைவி னெழுகென வெடுத்துச் செப்பினர் போக்கொருப் பட்டார்.

பொருதொழிற் பகைஞ ருடறுவைத் தெழுவேற் புரூரவா மன்னவ ரேறே
கருமலச் செருக்கு வாதவூ ரையர் காமரு பெருந்துறை நகர்சார்ந்
தொருவிரல் லுபதே சம்பெறு திறத்தை யுரைத்தன மதுரையை யடைந்து
வெருவரும் பரிகள்செலுத்திமீனவன்பால்விடைபெற்றதிறனுமேலுரைப்பாம்.

உ ப தே ச ப் ப ட ல மு ற் றி ற் று.

ஆகத்திருவிருத்தம் ௧௨௨௩.

---

## மதுரையையடைந்து விடை பெற்றபடலம்.

துளிவளர் கண்ணீர் மல்கத் தொழுதகை தலைமே லேற
வளிவளர் குருந்த நீழ லடைந்துப தேசம் பெற்றே
யொளிவளர் மூர்த்தி யாகி யுலைக்குமுப் பாழும் போக்கித்
தெளிவளர் முழுப்பாழ் பெற்ற செல்வரைச் சிந்தித் துய்வாம். (௧)

குடைகொடிக் காடு மல்கக் குஞ்சர முழக்கம் பொங்க
வடைபரி மாவு தேரு மார்த்தன முன்பின் போத
விடைவெளி யின்றி வீர ரெங்கணு நெருங்கிச் செல்ல
வுடையவ ரன்ப ரம்பொற் சிவிகையூர்ந் தூடு சென்றார். (௨)

திரையம ருலகுங் கொற்றி செறிந்தம ருலகுங் கான
நிரையம ருலகும் வானந் தடவிட நீண்டு போய
வரையம ருலகு மோடை மடுக்குளம் பழன் மாதிப்
புரையம ருலகு நீத்துப் பொருக்கென மதுரை சார்ந்தார். (௩)

செங்கன கத்தாற் செய்த திருப்பெருங் கோயி லுட்புக்
கெங்கணு மொளிப ரப்பு மிந்திர விமானத் துள்ளா
லங்கயற் கண்ணி யோடு மமர்ந்தவர் பாதம் போற்றி
மங்கள வழுதி கோயி லடைந்தனர் வாத வூரர். (௪)

மீனவர் பிரானை முன்னங் காணுமா கண்டார் மேன்மே
லானபே ருவப்ப னாகி யளவளா யிருக்கை நல்கி
மானமா வருமோ பொன்னே வந்ததோ வெனவி னவத்
தேனிவர் மொழிய மைச்ச ரின்னன செப்ப லுற்றார். (௫)

கொண்டுபோம் பொன்னை லீமாக் கொடுவரு வார்க்கே யீர்தேன்
கண்டுபா ரிரவி சிங்கங் கண்டுசென் மதிமூ லத்தில்
வண்டுசா ருரா யீண்டு வரும்பரி யனைத்தும் வேரு
வண்டுநீ ரோடை மற்று மந்திர மமைக்க வென்ருர். (௬)

என்றது முண்மை யன்றி யியம்பிடார் வேருன் றென்று
கன்றலின் மனத்த ளுகிக் கவுரிய னுவகை பூத்தான்
மூன்றமர் வரைந்த தேற்ற முறைநீக்குள நாணம் பூண்டா
னன்றமை மெய்ம்மை கூறி னியாவரே நயக்கி லாதார். (௭)

ஆவணி மூல நாளு மணித்தாக வணையா நிற்கு
மாவணி காண்பா மென்னு மருப்பெரு மகிழ்ச்சி பூத்துக்
கோவணி செம்பொ னுடை குருமணிப் பதக்க நல்கிச்
சேவணி கொடியா ரன்பர் தமைச்செலச் செலுத்தி னைல். (௮)

சொழுதிவண் டுளர்ந்து பைந்தேன் கூட்டுணு மலங்கற் றிண்டோள்
வழுதிபால் வரிசை பெற்று மாமணிச் சிவிகை யேறி
யெழுதியா வரும்ப டிக்கு மிரும்புகழ் வாத வூரர்
பழுதிறம் மிருக்கை புக்கார் பரவுமெம் முளத்தும் புக்கார். (௯)

இசைபடு மூல முன்ரு ளென்னுமிந் திரனுண் மேவ
வசைபடு மொருவன் றென்னர் மன்னவன் முன்ன ரெய்திக்
குலசைபடு பரிக ளுனா யெய்துதல் கூடுங் கொல்லோ
நசைபடு மொழியே சொன்னுர் நயம்பட வமைச்ச ரென்ருன். (௧0)

அன்னவ னச்சொற் கூற வரிமருத் தனனுந் தென்னர்
மன்னவன் மனந்தி ரிந்து வன்கணுர் சிலரைக் கூவிச்
சொன்னசொற் பிழைத்த வாத வூரரைத் தொடர்ந்து பற்றிப்
பன்னரும் பாடி காவற் படுத்திப்பொன் வாங்கு மென்ருன். (௧௧)

வரைசெய்தோள் வழுதி யிவ்வா றுரைத்தலும் வன்க ணுள
ருரைசெய்நம் மடிக டம்மை யுரைத்தவப் படியே செய்தார்
திரைசெய்நீர் ஞாலங் காணத் தேசிக னுகி யாண்டார்
புரைசெய்கன் மலர்ப்பொற் பாதம் போற்றினர் துதிக்க லுற்ருர். (௧௨)

வேறு.

பஞ்சாதி மறைபகர்ந்த பரமவோ பைங்குலைநெற்
செஞ்சாதி விளைபழனப் பெருந்துறைமா தேவவோ
நஞ்சாதி யுண்டயன்மா யனைப்புரந்த நம்பவோ
வஞ்சாதி யென்றளித்தாய் கைவிடுத லழகேயோ. (௧௩)

விடையேனை முகிலூரும் பெருந்துறைவாழ் விமலவோ
வடையேனை யடைக்கலமென் றையையோ பெரும்பொய்யே
யுடையேனைக் கிறிசற்று முடையேனை நாயான
கடையேனை யாட்கொண்டுங் கைவிடுதல் அழகேயோ. (கச)

எண்ணுவோ வரும்வளஞ்சால் பெருந்துறைவா ழீசவோ
வண்ணுவோ வரியயனு மணுகரிய வொருபாகம்
பெண்ணுவோ கழைகுழைத்தான் பிறங்குடல நீறாக்குங்
கண்ணுவோ வாட்கொண்டுங் கைவிடுதல் அழகேயோ. (கரு)

மைவிடா விழியுமையாள் வாமத்தாய் வளச்சாலி
செய்விடாப் பெருவளஞ்சால் பெருந்துறைவாழ் செல்வத்தாய்
பைவிடாப் பூணணிவாய் பற்றின்றிக் கலந்தாரைக்
கைவிடா யடியேனைக் கைவிடுதல் அழகேயோ. (கசு)

திருவடிசூட் டிடப்பெற்றுஞ் செம்மையிலாத் தென்றிசைக்கோன்
பொருவவே ளுயினேன் புகல்வதெவன் பெருந்துறையா
யருவருக்கும் பிரபஞ்சத் தலையாமே யடைந்தார்தங்
கருவறுப்பாய் நாயேனைக் கைவிடுதல் அழகேயோ. (கஎ)

வேறு.

என்றுநைந் திரங்கு மோதை யிருசெவி யேற லோடு
மன்றுபைங் குருந்த நீழ லாண்டவர் தரியா ராகிக்
கன்றிரங் கோதை கேட்ட கறவைபோற் பதைப தைத்துத்
துன்றுதங் கணத்தி னோரைப் பார்த்திது சொல்ல லுற்றார். (கஅ)

மூலநா ளின்று மேய தன்பரை முடிக்கோ மாறன்
சாலவுந் முனியா முன்னர்த் தாம்பரி செலுத்தல் வேண்டு
ஞாலமீ துள்ள வாய நரியெலா மொருங்கு சேர்த்துக்
கோலவாங் குதிரை யாக்கிக் கொண்டுபின் னீவிர் யாரும். (கக)

வாம்பரி மள்ள ராகி மற்றுமப் பரிமேற் கொண்டே
தேம்புத லின்றிச் சென்மின் செழுமறைப் பரிமேற் கொண்டு
தோம்படா நாமு நாப்பட் டோன்றுவோ மென்ன லோடு
மாம்பரி சென்றெல் லோரு மவ்வண்ண மமைந்தா ரன்றே. (௨௦)

நரிகளைப் பரிக ளாக்கி நாபெல் கணத்தி னோரும்
பரியுகைத் திடுவோ ராகிப் பூர்ந்தமை பார்த்தெம் மையர்
தெரிமறைப் புரவி மேலாற் றிகழ்தலைச் சாத்து முன்னு
விரிதரப் புனைந்து தாமோர் வீரராய் நடுவட் போவார். (௨க)

கூற்றுருக் கொண்டா லன்ன கொலைமைய கொடிய தாய
காற்றுருக் கொண்டா லன்ன கடுப்பின வடவைத் தீயே
ஏற்றுருக் கொண்டா லன்ன விழியின வசனி யாய
வேற்றுருக் கொண்டா லன்ன முழக்கின விவுளி யெல்லாம். (உ௨)

ஒள்ளிய கரிய பல்ல வுறுசிவப் புற்ற பல்ல
தெள்ளிய பொன்னி றத்திற் சிவணிமேற் றூய பல்ல
வெள்ளிய நிறத்த பல்ல மிச்சிரம் வாய்ந்த பல்ல
புள்ளிய பஞ்ச வன்னம் பொலிதர வடைந்த பல்ல. (உ௩)

வல்லிய முட்கப் பாய்வ மல்லர்நெஞ் சுட்கப் பாய்வ
சொல்லிய முயல்க ளெல்லாந் தோற்றன வுட்கப் பாய்வ
கொல்லிய வெழுந்த கூற்றிற் கொழுவிடை யுட்கப் பாய்வ
புல்லிய மற்று முள்ள கதியவிண் போதப் பாய்வ. (உ௪)

வெய்யவாள் கொடுமு கத்து வெட்டினு மெதிர்த்துச் செல்வ
வையமே லுள்ள கோட்டை மதிலெலாந் தாண்டிச் செல்வ
மெய்யவாய்த் துறந்தோ ருள்ளின் விரைந்தொரு நெறியே செல்வ
செய்யபோர்க் களத்து மாற்றார் திருமுடி யிடறிச் செல்வ. (உ௫)

நிரையெழு குதிரைக் கூட்ட நிமிர்ந்தடி வைக்குந் தோறும்
வரைபரல் பட்ட கான மரந்துகள் பட்ட பண்ணைத்
தரைமுழு வதும்வெம் பாலைத் தரையெனப் பட்ட தாளா
லுரைசெய்வ தென்னை மேல்விண் ணுலகுமண் ணுலகா யிற்றே. (உ௬)

அடுபரிக் கூட்ட மிவ்வா றணைந்தொரு மதுரை சூழ்போ
யுடுவொடு மதிலுந் தாண்டி யுள்வயிற் புக்க சில்ல
நெடுமதில் வாயி லூடு நெருக்குபு புகுந்த சில்ல
கொடுவரி யெனமேற் றாவி மாடமேற் குதித்த சில்ல. (உ௭)

தளியக் வீதி யுள்ளுந் தளிப்புற வீதி யுள்ளுங்
களிகிளர் திருத்தே ரோடுங் காமரு வீதி யுள்ளும்
வெளியொடு முடுக்க ருள்ளு மிகுகடை வீதி யுள்ளுந்
தெளிதரு சதுக்கத் துள்ளுஞ் சிலைத்தெழு குதிரைக் கூட்டம். (உ௮)

மறையவ ராதி நால்வர் மாளிகை வாயின் முன்னு
மறைபுறக் குடிக ளானு ரமருமில் வாயின் முன்னுங்
குறைவின்மற் றிடங்க ளெங்குங் குதிரையாய் நிரம்ப லாலே
நிறைபெரு மயக்கம் பூண்டார் நெடுநகர் மாந்தர் யாரும். (உ௯)

சனமியங் காத வண்ணந் தார்ப்பரி தனைத லோடு
மனமயங் குற்றுச் சில்லோர் மாறன்முன் னோடிச் சொற்று
ரனகமிக் குள்ள தூய வமைச்சருக் கலக்கண் செய்தோ
மென்னினர் தென்செய் தோமென் றிரங்குபு பதைத்தான் வேந்தன். (௩0)

சிறந்தவர் தம்மை யேவிச் சிவிகையி னேற்றி யெம்மு
னறந்தவா வாத வூரெம் மமைச்சரைக் கொணர்மி னென்னப்
பறந்தவர் சென்றவ் வாறு கொணர்தலும் பரிந்து நோக்கி
யுறந்தவென் றீமை கொள்ளீ ரென்றுப சரித்தா னன்றே. (௩க)

முன்னநீ ருரைத்த வாறே மூலநா ளின்றே வந்து
பன்னருங் குதிரை யெல்லாம் பரந்தன நகர மெங்கு
மின்னவை யியக்க வல்ல தலைவரா ரியம்பு மென்று
னன்னதா யறியேன் யானு மென்றன னறிந்த நீரார். (௩உ)

அரிமருத் தனனு ளின்றே யறிதரல் விழைந்தே னென்னப்
பரியுகைத் திடுசில் லோரைப் பார்த்துங்க டலைவர் தம்மைத்
தெரிதரக் காட்டு மென்று தெரிந்தமர் திரியார் கூறக்
கரியுரி போர்த்த வீரர் கமெம்பரி யுகைத்துச் செல்வார். (௩௩)

சுட்டுதற் கரிய சோதி சூழ்பரிப் பாகர் சுட்டப்
பட்டுநேர் வருத னோக்கிப் பாண்டியன் பதைத்தெ ழுந்து
கட்டுவிட் டிலகு சோதி யிதுவெனக் கைகு வித்தா
னெட்டுவிட் டிடாப்பெ ருந்த னுள்ளமு முருகி நின்றான். (௩௪)

மறுவலு மெம்பி ரான்செய் மாயையா லென்னே யிந்தத்
தெறுபரி மேல்வந் தாற்கண் டெழுந்தனன் செங்கை கூப்பி
முறுவலொன் னலர்க்குன் டாக வென்றுள முன்னி முன்னி
யறுதியி னுணம் பூப்ப வெழுந்தவா றமைந்து நின்றான். (௩௫)

இருடபு மமைச்சர் நம்பால் டாரத்தி லெடுத்துச் சென்ற
பொருளள வைக்கு மேலாப் போந்தன பரியென் றெண்ணித்
தெருடர விவையெ லாமெத் தேயத்து நின்று வந்த
வருள்கெழு மமைச்ச ரேயா னறிதரல் வேட்டே னென்றான். (௩௬)

என்றுரை யாடு முன்ன ரெழுதரும் பரிமா மேலா
ரொன்றுரை யுடைக் கேண்மோ வுரவுநீர் ஞாலங் காப்போய்
நன்றுரை வாத வூரர் நமக்குத வியசெம் பொன்னு
லின்றுரை கடந்த வாசி யித்தனை யுங்கொ ணர்ந்தோம். (௩எ)

இவையிவை யிவ்வித் தேய மிவ்வயிவை யிவ்வி யல்ல
விவைபகல் விசயங் கொள்ளு மிவையிரா விசயங் கொள்ளு
மிவையிரு போதுங் கொள்ளு மிவைபெற லரிய யார்க்கு
மிவையெலாந் தெரிதி யாலென் றியைதர வெடுத்துக் கூறி. (௩௮)

இன்னவாம் பரிய னைத்து மின்றுநீ கொள்ளிற் பாண்டி
மன்னவா நினவே நாளை வருபவைக் குடம்பு டேம்யாஞ்
சொன்னவா துணிபே யென்று தின்னெனக் கயிறு மாறிப்
பன்னவாம் பரிநீத் தெல்லாப் பரிகளுங் கொடுத்தா ரன்றே. (௩௯)

பொருந்துறு மிலாயஞ் சேர்த்துப் போக்கதங் கணங்க ளோடும்
பெருந்துறை வந்து சேர்ந்தார் பெருமறைப் பரிமேற் சென்று
ளருந்தமி ழாளி யாருக் குவகைசெய் தமரிற் போக்கி
யிருந்தனன் றென்னர் கோமா னெண்ணருங் களிப்பின் மூழ்கி. (௪௦)

வேறு.

வாதவூ ரடிகண் முன்னிலை யாக வழுதியர் பெருந்தகை யன்பாஞ்
சாதநீர் துளைதல் கருதியோ வந்தி தனக்கருள் செய்வது குறித்தோ
வேதவாம் புரவி மேற்கொடு வந்த வித்தக ரற்றைநா ளிரவே
போதவாம் பரியா யினவெலா நரியாய்ப் போதர நினைத்தனர் மன்னோ. (௪௧)

அரையிராப் பொழுது நண்ணலும் பரியா யினவெலா நரிகளாய்க் குழுமி
விரைதரச் சூழு மென்னமா மாய மிடைகுறுங் காட்டிடைப் பயில்யா
முரைபரி யாகி மனித்தரைச் சுமந்தா மொருசிறைப் புகுந்துங்கட் டுண்டாம்
புரைபடு கடலை முற்கங்கொள் ளுண்டாம் புகர்படு மோநஞ்சா திக்கே. (௪௨)

கொத்தைநா கந்தோ நினைக்கவா யூறுங் கோதிலா நந்தென்று பெறவோ[சம்
மித்தைதயன் றியுஞெண் டிலைகொலோ வென்று மிடுவணப் பிணநுகர் பெருஞ்
பித்தையென் றடைவோம் பண்ணிய தவத்தாற் பண்டுருப் பெற்றனம் வள்ளி
யத்தைசேய் வழிக்கோன் றமர்தெரி தருமூ னகறலே கருமமென் றெழுந்து.

ஓடின சில்ல தாவின சில்ல வூளையிட் டேறின சில்ல
நாடின வாய்முற் குதிரையுண் டுத்து நகக்கடித் திழுத்தன சில்ல
கூடின குடரைப் பறித்தன சில்ல குருதியை நக்கின சில்ல
வீடின முனமுள் ளவைகளு மெனவி டாதூறு புரிந்தன சில்ல. (௪௪)

தெருவெலா மிகலன் சதுக்கத்து மூளன் சிறமுடுக் கரும்பல வொண்டன்
மருவிய மாட மனைத்துங்கோ மாயு வாவியங் கரையெலா மேர்ரி
பெருமுழ வதிரு மரங்கத்துஞ் சம்பு பேசமெங் கணுஞ்சிரு காலன்
கருதுமுற் பகலிற் பரியென மலிந்த கருதிராப் பொழுதிடை நரியே. (௪௫)

நகருளார் விழித்தா ரலக்கண்மிக் குற்று நடுங்கினு ரனையருட் சில்லோ
ரிகல்வலி மாறன் கண்படை கொள்ளு மிடம்புகுந் தனர்முறை யிட்டார்
பகல்வரு பரியெ லாநரி யாகிப் பரவியூ ரிழைத்திடு மென்ப [டான்.
நகறா வுணர்ந்தான் மிகத்துடி துடித்தா னமைச்சர்மே லதிசினங் கொண்

வஞ்சமிக் கியற்று மமைச்சனைப் பற்றி வன்சிறைப் படுத்தியா வோரு [தார்
மஞ்சமிக் கொறுத்தெம் பொருளெலாங் கவர்மி னென்றன னவரது செய்
நெஞ்சநெக் குருகிக் குருந்தடி யிருந்த நிமலனை நினைந்தன ரிருந்தார்
தஞ்சமுற் றவர்க்காப் பெருந்துறை வையைத் தடாநதி பெருகிட நினைந்தார்.

புட்விமுற் றகழ்ந்து பாதலம் புகுத்தப் போந்தநீ ரனவையை பெருகித்
தட்வியன் கரைகண் முழுமையு முடைத்துச் சார்ந்தது வெள்ளமா நகரு
ளிடவிய வீதி யெங்கணும் வெள்ள மிரும்பொன்மா ளிகையெலாம் வெள்ள
மடவியர் பயிலு மரங்கெலாம் வெள்ள மற்றெங்கும் வெள்ளமா கியதால்.(சஅ

மகவினை யெடுப்பார் மாடமே லிவர்வார் மற்றிதுஞ் சாயுமே யென்பார்
தகவினை யமைந்த மன்னவ னீதி தவறின னெனப் புகல்வார்
நகவினை நடாத்து மமைச்சனை யொறுக்க நயந்ததால் விளைந்ததீ தென்பார்
பகவினை யொறுக்குஞ் சொக்கநா யகர்க்கும் பாங்குகொ லித்திற மென்பார்.

வளமலி கூட லின்னண மறுக வாதவூ ரமைச்சனைச் சிறைவைத்
தளவற விருந்தார் தந்தமர்க் காப்பா ராய்ந்தகை விட்டன ரகன்றூர்
களமினெஞ் செங்க ளடிகளா ரிதுவுங் கண்ணுத லாரரு ளென்றே
யுளமுறக் குறித்தா ரும்பர்கோன் கோயி லுற்றன ரியோகமுற் றிருந்தார். ()

தினகா னுதிக்கு முன்னரே செழியன் செழுமணி முகப்பிடை வந்து
கனமிகு மமைச்ச ராதிய ராய காரியம் பார்ப்பவர்க் கூவி
வனமலை பெயர்த்து வருபுனல் வையை வண்கரை முழுவது முயரச்
சனமுழு மைக்கு மளந்துவிட் டடைக்குந் தகுதிசெய் வீரெனப் பணித்தான்.

புத்தியென் றமைச்ச ராதிய ரெழுந்து பொருக்கெனக் குடிமுழு தெழுதி[தார்
யொத்தியல் குடிகட் கொவ்வொரு கோலென் றறவளந் தடைக்குமா விடுத்
பத்தியிற் பலாலம் பரப்புவார் சில்லோர் பரிகிறத் தூபுதழை பரப்பிப்
பொத்திய மண்ணைச் சொரிகுவார் சில்லோர் போக்கற மிழுவார் சில்லோர்.

வெட்டுவர் சில்லோர் வெட்டுமண் கூடை மிதப்புறக் கொண்டுபோ யுடைப்பிற், கொட்டுவர் சில்லோர் கொட்டிய மண்ணுற் குறியுடைப் பொழிதாத் திண்டோ, டட்டுவர் சில்லோர் தகைப்பரு முனிவு தலைக்கொள லன்னை யென் றிறைஞ்சிக், கிட்டுவர் சில்லோர் பாம்புக ளுருட்டிக் கிடத்திநீர் கிறத்துவர் சில்லோர். (ருடு)

இவ்விதங் கரைமுற் றடைபடுங் காலை யிலகுமம் மதுரைமா நகர்வாழ்
செவ்விய ளொருத்தி நரைத்தமூ தாட்டி திங்களா பிரந்தொழு துள்ளா
ளவ்விய மின்றிப் பிட்டுவிற் றுண்பா ளதுசெவைப் பிட்டினை முன்னே
சவ்விய வன்பிற் கண்ணுதற் கருத்திக் கரிசறப் பின்புவிற் றிடுவாள். (கச)

வந்தியென் றுரைக்கும் பெயரினு டனக்கு வரைந்தகோ லளவடைத் திடுமாண்
முந்தியெங் கணுகா டியும்பெறு கில்லாண் மூனியுமே யரசனென் றஞ்சி
நந்திய துயரத் தழுந்தவா டினமு நகப்படைப் பதுகிவே தனங்கொ
ளந்தியொண் ணிறத்தெம் பிரானடி சிந்தித் தாவலித் திரங்கிடுங் காலை. (கரு)

பழங்கலை யுணரார் பழங்கலை யொன்று பற்றுபு திருவரை சூழ்ந்து [துச்.
குழங்கலை யிண்டை நிகர்சுமை யடைமேற் கூடையொன் றுறம்படி கவிழ்த்
சழங்கலை யுறுமற் சமைத்தமண் வெட்டி தாரணி தோண்மிசைக் கிடத்தி
முழங்கலு வையைக் கரையடை யாளாய் முந்தினுர் முந்தரா யுள்ளார். (கசு)

அடியவன் மனைமுன் புகுந்தனர் கூலி யமைதரக் கொடுத்தொரு வேலை
தடிதரா தென்பாற் கொள்ளுந ருளரோ சாற்றிட லாமென வினவ
வடிதராக் கவலை யழுந்துவா ளிந்த வார்த்தைகேட் டனுமுவந் தெழுந்தாள்[ள்.
படியவாம் வையைக் கரையெனக் களந்த பங்கடைப் பாய்கொலோ வென்று

என்றலுங் கூலி யாதுநீ தருவா யென்றனர் வெந்தைதா னிடுவே
ஞென்றமற் றதனை யேற்றுநீ வேலை யொருங்குசெய் திடுகென வுரைத்தாள்
பின்றலில் கூலி யதுவெனி னின்னே பெரும்பசி தீர்தரக் கொடுத்தா
னன்றமை தரவுண் டினிப்பொரீஇ வேலை நவிற்றிடு வேனென் னின்றார். (கஅ)

தெள்ளிய பொழுதி லட்டசிற் றுண்டி சிக்கடை பொதிதப வுடையா [ள்
வள்ளிமற் றதனிற் கலப்பவுங் கலந்தே யருந்தப்பா வெனக்கொளார்க் கிட்டா
வெள்ளிவெள் விடையார் துகில்விரித் தேற்று விரைந்தர வெடுத்துவாய்ப் பெ
நள்ளிய வினையா ளன்பொடு சேர்த்து நயந்தின ரமுதுசெய் திடுவார். [ய்து

சுடுதலிற் கதுப்பி னுெதுக்குவா ரென்ன சுவையிதிப் பிட்டெனப் பகர்வார்
விடுதலி லிஃதிட் டவட்குநா மியற்றும் வேலைமற் றிதுகொலோ வென்பா
ரடுதலிற் பொலிமற் றிதுபர சிவனுக் கர்ப்பண மாமெனப் புகழ்வார்
தடுவரி விருப்பி னமுதுண்டு வேலைத் தலைப்புகு வேனெனப் போந்தார். (௩0)

சென்றவர் யானே வந்தியா ளென்று தெரிதரக் கணக்கிடைக் குறிப்பித்
தொன்றமற் றவ்வூக் களந்தபங் கெதுவென் றுறவினு யிதுவென்னத் தெரிந்து
நின்றவர் வியப்ப வெட்டுவார் வெட்டி நிரம்பிய கூடைமண் கொடுபோ
யன்றலின் வேற்றுப் பங்கிடைக் கொட்டி யடைபடக் கண்டுவேர் திடுவார். ()

விரைதர வந்தி பங்கினுங் கொட்டி வெள்ளநீர் கரைத்திடக் கண்டு
புரையுற கரைப்பார் மீளவுஞ் சுமந்து போகட்டுப் போகட்டுப் பார்ப்பார்
கரைபட லின்றிக் கரைபட லுணர்ந்து கையுறக் கொட்டுபு குதிப்பார் [ப்பார்.
புரையுற வேற்றுப் பங்கடை கரையும் பொருக்கெனக் கனாதல்கண்டுவெப்

வேலையித் திறஞ்செய் திளைத்தவர் போன்று மீளவும் வந்திபாற் சென்று
மாலையெம் மன்னாய் நினக்களந் திட்ட வன்கரை யடைபடு கின்ற
தாலைய மின்றே கனிபசித் தடைந்தே னட்டபிட் டிடுகென்றா ரினிய
பாலைமிக் கடைந்தாண் மறுவலு மிடமுன் பான்மையி னேற்றனர் நடந்தார்.

தலையுறா வேலைத் தலைமரீஇ யாங்கோர் சாரிருந் தமுதுசெய் திடுவார்
கலைபுரிந் தெதிர்ப்பட் டவர்க்குநன் கருளி நாடவர் வேலையுந் தவிர்ப்பார்
பலையுறா தவரு மிவர்வழிச் சேறல் பார்த்ததி காரிகள் புடைப்ப
வலையுறா தொருங்கு மகிழுவா ரிவ்வா றுடியங் குறப்பயில் காலை. (கசச)

வந்தியான் வந்தி யாளெனக் கணக்கில் வரைவித்தான் கூலியுங் கொண்டான்
சிந்தியான் வேலைத் திறமனுத் துணையுஞ் செப்புநம் வார்த்தையு மேலான்
புந்தியா னளத்தற் கரியவ னென்னப் பொலிகுவா னியாவனோ வினைய
னந்தியா மெவன்செய் குவதென மருண்டார் நாடுமவ் வினைத்தலை நின்றார்.()

அதுபொழு தரிமர்த் தனத்திறல் வழுதி யடைகரை நோக்குவா னுன்ற
முதுமதி யமைச்ச ராதிய ரோடு முன்னினு னடைபட்ட துணர்ந்து
குதுகல முற்றா னுடைப்புமா றுத கொள்கையோ ரிடத்திடைக் கண்டே
யிதுகரை படாத தென்னென வெகுண்டா னிதற்குரி யவனெவ னென்றான்.

வழுதிதன் சினங்கண் டஞ்சின ரெவரும் வந்திதன் பங்கது வடைப்பா [ளான்
னெழுதுவித் தொருவ னடைந்தனன் வேலை யியற்றில னிசைப்பதுங் கொள்
பழுதின்மற் றவன்றன் வடிவினை நோக்கிப் பயந்தன மடிக்கவு மடிகேண்
முழுதுமுன் மத்த னெனநின்றா னென்று மொழிந்தனரொருவனேர்வணங்கி.

அன்னவன் யாவ னெனவயன் மாலா லருமறை யாலளந் தறியா
முன்னவன் றனைக்கை தொட்டிழுத் தரசன் முன்னுற நிறுத்தினர் சில்லோர்
பின்னவன் றனைப்பார்த் தேடகிற் களந்த பெருங்கரை யடைத்திலை யென்றம்
மன்னவன் வினவப் பராமுகஞ் செய்து வள்ளலார் நிற்பது கண்டு. (கசஅ)

ஒருகையிற் பிரம்பு வாங்கின னோக்கி யொய்யென வெரிநிடைப் புடைத்தான்
மருவுமப் பிரம்பி னடியடித் தவனும் வழுதிதன் முதுகிடைப் பட்ட
திருமைமற் றவன்பன் னியர்க்கெலாம் பட்ட திளஞ்சிறார் தமக்கெலாம் பட்ட
தருமதி யமைச்சர் தமக்கெலாம் பட்ட பட்டதாங் குள்ளவர் பலர்க்கும்.(கசக)

அரியயன் மகவா னமரர்பன் முனிவ ரவுணரி ராக்கதர் சித்தர்
கரிகிம் புருடர் வித்தியா தரரோரான் கருடர்சா ரணருர கேசர் [குந்
விரிசுருத் தவரெண் வசுக்கண்மற் றியார்க்கும் விலங்குபுண் முதலிய வுயிர்க்
தரிகரு வுயிர்க்கும் பட்டதெவ் விடத்துந் தாம்வியா பித்துள்ளார் தழும்பு. (எ0)

பொருக்கென வாங்கோர் கூடைமண் ணெடுத்துப் போகட்டுக் கரையுடைப் பொழித்துத், திருக்குறன் னுதலின் மறைத்தவர் மறைந்தார் செழியர்கோ னுயிரங் கூடை, நெருக்கிமே லிடினு நிரம்புறு வுடைப்போர் கூடையா னிரம்பிய திறனுஞ், சருக்கரை யளாம்பிட் டளித்தவள் விமானர் தழீஇமிசை யுலகுபோந் திறனும். (எக)

தானடி பட்ட திறனுமாங் குள்ள தன்றம ராயினர் பலரும்
யானடி பட்டேன் யானடி பட்டே னெனப்பதை பதைத்திடு திறனு
மேனடி பட்டா மேனடி பட்டா மெனநக ரிரங்கிடு திறனுங்
கானடி பட்ட கிம்பமா லிகையான் கருதினன் மயங்கிடு காலை. (எஉ)

வள்ளலா காய வாணியால் வழுதி மன்னவ வாதவூ ரமைச்ச
ரெள்ளலா காநின் பொருளெலா நமக்கே யீந்தன ரஃதுண ராயா
யுள்ளலா காத வினைசெய்தாய் நரியை யுறும்பரி யாக்கிமாற் றினம்பின் [ராம்.
கொள்ளலாத் தீங்கு பினுஞ்செய்தா யந்தோ குறிக்கொளா வதுபொறுக் கலா

வெள்ளநீர் பெருக்கி யலக்கணுற் றுபுமேல் விட்டா வன்புநம் பாலே
யுள்ளவன் பொருட்டா ளாகிமண் சுமந்தே யுனதுகைப் பிரம்படி யேற்றோம்
பள்ளநீ ருலகில் வாதவூ ரமைச்சன் பரிந்துனக் குறுதியே செய்தான்
கள்ளமி லவனிச் சையின்வழி யியங்கக் கைகுவித் தியக்குதி யென்றார். (எச)

என்றசொற் செவியி லேறலும் பிழைத்தே னென்செய்தே னென்றழு திரங்கி, நன்றமை வழுதி யடிக்கடி தொழுது நாயனார் பேரரு ணினைந்து, கன்றலி லமைச்சர் முன்புபோய்ப் பணிந்து கைகுவித் தெழுந்துநின் றடிகேள், புன்றரத் தடியேன் செய்பிழை யனைத்தும் பொறுத்திடி னுய்வனென் றிரந்தான். (எரு)

மன்னவர் மன்ன கேண்மதி நின்னை மற்றுநான் சார்ந்தகா ரணத்தான்
முன்னவ ரருள்பெற் றுய்ந்தன னீயென் பிழைத்தனை மொழிதியா லென்றத்
தென்னவர் கேர்முன் கோவணங் கீளிற் செறிதரப் புனைந்தன ரெழுந்த [ன்.
ரென்னவர் களுங்கண் டிரங்கநல் லமைச்ச ரிறையவன் பணிந்தனன் விடுத்தா

வாதவூ ரிறைவர் மதுரையை யடைந்து வழுதியர் பிரான்விடை பெற்றுப், போதமேற் பொலியத் துறவுபூண் டெழுந்த புண்ணியக் கதைதொகுத் துரைத்தாஞ், சீதநீர்ப் பழனப் பெருந்துறை முதலாத் திருத்தல மனைத்துங்கண் டிறைஞ்சி, யோதவார் தில்லை புகுந்துபுத் தரைவென் றோங்கொளி கலந்தவா றுரைப்பாம். (எஎ)

மதுரையையடைந்து விடைபெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் கரு00.

---

# தில்லையையடைந்தபடலம்.



ஆரருள் வடிவ மாய வன்னையார் திருக்கண் சாத்தச்
சீரரு ளம்ப லத்திற் றிருநட நவிலு வாரே
பேரரு ளொடுகை யேடு பிடித்தெழு திட்டப ணித்தார்
காரரு ளடியா ரோடு நமையெழு தவும்ப ணிப்பார். (௧)

யாவருங் காணு மாறே துறவுகொண் டெழுந்த வையர்
தாவருஞ் சுந்த ரேசர் சந்நிதி முன்னந் தாழ்ந்து
மேவரும் பெருந்து றைப்பான் மேவினர் குருந்த நீழ
லோவருங் குரவற் காணா ரொய்யெனப் பதைத்து வீழ்ந்தார். (௨)

அழுதழு தரற்றி யேங்கி யையகோ வைய கோவிப்
பழுதுறு பாவி யேனைத் தனிவிட்டுப் பாதம் பற்றித்
தொழுதுயு மடியா ரோடு மெங்கொளித் தனையோ சோரு
மிழுதையேற் கிரங்கா வண்ண மென்னையென் பிழைத்தே னென்பார். (௩)

பிறைமுடிக் கணிந்த வேணிப் பிஞ்ஞக ரன்பு சாலாக்
குறையுடை யாரும் பாடிற் கொண்டருள் சுரத்த லெண்ணி
மறைபுகழ் நமச்சி வாய வாழ்கவென் றெடுத்துக் கொண்டு
முறைபெரு கன்பு பொங்க வாசக மொழிய லுற்றார். (௪)

அண்ணல்வந் தருளை நல்கு மற்புத மறியே னென்று
மெண்ணரு மதிச யங்கண் டாமென்று மெனது நெஞ்சந்
திண்ணறக் குழைத்தா யென்றுஞ் சென்னிமன் னுந்தா ளென்று
மொண்ணல னின்னைக் காண்ட லுறவாசைப் பட்டே னென்றும். (௫)

உய்தரேன் வாழே னென்று முன்னடைக் கலமே யென்றுஞ்
செய்வதொன் றறியே னாயேன் செத்திலே னாவா வென்றும்
பொய்யமை யாத நின்றாள் புணருநா ளெந்நா ளென்று
மெய்துமா றழைக்கி னீய தெந்தவென் றருளா யென்றும். (௬)

திகழ்திரு வார்த்தை யெண்ணந் திருப்பள்ளி யெழுச்சி யாதி
நிகழிவை பலவும் பாடி நெஞ்சநெக் குருகி நிற்கப்
புகழ்பர னடியார் சூழ்ந்து போற்றவெள் விடைமேற் றோன்றி
யிகழ்வரு மழனீர் நாப்ப ணழலெழ வெண்ணி னாரால். (௭)

மற்றதி லியாரு மூழ்கு மாகடைக் கணித்தா ரன்னர்
சொற்றவா முழுகி யன்பிற் சூழ்கண நாத ராகிப்
பொற்றமே லுலகிற் புக்கார் வாதவூர்ப் புனிதர் தம்மை
யுற்றதில் லையினீ வாவென் றுரைத்தனர் மறைந்தா ரன்றே. (அ)

தில்லைவா வென்று ரென்னே திருவுள மென்றி ரங்கி
யொல்லைதாழ்ந் தெழுந்து மெய்தா னரும்பியென் றுறவெ டுத்து
வல்லையோர் சதகம் பாடி விடைபெற்று வணங்கிப் போந்தார்
கொல்லையா னுகைப்பார் மேய வுத்தர கோச மங்கை. (கூ)

விருப்புற வாங்கு நீத்தல் விண்ணப்ப மருளிச் செய்யக்
குருப்பொலி சடையா ராண்ட குருந்தமர் வடிவங் காட்ட
வருப்புயர் காதல் பொங்க வடிபணிந் தாங்கு நின்று
மருப்பயின் மலர்நீர்ப் பாண்டி மருஉந்தலு மெலாஞ்சே வித்து. (கய)

சென்னிநன் னூடு புக்குத் திருவிடை மருதூர் தாழ்ந்து
மன்னியம் பிகையோர் பாகர் மகிழ்ந்தம ராரூ ரெய்தி
யின்னியற் புலம் லோதி யிருங்கழு மலத்தைச் சார்ந்து
பன்னிய புகழ்ப்பி டித்த பத்தரு ளிச்செய் தாரால். (கக)

அணிகிளர் சென்னி நாட்டி லாவடு துறையா னைக்கா
மணிகிள ரீங்கோய் வெற்பு வாஞ்சிய மறைக்கா டாதிக்
கணிகிளர் தலங்க ளெல்லாங் கண்டுகண் டிறைஞ்சிப் போற்றித்
துணிகிளர் பெண்ணை சூழு நடுநாடு தொழப்புக் காரால். (கஉ)

முதுகிரி வெண்ணெய் நல்லூர் மொய்புக ழதிகை நாளும்
பதுமமே விருப்பான் போற்றும் பாதிரிப் புலியூ ராதி
கதுமெனக் கண்டு போற்றிக் கைகுவித் திறைஞ்சிச் சென்றார்
புதுமதி முடித்தா ரேயாய்ப் பொலியண்ணா மலையின் மாதோ. (கங)

ஆவயிற் றிருவெம் பாவை யம்மானை யருளிச் செய்து
தூவயிற் சூலத் தார்முற் றோற்றிய கோலங் காட்ட
நாவயிற் புகழ்ந்து போற்றி நலமலி தொண்டை நாட்டிற்
சேவயிற் பொலிவார் மன்னுந் திருவேகாம் பரம்ப ணிந்து. (கச)

காமரு மந்நாட் டுள்ள காளத்தி யாதி யாய
தேமருங் கொன்றை யார்தந் தலமெலாஞ் சென்று போற்றிப்
பூமருங் கழுக்குன் றத்திற் புகுந்தருட் குரவன் கோலந்
தாமரும் படிநேர் கண்டு தண்டமிழ் மணக்கப் பாடி. (கரு)

ஆண்டவர் தில்லை வாவென் றருளிய தம்பி னேர்ந்து
பூண்டபல் கானுங் குன்றும் பொருபுன லதியு நீத்துச்
சேண்டவப் பொலியா நிற்குந் திருச்சிற்றம் பலம்பு குந்து
காண்டல்பெற் றடங்கா வன்பிற் கண்டபத் தருளிச் செய்து. (கசு)

திருக்குலாப் பத்துங் கோயிற் றிருப்பதி கம்மி ரண்டு
மருக்குலா மகவன் மூன்றும் வண்பொற்சுண் ணந்தெள் ளேண
மிருக்குலா வுந்தி யார்தோ ணோக்கம்பூ வல்லி யின்னுங்
குருக்குலாந் திருப்பொன் னூசல் கோத்தும்பி யன்னைப் பத்து. (கஎ)

கூவிய குயிற்பத் தச்சப் பத்துக்கோ தறுத சாங்க
மேவிய விவைகள் பாடி விடாதான் னடனம் போற்றிப்
பாவிய பலரும் போற்றப் பண்புசா லத்த லத்தே
பூவியல் பன்ன சாலை யொன்றுநிற் போந்தி ருப்பார். (கஅ)

ஆயவக் காலைத் தில்லை யம்பல நின்றும் போந்த
தூயவ ரொருவர் சொல்லாற் றண்ணெனுங் கலக முற்றுப்
பாயவீ ழத்தி லுள்ள பவுத்தர்கள் பல்லோ ரோடு
மேயவா சிரியன் வந்தான் வேந்தனுங் கூட மேவ. (ககூ)

வந்தவன் புலியூர் நாப்பண் மலர்செறி பள்ளி யுள்ளான்
முந்தவெங் கழாக்கால் வைத்த முறையென வமர்ந்து கொண்டே
யிந்தவம் பலத்தி னுள்ளா விருத்துவேன் போதி மேய
வுந்தமி லாநந் தேவை யென்றறைந் துறக்கு றைப்பான். (உ0)

பொங்குவண் டில்லை மேய பூசுர ரதுபொ றாரா
யங்கவ னெதிர்போய்ச் சேற்றி லமையவிட் டெறிகற் போலத்
தங்குபல் வாய்மை சொற்றுந் தகாவுரை வருத னோக்கி
யிங்குநாய்க் கெதிர்கு ரைப்பா ரிலையென விலகி னூரால். (உக)

விலகிய வந்த ணாளர் வெவ்விய பவுத்தர் செய்யுங்
கலகமு மவர்சார் புள்ள காவலன் வரவுந் தீட்டி
யலர்புகழ் மன்று ளீயிங் கணைதரி னன்று மென்று
ளிலையொடு முடங்க லுய்த்தார் சென்னிமேற் கொண்டு சென்னி. (உஉ)

மறுதின மாங்கு மேவி மறையவர் தம்மைப் போற்றிக்
குறுமுய லகன்வெரீ இன்று குயிற்றுவான் னடமும் போற்றி ;
வெறுவிய பவுத்தர் செய்யுங் கலகமும் விளங்கக் கேட்டுத்
திருவுமகா தேவ ருள்ளார் செவ்வியீர் கவலீ ரென்றான். (உங)

ஆயவவ் விரவே செம்பொ னம்பலத் தாடு மையர்
தூயுமு வாயி ரர்க்குந் தனித்தனி கனவிற் றோன்றி
மாயமி லாமா ணிக்க வாசகர் சார்பு கொண்டாற்
றீயவிப் பவுத்தர் தம்மை வெல்வீரென் றருளிச் செய்தார். (உ௪)

அந்தண ரொருங்கு கூடி யையர்தா மருளிச் செய்த
சந்தவின் மொழியுட் கொண்டு நயந்திறை யவனுக்குங் கூறி
முந்தவங் கடைந்தார் ஞான முதல்வனைக் கண்டார் நீவிர்
நொந்தயர்ந் தடைந்த தென்னோ நவலுவீர் கடிதி னென்றார். (உ௫)

நெறிதவ றீழ தேய நின்றும்பல் பவுத்தர் தங்கள்
குறியர சோடும் போந்து குலவுநம் புலியூர்த் தங்கி
யறிவுரு நம்பி ரானை யகற்றியம் பலத்திற் போதி
செறிபவன் றனைத்தா பித்தல் செப்பினு ருழனு கின்றார். (உ௬)

அன்னவர் கலக மெம்மா லறிந்துநீர் நன்று டாளு
மன்னனு மிங்கு வந்து மருவினு னனையார் முன்போய்
நென்னனு முரைத்தோஞ் சில்ல நேரல ரெறிந்து சொற்றார்
பின்னர்யா மென்செய் வோநம் பிரானையே யெண்ணி நொந்தோம். (உ௭)

ஆடுதல் வல்ல வைய ரருளினெங் கனவிற் றோன்றி
வாடுத லொழிமி னீவிர் மாணிக்க வாச கப்பேர்
நீடுத லுள்ளார் சார்பு நேர்பெறி னவரால் வெற்றி
கூடுதல் பெறுவீ ரென்றா ரவ்வுரை கூற வந்தோம். (உ௮)

என்றன ரிவர்மா ணிக்க வாசக ரென்ப தோரா
ரன்றெமை யாண்டா ரன்றி யாரறிந் தனரென் றுய்ந்து
நின்றமை யவரே யிந்த நான்மறை யவரெ லாமெண்
ணின்றவுண் ணினைந்தெ ழுந்தா ரவரொடு மொப்பி லாதார். (உ௯)

வந்துபொன் னம்ப லத்தை வலஞ்செய்து தொழுதுட் புக்கு
நந்துபல் லுலகு மேத்த நடஞ்செய்வா ரனுளைப் பெற்று
முந்துதாழ்ந் தெழுசோ ரேட்டு முதுபுகழ் மன்ன ரோடு
முந்துமோர் மண்ட பம்புக் குறைந்தனர் வாத வூரர். (௩0)

புண்ணிய நீறு பூசாப் புலையரை நோ்பா ரோமென்
றெண்ணிய வாத வூர ரெழினியு ளினித மர்ந்து
திண்ணிய பவுத்த ரெல்லாஞ் சோவிங் கழைமி னென்ன
நண்ணிய சிலர்போய் வாதஞ் செய்யநண் ணுதிர்நீ ரென்றார். (௩௧)

சிலரஃ துரைத்த லோடு சீவரப் போர்வை யாளர்
பலருமற் றவருண் மேலாப் பகர்தரு குரவ னோடு
மலர்கண்மண் டபத்து வந்தா ரவர்வழி யிறையும் போந்தான்
மலர்புகழ் வாத ஊரர் வாதமே னடாத்த லுற்றார். (௫௨)

தெரிகலைப் புத்த ரேறே சிறுநரி யரியோ டேற்கும்
பரிசெனச் சைவர் தம்பால் வாதஞ்செய் பயன்மேற் கொண்டா
யரியநுங் கடவு ளாவா னெனையன்மற் றண்டயா நின்ற
விரிதரு மின்ப முத்தி யெனைத்துமேல் விளம்பு கென்றார். (௫௩)

தருமமாம் பிடக மோதிச் சாற்றுபல் யோனி தோறு
மருவிய பிறப்புற் றெல்லா வுயிர்க்குமாண் புறுதி செய்து
பருவர லெங்கு மோவப் பரதுக்க துக்கி யாகி
வருகொலை யொழிந்து போதி வாழ்பவன் கடவு ளாவான். (௫௪)

உருவம்வே தனைகு றிப்புப் பாவனை யொடுவிஞ் ஞான
மருவுமைங் கந்தங் கூடி யுணர்வுண்டாய் மாய்தல் பந்தங்
கருதுமக் கந்தம் பொன்றன் முத்தியிக் காமர் ஞானம்
வெருவருந் தவத்த ரல்லாற் பெறுவரோ வீண ரென்றான். (௫௫)

அறமுள தென்று நன்னூ லறைந்தன னிறைவ னென்றா
யுறவுற வுணர்வு தோன்றிக் கணத்திடை யொழியு மென்றாய்
திறமிகு பொருளுஞ் சொல்லுந் தேடுமு னுணர்வு மாயும்
பெறலரு நன்னூல் சொற்ற பெற்றியெத் திறத்திற் சொற்றி. (௫௬)

ஓதுபல் யோனி தோறு முதித்தெங்க ளிறைவன் றானே
தீதுசா ராது யிர்க்குச் செறிவிப்ப னுறுதி யென்றாய்
போதுபல் லுயிர்க்கு மாலைப் போக்குற நினைந்தோர் தாமே
மீதுபன் மாலை யேற்ற லொத்தது மிகவு நன்றே. (௫௭)

இறைபர துக்க துக்கி யென்றனை கணவந் தீர்ந்த
பிறைநுத லியர்தந் துக்கம் பேசருங் கண்ணி குத்திக்
குறைகொள்வார் துக்க நின்பே ரிறைதுக்க மென்று கோடி
யறையொரு கரமுன் கூடி யருளிய தழகிற் றாமே. (௫௮)

கொலையிலா னிறைவ னென்று கூறினை பிறக்கும் போதே
மலைவிறாய் வயிறு கீண்டு வந்தவ னறவ னன்றோ
புலையொழித் துணர்தி யின்னும் புலிமுத லாய காலை
கொலைதரு புல்லோ வுண்டா னிறைபல புத்த ரேறே. (௫௯)

திருந்துமைங் கந்தத் தோடு தேகமுங் கெட்ட காலைப்
பொருந்துநன் முத்தி யென்று புகன்றது பிடக மென்றாய்
வருந்தலி லிறைவ னுக்கு வடிவமின் றரசி னீழ
லிருந்தவோர் வடிவம் பந்தத் தேய்ந்ததோ மதியி லாதாய். (௪௦)

அழிதரிற் கந்த மைந்து முத்தியென் றறைந்தா யைந்து
மழிதரின் முத்தி பெற்றா ராரெனக் கடாவுங் காலை
யழிதரு மைந்தி னுண்டா முணர்வென வறையி னைந்து
மழிதர லிலையா முத்தி யாவது மிலையே யென்றார். (௪௧)

இவையுரைத் திடுகொற் சீறி யெரிசினங் கொண்டெல் லாரு
நவைசொல முயன்றார் ஞான நாதர்நா மகளை நோக்கிச்
செவையிலார் வாக்குஞ் சேர்வாய் சீரிய திதுவே யாழீய்
குவையென வன்று ணீங்கக் கொள்கைநீத் தூம ரானார். (௪௨)

பரியவர் சார்பி னின்ற பார்த்திப னீன்ற செல்வப்
புரிகுழ லுற்ற மூகை போக்கிய சமய மேயோர்
திரிபிலாச் சமய மந்தத் தெய்வமே தெய்வம் யானு
முரியன்மற் றதற்கே யென்றா னொய்யெனப் புத்த ரெல்லாம். (௪௩)

இறையவன் கைவி டாமை யெண்ணிமந் திரங்க ளெல்லா
மறைதப வுரைத்துப் புத்தா காவென வணங்கிப் பார்த்தார்
சிறைகொளிம் மூகை செவ்வாய் திறப்பதிங் கில்லை யிந்தத்
தறையிலிச் சமய மும்போ யிற்றெனச் சலித்தி ருந்தார். (௪௪)

அதுபொழு தார்த்தார் வேந்த னன்றதிச் சமய வாற்றல்
கதுமென மூகை யிந்தக் கன்னிகை யொழிவ ளாயி
னேதுபுரி தண்ட நுங்கட் கென்றனன் செக்கி லிட்டுக்
குதுகல நுமக்குண் டாகத் திரியென்றார் கொள்கை தீர்ந்தார். (௪௫)

வாதவூ ரிறைவர் முன்போய் வணங்கியிம் மூகை தீர்த்துச்
சாதமாஞ் சைவ மேன்மை சாதிக்க வேண்டு மென்னப்
போதநா யகரு மந்துப் பொற்கொடி வதன நோக்கி
யேதமே வாத நீறு கொடுத்திவை வினவ லுற்றார். (௪௬)

அறிவிலாப் புத்தர் முன்ன மறைசிவ நிந்தை யெல்லாஞ்
செறிதர வினவ வந்தச் செழுங்கொடி விடைகொடுத்தாண்
மறிதர மூகை தீர்ந்த வாதெரீஇ மகிழ்ந்தார் யாரு
முறிவிலாச் சாழ லாவவ் வினவிடை மொழிந்தா ளையர். (௪௭)

வாய்தமெ மாறி யந்த மடமையர் சொற்றூ வாறே
பாய்பெருஞ் செக்கி லிட்டுத் திரித்தனன் பல்லோர் தம்மைத்
தோய்புனற் பொன்னி நாடன் சூனுருப் புத்த ரெல்லாந்
தீயத ளுப்பண் மேவச் சிவரப் போர்வை வீசி. (௪௯)

வெண்டுகில் புனைந்தப் போதே வெண்ணீறு மணிந்து சைவ
வண்டுறை புகுந்தா ரீழ மன்னனுஞ் சைவ னானான்
மண்டுமென் போங்க வாத வூரனை வணங்கி யப்பாற்
றெண்டுகொண் டாடு மையர் சேவடி துதிக்க லுற்றான். (௫௰)

வேறு.

மணிவள ரொளியே மலர்வளர் மணமே வான்வளர் வாயுவே யென்னத்
துணிவள ரத்து விதம்பொலி சுடரே தூயவா னந்தவான் பெருக்கே [ளே
கணிவளர் கடுக்கை மதிநதி சடையிற் கலப்புறக் கொண்டவொண் பொரு
யணிவள ரமுதே யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫௰)

மண்ணிய மணியே மாசிலா முத்தே வான்பெருஞ் சுவையுடைக் கனியே
கண்ணிய முக்கட் காமரு கரும்பே கற்பனை கடந்தமா முதலே
யெண்ணிய வெண்ணி யாங்கடி யவரே யெய்தகன் கருளருட் கடலே
யண்ணிய திருச்சிற் றம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫க)

தலைவரு முதலே தற்பரப் பொருளே சம்புசங் கரமகா தேவ
கிலைவரு தேவே ஞாதரு ஞான ஞேயம்வே றெனப்பகுப் பாரு
மலைவரு மலையில் லென்றுனைப் பாரு மருவுதற் கரியசெஞ் சோதி
யலைவரு மமுதே யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫௨)

மருளறத் துமித்து வழுத்துமெய் யடியார் வாழ்தர வாழ்விக்கு முதலே
யிருண்மலத் தழுந்து மவருக்கப் பரிசே யெய்துறத் கரந்தமா மணியே
தெருளிடத் தொளியே செழுஞ்சுவைக் கனியே தெய்வவான் கற்பக தருவே
யருளுருப் பெரியா யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫௩)

செம்மையொன் றின்றிச் சிறியரோ டிணங்குஞ் சித்தைய றென்றுங்கா ணரியாய், கொம்மைவெள் விடையாய் கொண்டதோ லுடையாய் கூரிய முவிலைப் படையாய், மும்மைமா வுலகு மேத்திடப் பொலிவாய் முன்னிய முன்னியாங் களிப்பா, யம்மைகண் காண வம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫௪)

இடையறு வன்பு செய்பவ ருள்ளத் தெற்றைக்கு மொளிர்மணி விளக்கே
முடையறு வுடம்பு பொருளென மதியா முத்தர்தஞ் சித்தத்துட் டேனே
கடையறு மறையின் முடியமர் பொருளே காமரு பாதியில் லாதா
யடையறுப் பொழில்சூ ழம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (௫௫)

உறத்திரு வருளா லிறகுறப் பற்றி யுள்ளுவா ருள்ளொளிர் விளக்கே
கறப்பயில் கடுக்கை நதிமதி யரவு கருதலை மாலையென் பணிந்தாய்
சிறப்பொடு பூசை செய்துய வெங்குந் திருத்தல மாதிமூன் றுறு
யறப்பெருங் கடலே யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (கசு)

பொழிசுவைக் கனியே பொங்குமா ரமுதே போதவா னந்தமெய்ப் பொரு
வழிவழி யடிமை செய்பவ ரெய்ப்பில் வைப்புமா நிதியெனு மலையே [ளே
கழிவனப் புடைய வுமையொரு பாகக் கடவுளே கடவுள ரேறே
யழிவிலாச் சோதி யம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (கஎ)

இருவினை சிமிழ்க்க யாத்தலுண் டுழலா தினியமை யாண்டருண் முதலே
பொருவருஞ் சுடரே புண்ணியப் பொருளே பொங்கொளி ஞாயிறே மலருண்
மருவெனப் பொலிவாய் மாணிக்கக் கூத்தா மதிநில வூறிக்குஞ்செஞ்சடையா
யருள்பழுத் தொழுகு மம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே. (கஅ

குணங்கிளர் கடலே கோமளக் கொழுந்தே கொண்டன்மே னியனயன் முதலோர், வணங்குபொற் பாத மாணிக்க மலையே வரும்பவ மாற்றுமோர் மருந்தே, யிணங்குதீங் கனியே யெய்தரும் பொருளே யெற்றைக்கு மினிய தீம் பாகே, யணங்குகண் காண வம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே.()

வேறு.

இவ்வண்ணந் துதித்தல் செய்த வீழநா டாளு மன்னன்
செவ்வண்ண மருவுஞ் சைவ சிகாமணி யாகி வாழ்ந்தா
னவ்வண்ண முதல்வன் பொற்றா ளடைந்தமற் றையசொல் லாரு
மிவ்வண்ண மேயுய் வண்ண மெனறுணிந் துய்ந்தா ரன்றே. (சுo)

அவரவ ரிருக்கை மேவ வவரவர் தம்மைப் போக்கித்
துவரிதழ்க் கன்னி காணச் சுந்தர நடன மாடும்
பவர்படு சடையான் முன்போய்ப் பணிந்தருள் பெற்றுத் தாமே
யிவர்செழும் பன்ன சாலை யிருந்தனர் வாதவூரர். (சுக)

ஆயவர் நாளிற் செம்பொ னம்பலத் தாடு மைய
ரேயமா மறையோ ராகி யேடெழுத் தாணி கொண்டு
பாயமற் றவர்முன் சென்றார் பனவரே நீர்யா ரென்ன
மாயமில் பாண்டி நாட்டுப் பெருந்துறை வதிவோ மென்றார். (சுஉ)

வந்தகா ரியமென் னென்ன வாதவூ ரிறைவ ரேநீர்
பந்தநீத் துலக முய்யும் படியினி தருளிச் செய்த
சந்தவா சகம்வ ணார்ந்து போதற்குச் சமைந்து வந்தே
னந்தயா நிதியே யின்றே நயந்தருள் செய்வீ ரென்றார். (சுங)

என்றலு நமச்சி வாய முதலினி தமையக் கூறி
கன்றமை படையெ ழுச்சி நருபடை யாட்சி யச்சோ
வொன்றநின் றுலாவு றும்பத் தொத்தயாத் திரைப்பத் தோதிப்
பொன்றலி லெலாமு டித்தார் பூசுரர் பின்னுஞ் சொல்வார். (௬௪)

இயம்பிய வனைத்து மைய ரேயினி தெழுதிக் கொண்டே
னயம்படு கோவை யொன்று நவின்றிட வேண்டு மென்ன
வயம்படு மவரு முள்ள மகிழ்ந்தனர் பாடப் பாடச்
சயம்படு மறையோர் தாமும் வரைந்தனர் சலித்த லின்றி. (௬௫)

முற்றிய பின்மா ணிக்க வாசகர் மொழிந்த வாறே
பற்றிய வெழுதி னேனம் பலவாணன் கையெ ழுத்தென்
றொற்றிய தனது பேரு முலகறி தரவ வரைந்து
மற்றிய லேடு காப்புச் செய்துகைக் கொடும றைந்தார். (௬௬)

மறைந்தவர் போத வாதவூரருண் மயங்கி மன்று
ணிறைந்தவர் கொல்லோ வென்று நெஞ்சநெக் குருக வெங்கு
முறைந்தவர் மன்றுண் மேவி யுவந்தய னரிமுன் னோர்க்கு
யறைந்தனர் நம்பா லன்பன் பாடிய தறிதி ரென்று. (௬௭)

பின்னர்மைக் காப்புச் செய்து பிறங்குபுத் தகஞ்சேமித்து
கன்னரைத் தெழுத்தி னுமப் படிமிசை நயக்க வைத்தா
ரன்னதை மறுநாண் மூவா யிரருமாங் கமையக் கண்டு
தென்னவற் புதமென் றங்கை யேந்தினர் தலைமேற் கொண்டார். (௬௮)

திருமுறை யதைய விழ்த்துச் சிறப்புற வாதி யந்த
மொருமுறை நோக்கி னர்க ளுலகெலா முய்ய வாடும்
பெருமுறை யவர்தி ருக்கை யெழுத்தெனல் பிறங்கக் கண்டா
ரருமுறை யனையா ருற்ற மகிழ்ச்சியா ரளக்க வல்லார். (௬௯)

ஓங்குபொற் சிவிகை மேலா லொய்யென முறையை யேற்றித்
தேங்குபல் லியமு ழங்கத் திருவாத வூரார் முன்போ
யீங்கிது நமது பாட லெழுதினர் நம்மா னென்
றாங்குவைத் தஞ்ச லித்தா ரழுதழு தவருங் கண்டார். (௭௦)

முறையிதன் பொருளை யாங்க ளறியுமா மொழிவீ ரென்ன
விறைவளர் சபைமுன் சொல்வா மென்றவ ரோடுமாங் கெய்தி
நிறைபெரு நடஞ்செய் வாரே நிகழ்பொரு ளென்னக் காட்டி
மறைமுடி பெனுமுட் புக்கு மறைந்தனர் வாத வூரர். (௭௧)

ஒளிமய மாகத் தோன்ற வும்பர்பூ மழை பெய்தா
ரளிவள ரந்த ணாள ரனைவரு மஞ்ச லித்தார்
வளிவள ருலகி லானி மகஞ்சிறப் புற்ற தெங்குந்
தெளிவளர் சைவ மோங்கிச் சிறப்புற்று வாழ்ந்த தன்றே. (எஉ)

வாதவூ ரிறைவர் தில்லை மாநக ரடைந்த டைந்த
போதவா னந்தஞ் சொற்றும் புரூரவ மன்ன ரேறே
வோதவாம் பெருந்து றைக்க ணுற்றுன்ம நாத னாத்தாழ்ந்
தீதமை தரவுட் கோடி யெனமுனி விடைகொ டுத்தான். (எங)

திலலையயடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஙஎங.

---

# புரூரவன் பெருந்துறையடைந்து திருவிழாச்செய்தபடலம்.

தூய மணிவா சகரெனலிற் சுத்த மாயா காரியமுன்
னாய வசுத்த மாயாகா ரியமு மாக வமைந்ததனு
னேய மருவு தொண்டர்முன நிகழு நேய மருவாத
தீய வினையுஞ் சேர்த்துவப்பார் திகழு மனைய பெயர்படைத்தார். (க)

சாந்த குணத்துத் தவமியனூர் விடைபெற் றெழுந்து தண்பொதியில்
வேந்தன் புரக்கு நன்னாடு மேவு வாவிப் பெருந்துறையுட்
சார்ந்து நகர வளமுழுதுந் தன்கண் விடுத்து கனிநோக்கி
யார்ந்து நினைக்க முடியாதென் றீடங்கா மகிழ்ச்சி தலைக்கொண்டான். (உ)

மேய குரவன் சொற்றதினும் விசேட மாக விருந்ததிந்
தூய தலமென் றுவப்புற்றுச் சுகுண புரூர வாமன்ன
னாய தளிக்குப் புறத்தேழு மகத்தோ ரிரண்டு மாயமைந்த
பாய பெருந்தீர்த் தம்படிந்து பாங்கார் திருவெண் ணீறணிந்து. (ங)

கண்ணின் மணிமா லிகைபுனைந்து கருதைந் தெழுத்து முளங்கணித்து
மண்ணி னிழிவொன் றுவவாத மதமால் களிற்றி னடிபோற்றிப்
பண்ணின் மொழியோ காம்பிகைத்தாய் பாகங் கொண்ட பெருவாழ்வை
நண்ணி னகலா தொளிரான்ம நாத நாம வருட்கடலை. (ச)

கண்டு தொழுது சிவயோகக் கன்னி திருமுன் சென்றிறைஞ்சி
வண்டு படியு மலர்க்குருந்த மாமூ லமுங்கண் டினிதேத்தித்
தொண்டு புரிவார்க் கேயருளுந் தூய ருருவ முள்ளிருத்தி
விண்டு நிகர்மன் னவன்றனக்கோ ரிடமுண் டாக்கி வீற்றிருந்தான். (௬)

இருந்த மன்ன னித்தலந்தா னெண்ணி லாமான் மியத்ததாற்
பொருந்த விதற்குத் திருவிழாப் பொலிவி லாத திறமென்னோ
திருந்த வடைந்த வொருநாமே செய்வித் திறைஞ்சு வோமென்று
வருந்த வாச்சீர்ப் புரூரவா துயின்றான் மற்றை யவன்கனவில். (௭)

குருந்த நிழலா ரொருமறையோர் கோலங் கொண்டு நேர்தோன்றிப்
பொருந்த நமக்கு விழாச்செய்தல் புந்தி கொண்டா யதுதவிர்தி
பருந்த வாவு வேன்மன்ன பரிவி னம்மைப் பாடிவையத்
திருந்த வைத்த வாதவூர்ச் செம்ம லார்க்கத் தியற்றுவாய். (௮)

உற்ற யோக நாயகித னுளிசால் கோயிற் கெதிர்முகமாச்
சொற்ற சொக்க விநாயகர்தங் கீழ்பாற் றுலங்கு வடமுகமாப்
பொற்ற கோயி லொன்றமைத்துப் பொலிய வனையர் திருவுருவ
மற்ற மறக்கண் டதிற்றாபித் தாண்டிற் கிருகால் விழாச்செய்தி. (௯)

விடைவே தண்ட முதலாநாம் விரும்பு மூர்த்தி யெலாஞ்செய்வித்
தடைவே யவர்க்காக் குதியினுந்தண் டீச பதமீங் கருளினூந்
தொடையார் புயத்தா யிதுவேமற் றெமக்குஞ் சொலும்யோ காம்பிகைக்குங்
கடையா காத வுவப்புறுத்து மறியென் றுரைத்துக் கரந்தனரால். (௧௦)

என்று கருணைப் பெருமானு ரியம்பி மறைய வுடன்விழித்து
நன்று சிறியே னினைத்ததுவு நம்மான் கருணை யிருந்ததுமென்
றென்று பலகாற் பாராட்டி யினியார் பலர்க்கு மெடுத்தியம்பிக்
குன்று குழைத்தா ரியம்பியவா றூற்றுந் துணிபே குறிக்கொண்டான். (௧௦)

சினவின் மேரு வரையாகச் செய்த பெருமான் கருணையினாற்
கனவி லுரைத்த தானத்தே கனக மயத்தோர் தளியாக்கி
நனவி லெமக்கு வந்தருளு நல்லார் தமது திருவுருவந்
தனவில் விளங்கும் படிசமைத்தத் தளியிற் றாபித் தனனுளில். (௧௧)

ஆய்ந்த கருணை பொழிவிழியு மழகு பொலியுந் திருமுகமு
மேய்ந்த முறுவற் செவ்வாயு மிலையப் பொலியுங் குழைக்காதும்
வாய்ந்த வரைசெய் தடந்தோளு மார்பு மலர்க்கை களுமெம்முட்
டோய்ந்த துணைத்தாள் களுங்கண்டு தொழுது தொழுதய்ந் தவிதலகம். ()

வாத வூரர் வாசகமே வையத் தவர்தஞ் செவிகவரு
மேத மருவா மலரடியே யெந்த ஞான்று மனங்கவருஞ்
சீத மருவு செயலொன்றே தெளியச் செயலெ லாங்கவரும்
போத மருவுந் திருமேனிப் பொற்பே விழியெ லாங்கவரும். (கங)

உதிக்குங் குணப்ர விளங்கதிரு மொவ்வா வென்னு மணிமகுட
மதிக்கும் வயிரங் கால்யாத்த வாகு வலய மணிசெய்குழை
பதிக்கு மதாணி வெண்டாள மாலை வயிரம் பயில்கடகந்
திதிக்குந் தண்டை சிலம்புமுதற் றிருவா பரணம் பலசமைத்து. (கச)

குடையுங் கொடியு மொலியல்களுங் கோலுத் தண்டங் களுங்கோண
லடையுந் தண்டங் களுஞ்சிவிறி யால வட்டங் கவரிகளு
மிடையு மகர தோரணமும் விருதா வளிமற் றுளபலவு
மிடையு மதனு மீறமிலா விறைவ னுவப்ப வணிசெய்து. (கரு)

பரியுங் கனக சிவிகையுஞ்செம் பங்கிக் குறுந்தாட் பூதமும்வெங்
கரியு மிமிலேற் றிடபமுமொண் காமர் பழுத்த கயிலாய
கிரியுங் கனக மணித்தேருங் கிளக்கு மிவைமுன் னூர்தியெலாந்
தெரியும் பிரபை கொழுந்துவிடச் செய்து செய்து முடித்தனனால். (கசு)

பலவா நிறத்த நேத்திரமும் பைம்பொ னிழைசா லம்பரமு
நலமார் முத்த மணிகோத்து நகுமா றியற்று கலிங்கமும்பன்
னிலமார் பரிவட் டம்பலவு நீடு பிறவும் வருவித்துப்
புலமார் பஃறே யங்களுக்கும் பொருந்த முடங்கல் போக்குவான். (கஎ)

திருந்து குருந்தப் பெருந்துறையிற் றிகழ்மா ணிக்க வாசகர்க்குப்
பொருந்து மிதுன மதியமைந்து போந்து திகழுத் தரநாளில்
வருந்து தவிர்க்குந் தரிசனமா மற்றந் நாண்முற் பத்தாநாள்
விருந்து விழிக்காம் விழாவினுக்கி ரம மிதனை விழைந்துணர்க. (கஅ)

வந்து தரிசித் தெண்ணியவை யனைத்தும் பெறலா மெனவரைந்து
முந்து முடங்க லொடுதூது போக்க முனிவின் றரசரெலா
நந்து மகிழ்ச்சி யொடுமேற்று நண்ணு பரிச னங்களொடு
மிந்து தவழிற் பெருந்துறைவந் தெய்தி னார்க ணனியீண்டி. (ககூ)

வந்த வரசர் புரூரவா மன்னன் றனைக்கண் டடிபணிந்து
சந்த மருவும் பெருங்காத றழைத்து நிற்பப் புரூரவனு
மந்த மில்லாப் பேருவகை யமைய முகமன் பலகூறி
முந்த மருவு மவரவர்க்குத் தக்க விருக்கை முறைகொடுத்தான் (உ௦)

தெளிமா ணிக்க வாசகர்தந் திருநா ளின்று முதலென்று
களிகூர் வளமைப் பெருந்துறையில் வாணர் பலருங் கடைப்பிடிமின்
வளிசான் மறுகு மணிமாட மாதி வயங்க வலங்கரிமி
னொளிசார் தபவென் றறிவித்தா னொலிமிக் குறுமா முரசத்தால். (௨௧)

வாத வூரர் பெருமாற்கு வயங்கு திருநா ளெனக்கேட்டுச்
சீத வயல்சூழ் பெருந்துறையிற் றிருந்த வாழு மவரெல்லா
மோத முடியாப் பேருவகை யுற்றுப் பலவுஞ் சேகரித்துக்
காதன் மருவ வலங்கார முழுதுங் கவின வாற்றுவார். (௨௨)

வான மறைக்குங் காவணமிட் டதன்கீழ் வயங்குஞ் செம்பட்டா
லான விதானம் பொருந்துறயாத் தருசூழ் தாக்கொய் துகிறூக்கிக்
கான மெனச்செங் கழுக்கரும்பு கதலி கமுகு கால்யாத்து
மான விளநீர்க் குலைபலவா வயங்கத் தூக்கி யலங்கரித்தார். (௨௩)

வேதி யனைத்து நறும்பனிநீர் விராய சாந்தங் கொடுமெழுகி
யோதி முடியா முத்தமிடித் திற்ற பொடிக்கோ லம்புனையாச்
சோதி மணிப்பொற் சுடரமைத்துத் தூநீர் நிறைபொற் கும்பநிரீஇப்
போதி யலுமா தொடுத்தநறும் பொற்பூ மாலை கொடுபுனைந்தார். (௨௪)

முன்ன மணிந்த கலன்வெறுப்பார் முனிவில் புதிய கலன்பொறுப்பார்
மன்ன நவவண் கலையுடுப்பார் மலர்கள் கொய்து தொடைதொடுப்பா
ரன்ன நடையார் தமைச்சிறப்பித் தழகு பார்த்து நயந்தெரிவார்
சொன்ன மகளிர் நடம்புரிய நோக்கி மகிழ்விற் றுளைதருவார். (௨௫)

தெருவிற் புழுதி முழுதடங்கத் திருந்து பனிநீ ரிறைத்திடுவார்
பொருவிற் காமன் சமழ்ப்பெய்தத் தம்மைப் புனைந்து வெளிபயில்வார்
திருவிற் கொடுபோய் விருந்தினரைச் சிறப்ப வூட்டி யுபசரிப்பார்
மருவிற் பொலியுந் தொடைபுனைந்து வண்பாக் கிலையு நல்கிடுவார். (௨௬)

தங்க ளுறவா யுள்ளாரைத் தரிசித் திடுமா வரவழைப்பா
ரெங்க டவத்தான் மிகப்பெரிதா லிந்த விழாநோக் குறுமென்பா
ருங்க டவத்துக் கொப்பிலையென் றுற்றோர் நகரத் தனைப்புகழ்வார்
திங்க டவழு மாடமெலாந் திகழப் பலகொண் டலங்கரிப்பார் (௨௭)

கரிய குழல்யோ காம்பிகைக்குங் கருணை யான்ம நாதருக்குந்
தெரிய விழாச்செய் வதுகுறித்தான் செங்கோன் மன்ன னவன்கனவில்
விரிய மலர்செய் குருந்தநிழன் மேவி யவரே யெழுந்தருளிப்
பிரியம் வாத வூரருக்குப் பிறங்கச் செயலென் றூரென்பார். (௨௮)

செய்ய தமிழ்நாட் டுள்ளார்கள் யாருஞ் செறிந்தார் திருநாண்முன்
வைய முழுதுஞ் செறியுமினி வைகற் கிடம்போ தாதென்பார்
வெய்ய நகரின் புறமனைத்து மிடைந்த படமா டங்களென்பார்
மைய வாவு சோலையெலாம் வகுக்க வேண்டு மிடமென்பார். (உக)

இந்த வண்ண நகர்வாழ்வா ரியாருந் திருநா ளெதிர்பார்த்துச்
சந்த மலியும் பேருவகை தழையப் பொலிந்து பயில்காலை
யந்த மருவா விழாக்கொளுநா ளணுகிய தாக வதுமனங்கொண்
டெந்த வரச னுபக்கிரமஞ் செய்வீர் மறையீ ருறவென்றான். (நூ0)

வேறு.

அறைகழ லரச னுரைத்தசொ லுளங்கொண் டாதிசை வருமறை யோரு
நறைகமழ் கமல மலர்புரை யிடக்கை ஞானபோ தகமொரு வலக்கை
முறைதெரி ஞான முத்திரை பதித்து முழுப்பிர சன்னமாய் நிற்கு
மிறைதிரு விழாவை நடாத்துத றுணிந்தா ரேதுபுரி குவதென வாய்ந்தார். ()

ஒலிகெழு கழற்கான் மன்னவ ரேறே யொள்ளிய வாதவூ ரடிகள்
வலிகெழு விழாவை நடத்துக வென்றாய் வயங்குமுற் சவம்பல விதமாம்
பலிகெழு மவற்று ளெதனையாந் துணிந்து பண்ணுத லுரைத்திரீ யென்றார்
கலிகெழு கடல்சூழ் புடவியாள் பவனுங் கருத்துற விருத்தியஃ துணர்வான்.

மறையவர் வினவுக் கெவ்விடை கொடுப்போம் வயங்குற முன்னைநாட் டவத்
னிறைதவு மியன்பா லிஃதுண ராதே னினைப்பதி லுவதென் னென்று [தா
கறைதப வெண்ணி யிருக்குமக் காலைக் கருதிலம் மன்னவ னெடுநாட்
குறையறப் புரிந்த பெருந்தவ முருவங் கொண்டனை திடுதிறம் போன்று. ()

தூயமா ணிக்க வாசகர் திருநாள் சூழ்கட லுலகெலா முய்தற்
காயகா ரணமா நடத்துகின் றாரென் றறைமொழி யஞ்செவி யேற்று
நேயமோ டதுகண் டிடுதிற நிரம்ப நினைந்துமா ணவர்குழாஞ் சூழத்
தாயனு னெங்க டமிழ்முனி யாங்குச் சார்ந்தன னரசது கண்டான். (நூஅ)

பதைபதைத் தெழுந்து விரைந்துமுன் சென்று பாததா மரைமிசைப் பணிந்
புதையிருள் கிழிக்குங் கதிர்வா வெதிரம் போருகந் தகமுக மலர்ந்தான் [தான்
சுதைநிக ராசி மொழிந்திநீ றளிக்கத் தூமலர்க் கைவிரித் தேலா [தான்.
வதைநுத லணிந்து மீளவும் பணிந்தா னலங்குதன் னிருக்கைகொண் டணைந்

தூயவிட் டமிட் டிருத்தினன் பூசை தொடங்குபு செய்துமுற் றியபின்
மேயவம் முனிவ னிருக்கென விருந்து விண்ணப்ப மொன்றுள தென்று
ணுயமற் றஃதென் னெனத்தவ மியர்பே ரருளினு லடியனித் தலத்துப்
பாயபல் சிறப்பு முணர்ந்தன னீங்குப் படர்ந்தனன் றரிசனஞ் செய்தேன். ()

விழாவது நடத்தற் கெண்ணினேன் வேத விந்தகர் கனவிடைத் தோன்றிக்
கழாமணி யனைய வாதவூ ரருக்கே கருதிய தாற்றென்று காந்தார்
தொழாவடி யேனு கமஞ்சொலும் பலவுட் டுணிந்தெது செயலென மதித்தேன்
வழாநிலை முனிவா நின்வர வெதிர்ந்தேன் மற்றஃ தருள்செய்நீ யென்றான். ()

புண்ணிய மளாவும் புரூரவா மன்னன் புகன்றிது கேட்டிட வளவாத்
திண்ணிய புகழ்சால் செந்தமிழ் முணக்குஞ் செய்ய்வாய்க் குறுமுனியுரைப்பா
கண்ணிய பரம னுயிரெலா முய்யக் கரிசில்வே தாகமம் வகுத்தா [ன்
றெண்ணிய வவற்றாற் புரிகிரி யையுமோ ரிருவகை யென்மனூர் புலவோர். ()

வேதமார்க் கமெனும் வைதிகக் கிரியை மிளிர்சுவர்க் காதியாம் போகம்
போதகல் குபுபின் சனனமுண் டாக்கும் பொருந்திய வாகம மார்க்கத்
தாதரச் சைவக் கிரியைதா னிட்ட சித்தியு மமையுமோக் கமுந்தந்
தேதவெம் பிறவி யுறுவகை செய்யு மாதலா லிஃதொன்றே விசேடம். (௩௧)

பரசிவ னுரைத்த வாகமப் படியே பண்ணுதீக் கையும்பல விதமாம்
விரவுநோக் காதி யவுத்திரி யீறு விளம்புவ ரீறிரு வகையாம்
வாமிகு குண்ட மண்டல மாதி வகுத்துமா ணுக்கன்வெம் பாசத் [பேர்,
தாணறவெழுத்தைந் துணர்த்திடு தீக்கைக் குரைப்பராற் கிரியையென் றொரு

அறைதரு குண்ட மண்டல மாதி யனைத்தையும் வெளிப்படை யின்றி
முறைமையிற் குரவன் மானத மாக முடித்துமா ணுக்கன்வெம் பாசப்
பொறைதவிர் தீக்கை ஞானமென் றுரைப்பர் போற்றிய விப்பெருந் தீக்கை
நிறைதரு விசேட மிவையலா டங் தவர்க ணிமலன்று டகவடைந் திடுவார். ()

ஆயவித் தீக்கைக் கருகரல் லாதா ரபக்குவர் விடரிழி குலத்து
மேயவர் சைவா சாரநிந் தித்து விட்டவெம் பாதகக் கொடியோர்
தீயமற் றிவரும் பறவைபல் விலங்கு செறிதரு முதலிய வுயிருந்
தூயநற் கதியிற் புகும்வகை யியற்றுஞ் சுந்தரத் தீக்கையொன் றுளதால். ()

எண்ணுமற் றதன்பேர் சாம்பவ தீக்கை யெனப்படு மண்டலம் வன்னி
நண்ணுவண் பலிநா யகர்மகேச் சுரரே நகுகட மத்திர தேவ
ரொண்ணுமற் றிவ்வா றெண்ணுபு செயலா மொளிரிதே யுற்சவ மாகுங்
கண்ணுமற் றதுமைங் கிருத்தியப் பெயராற் கவின்பெறுங் காவல ரேறே. ()

தளைபுக ழனுஞை யங்குரம் வாத்து சாந்திவெள் ளிடபயா கஞ்சேர்க்
களைதரு பேரி தாடன மாதி காமரு சிருட்டியே யாகும்
புளையிறே வதாவா கனம்யாத்தி ராதா னம்புகல் வாகனோற் சவமே
வளாதுவ சாரோ கணஞ்சந்தி யாவா கனமுதற் றிதியென வகுப்பார். (௩௬)

பலிபுன லாட லத்திர யாகம் பகர்யர்காங் குரங்கண யாக
வெலிவில்காப் பணித லாதிசங் காரம் விழைபுனற் கருமங்கா ளராக
கலிலிலா வவரோ கணமுதன் மறைப்பா ராபே தேசஞ்செந் தமிழாற்
பொலிமறைப் பூஜை குரவனுற் சவமுற் புகலனுக் கிரகமென் றுரைப்பார். ()

சொற்றவிவ் விதத்தா லுற்சவ மைந்து தொழிலெனப் புகலுவ துணர்தி
கற்றமன் னவவிவ் வுற்சவந் தீக்ஷை கைக்கொளா ராதியர் பொருட்டென்
றற்றமின் ருமுன் னுரைத்தன மெனினு மவுத்திரி யாதிபெற் றரும்
பொற்றமெய்ஞ் ஞான யோகருங் கண்டு போற்றிடப் படுவதென் றுணர்வாய்.

ஆயவித் தகைய வுற்சவ சேவை யன்புறச் செய்பவர் பரம
னேயமிக் கவரா யிகம்பர மோக்க நிலவுறப் பெற்றுவாழ் தருவார்
மாயவ னாதித் தேவரும் வந்து வந்துசே விப்பர்யா மிங்கு
மேயது மிதற்கே திருவிழச் சேவை விழைதரார் பிறப்புமெப் பிறப்பே.(௬எ)

மருவுசா கலியம் பாவனஞ் சாந்த மாங்கலி யம்மென நான்காம் [தல்
பொருவிலுற் சவந்து வசமுயர்த் துதன்முற் புனற்கொடை யளவுஞ்செய் திடு
வெருவில்சா கலியந் துவசமேற் றமல் விழைபுனற் கொடைவரை யியற்ற
லொருவில்பா வனவுற் சவமென வுரைப்ப ருமாபதி யாகம முணர்ந்தார். ()

விழைதரு துவசா ரோகணங் காலை விழவுமில் லாமலே மாலைத், தழை விழா மட்டு நடத்துதல் சாந்தந் தரணிவந் துதயமாங் காலைக், குழைவிழா மட்டு நடத்தன்மாங் கலியங் குறிக்கொள முதற்சொல்சா கலிய, மழைமதம் பொழிபுங் களிற்றினு யொன்பான் வகைப்படு மென்பகற் றுணர்ந்தோர். ()

சவுரஞ்சாந் திரஞ்சா வித்திரங் கவுமா ரந்தைவீ கந்தழை பவுசம், பவுதிகங் கணஞ்சை வம்மென முறையே யிருபத்தேழ்பதினேழுபதினொந்,துவமையில் பதின்மூன் றென்பதே ழைந்தா மொருமூன்றொன் றியற்றுநா ளொன், றுந், தவமுளார் புகழு மாகமஞ் சிறந்த தவுமிய முனிவன்மா ணாக்கர். (௯௦)

பன்னிய விவைவண் கொடிமிசை யேற்றிப் பலியிட்டு நடத்துவ தொன்று
துன்னிய விரண்டு மின்றியாற் றுதலு மொன்றுசொல் கொடிமரம் பதியா
மன்னிய படமே பசுவலை கயிறு வளைதரு பாசமா தலினு
லுன்னிய திரிப தார்த்தமாந் துவசா ரோகணத் தொடுசெயுற் சவமே. (௯க)

உத்தம மாகு முனைத்தபல் வகையு ளோங்குறை வீவுற் சவத்ந்த
வித்தகக் கொடியேற் றுபெலி யிட்டு விழைதரப் புரிதியென் றுரைத்தான்
முத்தமிழ் முனிவன் புரூரவா வெழுந்து முன்பணிந் தனனுளங் கொண்டு[ர்.
சத்தமை மறையோர் தமக்கெலா முனைத்தான் றக்கதென் றேற்றிது செய்வா

பின்னரு மலய முனிவர னுரைப்பான் பிறங்குறை விகமெனுந் திருநாட்
கென்னரு மொன்பா னுளென வுரைத்தா ரெனினும்பத் தும்பதி னெ
முன்னரு நாளு மாமென வமைத்தார் மொழிந்தமற் றிதுகடைப் பிடித்துத்
துன்னரும்விழாவைநடத்தலாமென்றுன்சொற்றதுத்தமமெனத்துணிந்தார்.

எழுபரித் தேரோன் மிதுனரா சியிற்செ லேற்றமா மதிமுத லுளின்
முழுதுண ராதி சைவனுங் கௌரவன் மூந்துகா லையின்மயிர் களைந்து
கெழுதகு கழுவா யேனவு மாற்றிக் கிளக்குமா லையினுநீ ராடி
வழுவறு நியமம் பற்றுபு சந்தி வந்தனை யாற்றிநீ றணிந்து. (டுச)

பூதசுத் தியினோ டந்தரி யாக பூசைசெய் துறப்பவித் திரனாய்
மேதகு சிரத்தை மீமிசைப் பொங்க மேதினி வளம்படு நிமித்த
மாதரந் தருசா றுபக்கிரமஞ்செய் ததுநிறை வேறுமா றனுஞை
காதரந் தபப்பெற் றெண்மஙி வார்த்தைக் கடவுளா மைப்படி யிறக்கி.(டுடு)

அந்தமில் கருணைக் கணேசனைப் போற்றி யான்மநா யகர்சிவ யோகச்
சந்தமா தேவி குருந்தடி யமரா சாரியர் திருநட நவில்வார் [குருக
கந்தவே ளனுஞை யொருங்குபெற் றெழுந்து கடையனேன் மனமுநெக்
மூர்த்தவா சகநன் கருளினா ரமரு மொய்யொளி யாலய மடைந்து. (டுசு)

மன்னிய துவார வானவர் பூசை வணகருப பாவர ணதநுற
பன்னிய பூசை யியற்றுபு பஞ்சா தனம்பஞ்சா வரணநற் பூசை
நன்னிய மத்தி னியற்றுபு நியாசா திகணயந் தாகமப் படிசெய்
துன்னிய வாத்து சாந்தியப் பாற்செய் தறமிருத் திகைகவர்ந் ததன்மேல். ()

மேயவங் குரமாம் படிபல வித்தும் வித்திய பின்புறா லுணர்ந்த
தூயவா ரியன்றன் முன்வலக் கரத்துச் சுடர்ந்தபொற் காப்புநா ணணிந்தா
னுயபின் மறுநாட் பரணியிற் காலை யான்மநா யகர்திரு முன்னர்ப்
பாயசுந் தரபாண் டியனியற் றிய்தாய்ப் பரவிய மணிசெய்மண் டபத்தில். ()

மன்னிய சாந்தி செய்தநம் பெருமான் மாணிக்க வாசக வள்ளல்
பன்னிய சிறப்பி னுங்கெழுந் தருளப் பண்ணினு னயதோர் காலைத்
துன்னிய மலரோன் மாயவன் முதலாஞ் சுரர்களு மகத்தியன் முதலா
முன்னிய முனிவ ரியாவரு மற்ற யாவரு மாங்குமொய்த் தனரால். (டுக)

ஆயகா ரணரா மான்மநா யகஙா யாங்கொரு வைதிக மறையோன்
பாயபே ரன்பி னேத்திரஞ் சாத்திப் பாங்குசால் பூசனை செய்து
தூயசாந் தலர்மா லிகைபரி கலமுற் சொல்பரி வட்டத்தோ டடைந்து
வயனுர் கொளச்செய் துடன்கருப் பூர நகுசுடர் விளக்கமேந் தியபின். (சுo

முந்திருக் காதி யாவையு மெழுதார் மொழிந்தரு ளம்பல வாணர்
தந்திருக் கையா லெழுதிய வருமை சாறிருக் கோவையார் மறையை
நந்திருக் காதி யாவையு மொழிய நக்கபொற் பீடமே லேற்றி
யந்திருக் கார யாவருங் காண வழகிய பூசைசெய் ததன்பின். (௬௧)

பெருந்துறைக் குருந்த நீழல்வீற் றிருக்கும் பெருங்கரு ணாநிதி யார்நன்
முருந்துறழ் மூரல் யோகநா யகிசேர் மூலகா ரணரொணு மூத்த
ரருந்தமிழ் வாத வூரரை நோக்கி யருளினு காயவா ணியினுற்
றிருந்தவீ துரைப்பா ராவயிற் செறிந்த தேவர்மு னியாவருங் கேட்ப. (௬௨)

வேதவே தாந்தம் விளம்புமித் தலத்து மேயயா மூலவ ராவேம்
போதமே யுருவாய்ப் போந்தநீ ரெவரும் புகழ்தரு மூர்சவ ராவீ
ரோதவாஞ் சோமாக் கந்தர்முன் னாக வுற்றந மங்கிச மெல்லாஞ்
சீதமார் குணநீ ரொருவரே யடையத் திருவருள் புரிந்தன மதனால். (௬௩)

நாமினி துகைக்கு மூர்திக ளனைத்து நகவுமக் குதவின நமக்குத்
தாமினி தாகப் புரியபி டேக நிவேதனஞ் சாத்துபூ மாலை
யாமினி பகலாம் படியணி மணிப்பூ ணிவைமுதற் சிறப்பிப்போர் பவத்தோம்
போமினி யவர்பா னுமிடப் பாகம் பொருந்தினு ளொடுநனி மகிழ்வேம். (௬௪)

ஆயிர நமக்குச் செய்வ தினம்பா லன்புசெய் நுமக்கொன் றுசெய்வார்
பாயிர மறையு மளப்பதற் கரிதாம் பயன்பெற நாநனி கொடுப்போ
மேயமற் றுமக்குச் செய்பணி யெமக்கு விழைந்துசெய் பணியினும் விசேட
மாயதென் னென்னிற் புதல்வர்மாட் டியற்று மன்புதந் தையர்க்குவப் பாமால்.

மன்னிய நுமக்கு நிகழுமுற் சவத்தில் வயங்குறச் சத்திர மமைத்துப்
புன்னிய வன்ன தானஞ்செய் தோர்க்கும் பருகநீர் வாக்கிடு வோர்க்குந்
துன்னிய மற்றைத் தானஞ்செய வோர்க்குஞ் சுராதிபன் பதமுத லாக
மின்னிய வெல்லையு நல்குவோ மீற்று விளங்குநம் பதங்களுங் கொடுப்போம்.

உம்மைநா மாக வுளங்கொடு வழிபா டுஞற்றுவா ரொருபொழு தினுநா
மம்மையோ டகலா தமர்திருக் காசி யாதியில் வசித்திடு பேறுஞ்
செம்மைசேர் கங்கை முதனதித் தீரஞ் செய்தகோ தானமுற் பேறும் [யமே.
வெம்மைதீர் தரப்பெற் றுவப்பரொன் றனர்தம்விரும்பு நும்விழாச்செய்புண்ணி

நும்மைநந் தமக்கு வேறென நினைக்கு நுவலொணுக் கொடியபா தகத்தோ
ரிம்மையெவ் வளவு திருவிருந் தாலு மிழந்துதீ நிரப்புக்கோட் பட்டுச்
செம்மையொன் றின்றி மறுமையில் வெய்ய தீநர கெலாந்துனைந் திடுவா
ரம்மைசா லுள்ளக் கயவர்தா மிருந்த வூரிலுங் கதியிரா தகலும். (௬௮)

எண்ணருஞ் சனன மிருஞ்சிவ தீக்கை யெய்தியு மாகம புராண
நண்ணரும் பொருளை நனியுளத் துணர்ந்து நவிலருட் குறிப்பூசை செய்துஞ்
கண்ணரு நம்பா லன்புமிக் காற்றிக் கைவந்த வுத்தமோத் தமரே [தூல்.
பண்ணருந் தவஞ்சா னுமக்கன்பு செய்யும் பான்மையர் மற்றையோர்க் கரி

அகளமா யமரித் தலத்தடி யேனை யாட்கொளப் பெருங்கரு ணையினாற்
சகளமாய் வந்தி ரெனைத்தரி சித்தோர் தாழ்பெற லென்னென வினவி
னிகளமாம் விருத்தி யெனப்புக லிம்மை நிகழ்ச்சிசான் மறுமையென் றோது
முகளறாம் பேரின் புறவனு பவித்தீற் றெருவினம் மடிக்கலப் புறுவார். (எ0)

ஆண்டினுக் கிருகான் மிதுனமா மதியுத் தரந்தனின் மிதுனலக் கினத்திற்
பூண்டிய றனுமா மதியிலா திரையிற் போர்தனு லக்கின மதனி
லீண்டியா நம்மை யாண்டருள் காட்சி யாவர்க்குங் காட்டுவோங் காண்போர்
வேண்டியா தரிக்கு நமதடிக் கலப்பின் மேவுவா ரென்றரு ளினரால். (எக)

அதிசயம் பயப்ப வான்மகா யகர்பே ரருளினு லருளிய வரத்தை
மதிநலம் பொலியும் வானவர் முனிவர் மானிடர் விருப்புறக் கேட்டுத்
துதிகெழு மினைய திருவிழாச் சேவை துணிபுறச் செய்தலே யெளிதிற்
கதியடை யுபாய மெனக்கடைப் பிடித்துக் கழிமகிழ் பூத்தனர்மாதோ. (எஉ)

அதிசயம் பயப்ப விவைநடந் ததன்பி னண்ணன்மா ணிக்கவா சகனைப்
பதிகொடி மரஞ்சா ரிடத்தெழுந் தருளப் பண்ணிப்பி னிடபயா கஞ்சீர்
மதிகொள்பே ரிகைதா டனந்தேவ தாவா கனந்துவ சப்பிர திட்டை
துதிதரு கணேச ரோடபடப் பிரதக் கிணமிவை சூழ்ந்துசெய் ததன்பின். (எங)

கருதியாத் திராதா னந்துவ சாரோ கணமாசீர் வாதமுற் பலவுஞ்
சுருதியா கமச்சொற் படிமுடித் ததன்பின் றூயவா ராதனஞ் செய்து
பொருவருந் திட்டி சுற்றுபு துவசம் பொலிதரு வுடைப்பிர கார
மருவுற வலஞ்செய் தாயவாத் தான மண்டபஞ்சேர்த்துப்பூ சித்தே. (எச)

அன்றிர வகம்யா காங்குரம் யாக மலங்கொளி வாதவூர்ப் பெருமான்
றன்றிரு வலமுன் கையிற்பொன் செய்து தயங்குநா மணமேத்தினி தணித
றுன்றிய யாக மந்திர தேவர் சூழ்பலி நாயக ராகச்
சென்றியை வாத வூரர்தம் மோடேந்திக்குபக் தனமுறச் செய்து. (எரு)

குடைகொடி யாதி விருதுக் கெருங்கக் கொண்டல்வென் குற்பபணை முழங்க
மிடைதரு மலங்கா ரம்பல வாங்கு விராயினர் கட்புலன் கவர
வடைபல்வா னவரும் பூமழை பொழிய வரகர வென்றுபன் முனிவர் [ம்.
புடையுற நெருங்கச் சென்றுலாப் போதும் பொலிவினைத்தனித்தனிவகுப்பா

ஆதிநா ளிளைய பெருந்துறை யண்டபோ தணைந்தது சிவிகையாதலினூற்
சேர்திசா லனைய சிவிகைக்கோர் முதன்மை தோன்றவூர் வதுகுறித் தாங்குப்
பாதிமா மதியஞ் சூடினு ரருளாற் பயில்விழாப் பரணிநா ளிரவி
லோதிசான் முனிவர் முதலியோ ருவப்ப வொளிருமற் றதிலுலாப்போந்தார்.()

திரிபுவ னமுஞ்சொல் பெருந்துறை மேய செல்வர்தா மருளிய வரத்தா
லரியமற் றவர்வை கிடந்தமக் குரிமை யாமெனல் விளக்குதல் போலக்
கரியல்கார்த் திகைநாட் காலையில் வெய்ய கதிர்செய்சூ ரியவிருத் தத்தில்
விரியுமா லையினி னிலா ச்செயு மதிய விருத்தத்தின் மேயுலாப் போந்தார். ()

ஒள்ளிய தாய வுரோகிணி நன்னு ளுயர்குண வழுதிமந் திரியாய்
வள்ளிய போகந் துய்த்ததற் கேற்ப வண்கதி ருதயஞ்செய் காலைத்
தெள்ளிய செம்பொன் மஞ்சமு மாலைச் செய்யகோ விரதமு மிவர்ந்தே
யுள்ளிய வறிஞர் கண்டுகண் களிப்ப வுவந்துலாப் போந்தனர்மன்னே. (எக)

மான்றலை நன்னுட் காலையிற் கல்வி வளத்தினுக் குடைந்ததன் றன்மை
கோன்றலை யரவஞ் சுமந்தறி விக்கு நுமக்கெனச் சேடவா கனத்து
மேன்றலை விலாத கயிலையி லிருப்பு மெமக்குள தெனவெறித் தாங்கு
வான்றலை வணக்கு கயிலைவா கனத்து மாலையி லிவர்ந்துலாப் போந்தார். ()

சேவைசெய் பவர்மண் கண்டுசே விக்கத் திகழுமா திரைநன்னுட் காலைக்
கோவைசெய் தரள வடம்பல செறியக் குயிற்றுபொற் றண்டிகை மீதுங்
காவைவைத் துயர்விண் கண்டுசே விக்கக் கருகிருண் மாலைவெம் பியலா
மரவயி னமையப் பூதத்தின் மீது மமர்ந்துலாப் போந்தன ளாயர். (அக)

ஒருபுனர் பூசக் காலையிற் றெய்வ வுத்தர கோசமங் கைக்கண்
ணிருமல ரருள்கா லிந்திர திருவ நேருறத் தெரிந்ததற்கிணங்க
மருமலர் செறியுங் கற்பகத் தடியின் மாலைநாம் கோட்டிபமுடியிற்
றிருவளர் வாதவூரர்தா மருவித் திருவுலாப் போந்தனர் மாதோ. (அஉ)

பூசநாட் காலை மறையுணர் விதிதன் புலமைதோற் றெழுதிறம் விளங்க
வாசநாண் மலர்வா ழனத்தினைக் கொடுக்க மற்றது கவர்ந்துகொண் டதன்மே
லீசனு ரருளா லிவர்ந்தென விவர்ந்து மெய்திய மாலையிற் றரும தார்.
வாசரென் றுரைத்தற் கிணங்கவெள் விடைமேல் வைகியுந் திருவுலாப் போந்

புத்தனு யிருந்து மூகைதீர்த் திலமியாம் புவனங்காண் வரவது தீர்த்த
வத்தனூர் தமைத்தாங் குதல்விதி யெனினு மபக்குவத் தாலது கொள்ளா
ரெத்தனுப் பிறந்தோ மென்றுமால் கவல வெய்துமா யிலியநாட் காலைச்
சுத்தவா ளரியு மாலைவாம் பரியுந் தூண்டுபு திருவுலாப் போந்தார். (அச)

நருமகத் திருநாட் காலையி லான்ம நாயக ரேயிவ ரென்னு
மிருமொழிக் கிணங்கத் தேவர்யா வருமாம் வியன்மணித் தேருலாப் போந்து
தொருகழு வாய்நீ ராடியா றுவார் தோற்றமுந் தாமென மாலைத்
தருநட நவில்வார் திருவுருக் கொண்டு தழைமறு கிடையுலாப் போந்தார். ()

பூரநாட் காலை யான்மநா யகர்முற் புண்ணியர் தாஞ்செல வுய்த்து
நாரவா மவர்க்குப் பட்டணி சாத்தி நாறு நிவேதனஞ் செய்து
பாரவாந் தீபா ராதனம் புரிந்தப் பட்டுமோ லிகைமுதற் பலவுஞ்
சேரநம் வாத வூரருக் காக்கித் தீர்த்தத்துக் கனுஞைபெற் றெழுந்து. (அசு)

நித்திய பலியிட் டுற்சவர் திருமு னிகழ்தரு பேரிகை யடித்தல்
சத்தமை தருதே வதாவாக னவிசர்ச் சனந்தீர்த்தாங் குரமிவை யாற்றி
யுத்தமச் சூர ணோற்சவம் புரிந்தே யுறுமுளை விசர்ச்சன மாற்றி
வித்தக மருவ நடாத்துபு தமிழாம்வேதபூ சாவிசர்ச் சனமும். (அஎ)

சாரமென் றுலோகா யதத்துற லெனக்குத் தவிர்க்கவென் றிந்திர னுய்ப்பச்
சேர்வந் தொளிரு மிந்திர விமானஞ் செறிந்துலாப் போந்துறு தீர்த்த
சாரமென் றுணைக்குந் தேவதீர்த் தத்தைச் சார்ந்துதீர்த் தங்கொடுத் தப்பாற்
சேரவிட் டிமைக்கு மணித்தளி புகுந்து திருமகவிசர்ச்சனஞ் செய்து. (அஅ)

வாதவூ ருதித்த மூலவர் தமக்கு மகரும்ப நறும்புன லாட்டிப்
போதவா சிர்வா தம்புரிந் ததற்பின் பொருந்திய மாலையி லென்று
மேதமே வாத சத்துவத் துள்ளா ரெனநெறித் தாங்குவெண் பொன்செய்
சீதமா ரிரத மிவருபு சூழ்ந்து திக்குபந் தனமொழித் ததன்பின். (அகூ)

கொடிமரத் தருகுற் றுயர்கொடி யிறக்கிக் குருந்தநன் னிழலமர் கின்ற
நெடியவ ரான்ம நாதர்சந் நிதியி னிலவுமண் டபத்தெம துளஞ்சே
ரடியுடை வாத வூரரைச் செலுத்தி யாகர வென்றுகை கூப்பிப்
படியவர் வானக் குடியவ ரெவரும் பணிந்தெழுந் தனர்மகிழ் சிறந்தார். (கூ௦)

ஏறுசா றுவசா ரோகண முதலா வியம்ப வரோகண மளவுங்
கூறுமோ ரிரண்டு காலத்தும் விசேடங் குலவபி டேகமே யுணவே
வேறு வேறாகத் தட்டிசுற் றுதலே விசாரணைச் சைவமா முனிவர்
பேறுசெய் திருக்கை தொரபெரி வட்டம் பிறங்கிய திருமலர் மாலை. (கூக)

சுவையதெங் கங்காய் சொன்னப்பூ வாதித் தொனகொடு மிகச்சிறப் பித்தல், குவைகொளும் பூநெற் பொரிவெண்பொன் மலரே குலவிய பொன்னிறு மலரே, யிவையுறக் கலந்தே யிருகையி னுலு மெடுத்தெடுத் திறைத் தல்கண் ணேற்றி, னவையறத் துகில்சூழ்ந் தெறிதல்கோ கனக நருமல ரடியுல்ற வைத்தல். (கூ௨)

பகலிர வோவாப் பலியிட லின்னும் பரமஞ கமத்தினிற் புகன்ற
தகல்விதி யெவள வவளவு மொருங்கு தகப்புரிந் தனர்வழு வாதே
யிகல்பவப் பகைக்கு மருந்தென நாரு மியறரி சனத்திரு விழாவும்
புகல்தற் குரியஞயினே னியானும் பொலிதவ மிக்குளே னன்றோ. (கசு)

இராப்பதி னெட்டு நாழிகை யளவி லெங்கடே வான்மநா யர்க்குங்
குராப்புனை கூந்தல் யோகநா யகிக்குங் குறித்தொரு மற்றைவா னவர்க்கு
மராச்சுமை யுலக முய்யவந் துதித்த வண்ணலார் வாதவூ ரருக்கு
மொராத்திர வியம்பல் கொண்டபி டேக முறுநிவே தனம்புரிந் ததன்பின். ()

கோலமா ணிக்க வாசகப் பிரானுர் குழிக்கொளு மான்மநா யகர்தஞ்
சீலவே காந்த தரிசனம் பெற்றுத் தீபவா ராதனை கண்டு
ஞாலமெய் தரிய மாலிய மேற்று நகுகருப் பூரதீ பமுமேற்
றேலவந் நின்று மெம்மையாள் பொருட்டே யெழுந்தரு ளினர்மறை முழங்க.

விழையருட் சொக்க விநாயக ரகோர வீரபத் திரருல கீன்ற
தழையருட் செல்வி குருந்தமர் பரமா சாரியர் திருமுனம் புரியும்
பிழையக நீப நோக்குபு குருந்தப் பெருந்தகை யெதிர்முக மாய
வுழைவட முகமா யிருகரங் கூப்பி யும்பரா ரேத்திட வமர்ந்தார். (கசு)

ஆயதோர் காலை யிவர்புரி வதுபோ லாங்கொரு வைதிக மறையோ
னேயமார் பரமா சாரியன் பூசை நிரம்புபு பட்டினன் மிறைத்துத்
தூயதா முபதே சக்குறிப் புணர்த்தித் தொக்கமா லியமெலா முதவி
மேயவா ரியரோ ரிருவர்க்குஞ் சமமா விளங்குமா ராதனஞ் செய்தான். (கஎ)

அரகர சிவவென் றகத்தியன் முதலா மருந்தவ முனிவரர் துதித்தார்
பரமவற் புதமீ தென்றய னரிமுற் பண்ணவ ரியாவரும் பணிந்தார்
கரதலங் குவித்துக் கண்பனி சோரக் காமரு புரூரவா வாதிப்
புரவலர் பலருங் கண்டுகண் டுவகைப் புணரிவீழ்ந் தனரெழுந் திலரால். ()

சிவகண மனைத்து மித்தரி சனமே திப்பிய மென்றுவப் புற்ற
பவமெனும் புணரி சுவற்றினே மென்று பாருளார் பலருமுட் குழைந்தா
ரவமென வொழிந்த தினியெனா வெவரு மறைதர வாங்குநின் றெழுந்து
சிவமணங் கமழுந் தளிவலஞ் சூழ்ந்து சிறக்குமாத் தானத்தை யடைத்தார்.

யாவுமாங் கழுவா யெனுமபி டேக மியைதரப் பெற்றுநன் னுளின்
மேவுமா ணிக்க வாசகப் பிரானுர் விரும்புதஞ் சேர்க்கைபுக் கமர்ந்தார்
பாவுசீர் மிகுத்த மிதிலைவாழ் சனகன் பரவுபு முத்திபெற் றதனை
காவுமெம் மனமுங் களித்திட வினிது கவிற்றிட லுற்றன மாதோ. (சுoo)

புரூரவன் பெருந்துறையடைந்து திருவிழாச்செய்தபடலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஎஎகு.

---

# சனகராசன் முத்திபெற்றபடலம்.



வாத வூரர்தம்
பாததாமரைப்
போத வாமன
மேத நீங்குமே. (க)

வேறு.

வாவிபயி றகட்டகட்டு வாளைவெடி கொண்டுவிழிக்
காவியரம் பையர்வெருவக் கற்பகத்தின் கழுத்தொடிக்கும்
பூவியலும் பெருவளஞ்சால் விதேகமெனப் பொலிநாட்டின்
மேவியபொன் மதிலுடுத்த மிதிலைமா நகர்வாழ்வோன். (உ)

கலைபலவுங் கற்றுணர்ந்தான் கற்பகமுஞ் சமழ்ப்படைய
வலைவில்கொடைத் தொழில்பயின்று னரசரெலாம் பணிகழலான்
மலைபொருவு திண்டோளான் மாண்புசா றத்துவந்தேர்
தலையறிவின் றலையமைந்தான் சனகனெனு மியற்பெயரான் (ஙு)

அனையவன்றத் துவமுணர்ந்த வாசிரியன் றனையடையும்
வினையமுளத் தொன்றுகொடு விசேடவிலக் கணம்படைத்துப்
புனையவுள குடச்செருத்தற் புனிற்றாக்க ளோரிலக்க
நனையமிளிர் தூரத்தொகுத்து நகர்ப்புறத்தோர் சார்நிறுவி. (ச)

புரவுபுரி பவர்களையும் போதுமா றுங்கமைத்துப்
பரவுமிவை தத்துவந்தேர் பனவர்கொளக் கடவரென
வுரவுமுர சறைவித்தே யுவந்திருந்தா னக்காலை
விரவுவள வந்நாட்டு வேதியரியா வருமுணர்வார். ()

பொன்னினலங் கரித்து மிளிர் புனிற்றாக்கள் கவர்வதற்கு
நன்னிலைமைத் தத்துவந்தேர் நலஞ்சிறிது மிலமானே
மென்னினர சனுமதியா னிருக்கும்விருத் தியுந்தவிர்ப்பான்
பன்னியெவ னவனெனப் படருழந்தா ரனைவோரும். (சு)

அன்னபொழு தியாக்கியவற்க் கியனையடைஇப் பணிந்தெழுந்து
மன்னவன்செய் திறமுரைத்து மறையவர்சூ ளாமணியே
பன்னரிய பராபவமாம் பரவையழுந் தினநீயே
மன்னுமொரு புணையாகி வாழ்விப்பா யென்றிரந்தார். (எ)

அரசர்திர வியங்கவர்த லடாதந்னி ஹுந்தானம்
பிரசுமையா தேற்பதனுற் பசுத்தானம் வாங்குதலோ
விரசவத னினுங்கொடிதா மெனத்தரும நூல்விளம்புங்
கரசரண மேற்கவியங் கக்குலையு மாஹும். (அ)

இரந்தமறை யவர்நிமித்த மிரப்பிரமென் றுருப்பட்டுச்
சுரந்தகரு ணையனுகித் தொக்கவவ ரொடுமெழுந்து
வரந்தழையுந் திருமிதிலை மாநகரின் புறம்வந்து
பரந்தபசுக் களையேற்ரும் பனவர்நீர் கவர்மினெனை. (௯)

மறையவர்த முத்தரியம் வாங்கியரை யுறயாத்தே
நீறைசிகழி யவிழ்த்து தறி நெருங்கமுடிந் தனரொருப்பட்
டறைகுடஞ்சுட் டொவ்வொன்று கவர்ந்தகம்புக் கனிரப்பாற்
குறைவின்முனி வரன்சனகன் கோநகரத் துட்புகுந்தான். (௧0)

இனியபசுப் புரந்தவர்க ளடைந்ததனை யிறைக்கியம்ப
முனிவரவு தெரிந்தவனு மெதிர்கொண்டு முன்பணிந்து
நனியமையு முகமனுரைத் தழைத்துகடந் தனனலஞ்சார்
தனியமைதன் னிருக்கைபுகூஉத் தழுவுமா தனத்திருத்தி. (௧௧)

அருக்கியமுன் னுயபுரிந் தஞ்சலித்து நின்றிடலு
மிருக்கெனவம் முனியுரைப்ப விருந்தவினு வுதல்செய்வான்
றிருக்கிளர்மா தவரேறே செவ்வியதத் துவஞான
மிருக்கின்முடி புரைத்தபடி யெனக்கியம்ப வேண்டுமென. (௧௨)

மன்னவபக் குவர்க்குரைப்ப தல்லாது மற்றையர்க்குச்
சொன்னவர்க ளவரோடுந் துனையகர கழுந்திடுவா
ரின்னலற நினக்குரைத்தற் கிழுக்கிலையா லினிதுரைப்பேன்
பின்னமறக் கேளென்று பேசுவா னம்முனிவன். (௧௩)

அத்திபா திப்பிரிய மாரிடத்து விளங்குவதோ
வொத்தியன்மற் றவருணர்வா ருணர்வரோ மற்றையர்கள்
சத்தியமாய்ச் சகத்தாயச் சகத்திற்குக் காரணமாய்ப்
பத்தியுளா யதின்விளங்கு பற்பலப தார்த்தமாய். (௧௪)

அப்பதார்த் தத்தினுக்குக் கருத்தாவா யமைசான்ற
யொப்பவெலாந் தானுய்த்தா னல்லாதா யுறுமனுவாய்ச்
செப்புமகத் தாயுருவ மருவமொடு சேரவத்தை
யப்புமைங்கோ சங்களிந்தி ரியங்குணங்கள் பாறியதாய். (௧௫)

வாக்குமனு தீதகோ சரமாய்மற் றுண்பெண்ணொடு
போக்குமலி யல்லாதாய்ப் பொலிகின்ற தேபிரம
நீக்குதலின் றாதலதிது நிகழ்குரவ னுபதேசந்
தேக்குதலா லெலாம்பிரம மெனத்தெரித லேவித்தை. (கசு)

அடுத்ததிது நானென்ப தவித்தைமூன் றுவதிதே
யெடுத்தசக லமும்பரித்தி யாகஞ்செய் தின்பதுன்பம்
படுத்தசம மாப்பெரியர் பயிற்சியொடும் பிரமநிட்டை
தொடுத்ததிறத் தொடுகூடித் துணிவுபெற விருப்பதுவும். (கஎ)

ஆன்றசக லமும்பிரம மாகச்சிந் திப்பதுவு
மேன்றதன்செய் கையனைத்து மிரும்பிரமச் செய்கையென
வூன்றவுட்பா விப்பதுவு மூயர்ஞான மாமிதுவே
சான்றநா லாவதென்ச் சாற்றுவார் ஞானியரே. (கஅ)

ஒப்பிலதாய் வியாபகமா யுறுசுகத்தைக் கொடுப்பதாய்த்
தப்பில்பர மாய்வாசா மகோசரமாய்த் தழைவதுவே
செப்பரிய தேயமிந்தைந் தாவதுதி யானமெனின்
வெப்பிலுரு வருவிரண்டாம் விளம்பிந்தா றுவதுவே. (ககூ)

சாக்கிரஞ்சொப் பனஞ்சுழுத்தி துரியமது தனைக்கடத்த
னீக்கமிலா விவையவத்தை நிகழிவையே ழாவதாம்
போக்கருஞ்சத் துவமிரா சதம்புகர்த்தா மதமென்னத்
தேக்குகுண மொருமூன்று மத்திறமுஞ் செப்புவாம். (உ0)

வெள்ளியது பெருங்கருணை மேவியது சத்துவமே
யொள்ளியசெம் மையதார வாரமுள திராசதமே
கள்ளியகார் நிறமவித்தை கயந்தசூதா மதகுலமே
வள்ளிபவெட் டாவதிவை யென்றுரைப்பார் மாண்புடையோர். (உக)

பூதகா ரியமாகிப் பொருந்துமிரு வினைக்கேற்ப
வேதமொடு சுகநுகர்தற் கேதுவா யதுதூல
மாதசவிந் தியம்பஞ்சப் பிராணன்மனம் புத்தியொடு
சூதமையா யோகசா தனமாகுஞ் சூக்குமமே. (உஉ)

அருவாகி யறிவினுட னறியாமை புடையதுவாய்க்
கருகாத ஞானம்யோ காதிகட்குக் காரணமாம்
பொருவாத காரணமிம் மூவகையாய்ப் புணருடம்பே
வெருவாவொன் பதாவதென விரித்துரைப்பார் மேலோரே. (உந)

தூலத்தே யுபாதியெலாந் தொகுப்பொருந்து மன்னமய
மேலுக்கன் மேந்தியமைம் பிராணனொடாம் பிராணமயஞ்
சாலஞா னேந்திரியந் தழுவியது மனோமயமே
கோலிவவற் றொடிபுத்தி கூடுதல்விஞ் ஞானமயம். (௨௫)

மாற்றரிய மனோமயம்விஞ் ஞானமய மாமிரண்டிற்
றோற்றியவான் மாவறிவே சொல்லுமா னந்தமய
மேற்றமிகு மிவைபஞ்ச கோசமெனி வியம்பிடுநூல்
சாற்றரிய பத்தாவ திவையென்றே தகக்கோடி. (௨௬)

நால்வகைத்தோற் றத்தினுமாய் நக்கசரீ ரங்கடொறுஞ்
சாலவியா பித்தனைத்து நடத்துவதே தகுசீவ
னேனுமுந்தி மேற்களக்கீ ழியைகமலத் தகரவெளி
போதுமதனிடம்பன்னொன் றுவதிது வேனப்புகல்வார். (௨௭)

கருமஞா னேந்திரிய மொருபதந்தக் கரணநான்
கொருவரிய வாயுவைந்திவ் வுணாதருபத் தொன்பதொடும்
வெருவரிய மாயையொடு மிகக்கூடிப் புசிப்பதுவே
தருபோத்தா விதுபனிரண் டாவதெனச் சாற்றுவார். (௨௮)

மருவுடம்பி லபிமானம் வயங்கியெழ விராட்டேயா
வொருவிலிர ணியகருப்ப மாயுவக்கு மீச்சுரமாய்ப்
பொருவறமே யதுகருத்தா புகல்பதின்மூன் றுவதிது
வருபுவியி லவ்வருணச் சிரமங்க ளுக்கேற்ப. (௨௯)

ஆற்றுநிட்கா மியகரும மிதுபதினான் காவதுவே
தோற்றுகுரு வன்சேவை தூயவான் மவிசாரம்
போற்றுபெரி யவரிணக்கம் புகழும்வே தாந்தநடை
மாற்றரிய காரியமாம் வருபதினைந் தாவதிது. (௩0)

என்றவர் தனத்திருந்தே யியங்குமிரு வளியடக்கித்
தோன்றவா யுவையெழுப்பிச் சொலும்பிரம ரந்தரஞ்சேர்ந்
தான்றவா னந்தரச மாயசமுத் திரத்தழுந்தன்
மான்றலிலா யோகமிதே வருபதினா றுவதுகாண். (௩௧)

ஏலுவிரு தயகமலத் தெழின்மாயை விராய்ச்சகத்தைப்
பாலனஞ்செய் பவன்புருடன் பகர்பதினே ழாவதிது
சாலவெலா மழிந்துமழி யாததாய்க் காரணமாய்
ஞாலாவி லவ்வியத்த நருபதினெட் டாவதிது. (௩௨)

அவ்வியத்த முதித்தொமெங்கி நாமமா திகளடைந்த
செவ்வியவா னவர்வியத்தர் செப்புபத்தொன் பதாவதிது
கவ்வியமெய் கோசந்தத் துவமனைத்துங் கடந்துமிளிர்
திவ்வியமேன் மையதான்மா செறியிருப தாவதிது. (௩௨)

அழிபவஞ்ச மகித்தியமென் றையமற நினைப்பதுவே
கொழியகான் மாவிருபத் தொன்றுவ திதுகுறிக்கொள்
செழிசருவ மும்பிரம மெனத்தெரித லத்துவித
மொழியிருபத் திரண்டாவ திதுவென்றே மொன்னூதியால். (௩௩)

நூல்பலதே றுபுபவஞ்ச மித்தையென நோக்குபுதா
னேல்பிரம மெனன்மவுன மிருபதின்மூன் றுவதிது
சாலவித்தை தபப்பிரமந் தனைத்தெரிந்து கொளன்மோக்கம்
கோலியிரு பத்துநான் காவதெனக் கூறுவார். (௩௪)

துக்கமெலா நிவர்த்தியாய்ச் சுகம்பெறலே யானந்த
மிக்கவிஃ திருபத்தைந் தாவதென விளம்பிடுவார்
தக்கவிவை யெலாமுணர்தி சனகனே யென்றுரைத்தான்
றெக்கபசுக் கவர்ந்தமுனி யிறைதொழுது சொல்லுவான். (௩௫)

இவையனைத்துந் திடப்படுதற் குபாயமெவ னெனக்கேட்ப
நவையிறவு மியன்பாற்போய்ப் பெருந்துறைமான் மியநயந்து
செவையுறக்கே ளெனவிடுத்துத் தீர்ந்தானச் சனகனும்போ
யவைவியக்குந் தவமியனை யடைந்தனைத்துந் தெரிவித்தான். (௩௬)

சொன்னவெலாஞ் செவியேற்றுத் தூயதவ மியமுனிவன்
மன்னவநிற் கம்முனிவன் மாயாவா தம்புகன்று
ளன்னதுணர்ந் தவர்க்கென்று மையர்பெருந் துறைப்பெருமை
பன்னுல்பழு தென்றதன்றேஞ் சிறிதுபகர் தரத்துணிந்தான். (௩௭)

சத்தியமே யாமுரைப்பாஞ் சனகபுர வலகேண்மோ
சத்தியமா கியபிரமஞ் சகத்தாயிற் றென்றுரைக்கிற்
சத்தியமென் பதுதீர்ந்த சத்தியஞ்சார்ந் ததுகண்டாய்
சத்தியநு லதுவென்றே சாற்றுவரோ தக்கோரே. (௩௮)

காரணமாம் பரஞ்சகத்தாங் காரியமா கியதென்னிற்
காரணத்துள் ளதுசகத்தாங் காரியத்து முளதாமே
காரணஞ்சித் தாஞ்சகத்தாங் காரியமுஞ் சித்தெனச்சொல்
காரணந்தான் மாயையெனக் கரைந்தாலெக் குற்றமும். (௩௯)

அருவமிலை யுருவமிலை பிரமத்திற் றென்றறைந்து
மருவுவுறு தியானமிரு வகையவைகிட் களஞ்சகள
மொருவரிய தெனப்புகலி னுரைத்தவிவை யார்க்குரிய
வெருவமைய முன்னொடுபின் விரோதமுற லென்றாலே. (சo)

துக்கமற வொழிதலொடு சுகப்பேறே முத்தியெனின்
மிக்கதுயி லோருயிர்க்கு விளைதலுமற் றதுவீருந்
தக்கதலா மாயாவா தத்துளகுற் றங்கூற
லுக்கமணற் சோற்றிடைக்கல் லாய்திறத்தை யொக்குமால். (சக)

முதுமுனிவ னுனைமருட்ட மொழிந்ததிற முணராதே
யிதுபொருளென் றுளங்கொண்டா யென்றுதவு மியனியம்பக்
கதுமெனவம் மிதிலையர்கோ னெழுந்துகான் மிசைவீழ்ந்து
பதுமனுமெகவ் வாயடி யேற் குண்மைநெறி பகரென்றான். (சஉ)

என்றமொழி செவியேற்றே யிருங்கருணை தலைசிறப்ப
வன்றலிலாச் சிவதீக்கை யாற்றியடி முடிசூட்டி
நன்றமைய முப்பொருளும் புரூரவற்கு நவின்றபடி
யொன்றவுளாத் தவன்மயக்க மனைத்துமொழித் தருளினன். (சங)

பெருந்துறைமான் மியமனைத்துஞ் சிந்திக்கும் படிபேசிக்
குருந்துறையும் பெருமானைக் குலவுயோ காம்பிகையை
யிருந்துறைபோர் திருவாத வூரடிக ளிணையடியை
வருந்துறையா வையுமாற்றி வணங்குதிபோ வெனவிடுத்தான். (சச)

ஓரொருகா ரணம்பற்றி யுதித்தநூல் களைவிலக்கிச்
சீரொருவாத் திருவருளே காரணமாச் செனித்தெழுந்த
பீரொருவா வாகமநூற் படியொழுகுந் திறம்பூண்டு
பேரொருவா மகத்துவஞ்சால் பெருந்துறையை வந்தடைந்தான். (சரு)

கந்துமுற்றி கடாயானைக் காவலன்பு ரூரவன்றான்
முந்துவழி படுமுறைமை முழுவதுந்த னுளங்கொண்டான்
சிந்துதலி லாத்தரங்கத் தீர்த்தமெலாம் போய்ப்படிந்து
நந்துபுகழ் வெண்ணீறுங் கண்மணியு நயந்தணிந்து (சசா)

மனுவரசா மைந்தெழுத்து மானதமா கக்கணித்துப்
பனுவன்மறை முழங்குதிருத் தளிபுகுந்து பணிந்தேத்தித்
தனுமதியின் மிதுனமதித் தனிச்சாறு சேவித்தே
யினுமவட்செய் வனவனைத்து மியற்றியுவப் புறவமர்ந்தான். (சஎ)

ஆயபுகழ்ப் பெருந்துறையெம் மான்மகவ யகர்தோன்றி
நேயமிக மாஞான சனகனென நிலவிடுவாய்
தூயவவின் றுதியென வருள்புரிந்து துணையடிக்கீழ்
மேயகலப் பின்பருளி விண்ணவர்வாழ்த் திடமறைந்தார். (சஅ)

மன்னுபுகழ் மிகுசனகன் மாயாவா தத்தையொரீஇப்
பன்னுசிவா கமப்பரவை படிந்துமுத்தி பெற்றதிற
முன்னுமுப புராணத்துட் பார்க்கவமு மொழிதருமா
லின்னுமது கொளநெளிவா மிதுகோடற் பொருட்டன்றே. (சகூ)

நேயமிகு முனிவரர்கா ணீடுபுகழ் மிகுசனகன்
பாயதிரு வடிக்கலப்புப் பற்றியவா றெடுத்துரைத்தாா
தூயகுணஞ் சிறிதுமிலாத் துட்டமறை யோனொருபெண்
மேயபெருந் துறைமேவிப் பெற்றதிறம் விளம்புவாம். (ருo)

சனகராசன்முத்திபெற்றபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஉ௯ரு.

---

# அதர்மனும் இலக்குமியும் முத்தியடைந்தபடலம்.

வாத வூரெம் வள்ளல்பொற்
பாத தாம வைப்புக
ழோத வோத வோதமா
மேதமோவ மின்பமே. (க)

நன்மை மேய நருமதை
வன்மை மேய மாக்கரை
வின்மை மேய வேதியர்
பன்மை மேய தொருபதி. (உ)

வேறு.

அன்னபதி வேதபுரி யெனும்பெயர தனில்வாழ்வோர
பன்னருநூ லுணர்திரியம் பகனெனச்சொ லியற்பெயரா
ன்னர்மறை யவன்முன்னு ஊவின்றதீ வினைப்பயத்தா
லென்னகொடு மையுமுருவொன் றெடுத்தனவோர் மகற்பெற்றான். (ங)

அந்தமகன் செயனோக்கி யதர்மனெனப் பெயரிட்டார்
சந்தமிகு மங்கரா ரப்பெயர்தாங் கியகொடியோன்
கந்தமுழிவங் களியானை கடங்கொண்டு திரிவதென
வெந்தவிட னுந்திரிவா னெந்தவிட னும்பொருவான். (ச)

மறைமொழிநிந் தனைசந்தி வந்தனைநிந் தனைசிறிதுங்
குறையடையாப் பெரியவர்நிந் தனையாருங் குறிக்கொள்ளா
நறைமலர்ப்பூங் கொன்றையணி நாயனார் நிந்தனைமற்
றறைபலநிந் தனைகளுஞ்செய் தகலிடத்தே யுழிதருவான். (ரு)

ஒருதினஞ்சில் விடர்குழும வொருகானத் தூட்புகுந்தான்
பொருவரும்பல் குறும்புசெய்து போதருங்கா லாங்கொருசார்
மருவுசிவ முனியோகங் கொடுவெதிய வன்மீகம்
பெருகுறமேன் மூடியதாய்ப் பிறங்கவது கண்டணைந்தான். (சு)

இல்லிவழி நோக்குதலு மிருந்தவத்தோன் விழிதோன்றப்
புல்லியவீ தென்னையெனப் பொருக்கெனவோர் வளார்கொண்டு
சொல்லியவவ் விழிகுன்றுன் றுனையயோ கர்தவிர்ந்து
கல்லியந்நீங் கினன்வன்மீ கஞ்சிதைத்து வெளிவந்தான். (எ)

அடுசினங்கொ ளம்முனிவ னதர்மன்முக மெதிர்நோக்கிப்
படுசொடிய மாபாவி யென்செய்தா யெனப்பதைப்பக்
கொடுமையெவன் செய்தனன்கா கோதரங்கா ன் மணியென்றே
முடுகியீது செய்தன்னின் செங்கனென முன்னுதேன். (அ)

என்றுசொல மிகச்சீறி யெழுநாவோ னினுங்கொதித்துக்
கன்றுகொலை முதற்பாதகங்களுக்கோர் குழிசியா
யன்றுபுலைச் சார்புற்றே யலைதிநீ யெனச்சபித்து
வென்றுமிளிர் சிவமுனிவன் வேறிடம்பார்த் தெய்தினன். (கூ)

விடரொடுமெய் வனந்தீர்ந்து விடன்மடனு கியவதர்மன்
சுடர்பொருவு தந்தையுறை தொன்மனையி னுட்புகுந்தா
னிடர்கெடமற் றவன்புகலு மிதமனைத்துங் கொள்ளானாய்ப்
படர்செயலோர்க் தவன்றுறவு பற்றியொரு வனம்புகுந்தான். (கo)

ஆவயினோர் மரச்சூழ லகம்புகுந்து பனிதவிர்ப்பான்
மேவவொரு புலித்தோலை மெய்ப்போர்த்தி யோகிருந்தா
னேவவிய லாவதர்ம னிச்சைவழி யொருகதைகொண்
டாவவெனப் பயில்வானவ் வனத்துமொரு நாளடைந்தான். (கக)

செறிமரத்துன் மாலைவாய்ச் சென்றுபுலி யிருந்ததென
வறியதர்மன் பின்புறம்போ யங்கைத்தண் டேவோங்கி
முறியவொரு புடைபுடைப்ப முடிந்தானப் பிதாமறையோன்
னெறிகொள்பிதா வென்றறிந்து நினைவிலனாய் நீங்கினான். (௧௨)

நீங்கியவன் கொலைப்பாவ நிழல்போலத் தொடர்ந்துவர
வோங்கிமிகு பசிதாக மிரியாது னிவருத்த
வாங்கியலுங் கொடும்பாவி யணித்தாகக் கண்ணுற்றான்
வாங்கியவெஞ் சிலைமறவர் வழியலைத்து வாழ்சேரி. (௧௩)

அந்தமறச் சேரியிற்போ யலசினேன் பசியாலென்
றந்தவுரைத் தழுதானம் மறவருமுள் ளிரக்கமுற்றே
யிந்தமறப் பன்றியினூ னெடுத்துநுக ரெனவளித்தார்
கந்தவது நுகர்ந்துபசி தவிர்ந்தானீர் நசைமிக்கான். (௧௪)

எண்ணீரு மன்புடையா ரிறத்தனினைத் தழுதாலுங்
கண்ணீரோர் துளியும்வெளி காட்டாவிக் காட்டகத்தே
தண்ணீரெங் ககப்படுமென் றுளைந்து தடுமாறும்
புண்ணீர்மை மனத்தானங் கொருசூழல் போய்ப்புக்கான். (௧௫)

அதுபழையர் வாழ்சேரி யாவயிற்பன் மிடாவிருந்தின்
முதுகணிறைத் திருப்பதுகண் டுவந்தானாய் முன்னோடி
யிதுவிலைசெய் பவராரென் றெண்ணானாய் மோரென்றே
கதுமெனமொர் தையின்மொண்டு கடகடெனக் குடித்தனனால். (௧௬)

குடித்துநனி தேக்கெறிந்து கொண்டநீர் நசைதவிர்ந்து
வெடித்துவரா லெழுவாவி மென்பணைநன் னிலம்புக்கா
னொடித்துமதி யினைவெறிமே னொக்கலா லுயர்பிழிபு
மடித்துநர குய்த்திடுகோ மத்தாகந் தடித்ததால். (௧௭)

முன்செய்த வினைப்பயனை மோசிக்க வல்லவரியார்
தன்செய்கை யத்தனையுந் தவறென்று கருதானா
யென்செய்கை யிதற்கென்றே யெண்ணியெண்ணி மாழாக்கும்
புன்செய்கை யானங்கோர் புலைச்சிதனைக் கண்ணுற்றான். (௧௮)

கண்டவுடன் மாரவேள் கடுங்கணைகட் கிலக்காகி
யண்டமுழு வதும்பரவு மரியபழிக் காளானான்
கொண்டவுவப் பொடுமெவனோர் குறுகியொழி வருங்காம
மண்டவவள் கைப்பிடித்தான் மற்றவளு முடன்பட்டாள். (௧௯)

அழுக்குடைகா வதநாற வருவருப்பிபோன் றில்லானாய்
முழுக்கவமு தாயமைந்த முற்றிழையே யென்னவியந்
திழுக்கமைவா யூறலுமுண் டேக்தல்குற் றடம்படிந்து
விழுக்கவின்மே வுறத்துய்த்துப் பெருங்காம விடாய்தீர்த்தான். (உ0)

அடிசில்புலா லெடுத்தவளே யருத்தவினி துவந்துண்டு
கொடியனு வயிற்பயினுட் கொடுங்கள்வார் வாய்க்கடைஞர்
தடியெடுத்து வெரிந்புடைத்து முடுக்குதலுந் தளர்ந்தோடி
முடிவில்புகழ்ச் சாபாலி முனியுறையுட் கருகானுன். (உக)

புலையரகன் றனரன்னுன் புண்ணியவம் முனிமேய
நிலையுயராச் சிரமஞ்சார் நெடுவனத்தை யகலானு
யலைதருநா ளெப்பவத்தோ வவன்செய்த நல்வினையாற்
கலையுணரிம் முனியவனைக் கண்வெதும்பக் கண்ணுற்முன். (உஉ)

ஓதியா லவன்றன்மை யுள்ளவெலா முணர்ந்தானு
யாதிநா யகனேயென் றனைத்துலகும் புகன்முனிவ
னேதியா மிவற்கியற்ற லெனக்கருதிக் கமண்டலநீர்
மாதியா னம்புரிந்து வாரியிறைத் தனனவன்மேல். (உங)

அன்னநீர் தோய்தலுநல் லறிவுசிறி துதித்தெழுந்த
தென்னநாஞ் செய்தோமென் றிரங்கியவ னடிவீழ்ந்தான்
முன்னமியா வரும்புரியாப் பாவமுயன் றனைபுரிந்தாய்
சொன்னதீங் கொழிக்கும்வகை யென்றுணிந்தாய் சொலென்முன். (உச)

அடியனே னுதனறி யேனெல்லா மறியும்வித
முடிபுநீ புகறியென முன்பணிந்து வேண்டுதலுஞ்
செடியவாங் கானகத்தே சென்றுசிவ முனிவிழியிற்
கொடியவளாரி கொடுகிண்டிக் கொடுஞ்சாபி மேற்றனையால். (உரு)

நெடியகதை கொடுபுடைத்து நிகழ்தந்தை யுயிருண்டாய்
கொடியமற வர்களருத்துங் கொலைப்பன்றி யூனுகர்ந்தாய்
வடியமையக் குடித்துவந்தாய் வன்புலைச்சி முலைதோய்ந்தாய்
கடியவுனல் குணவயின்றாய் கடையைநீ யெனப்புகன்றான். (உசு)

சொற்றமுழு வதுங்கேட்டுத் துண்ணென்று நடுநடுங்கி
முற்றவுளம் பதைப்பதைத்து மூர்க்கனே னுய்யும்வகை
யுற்றவழி யருளென்று னேங்குதவச் சாபாலி
பொற்றதிற முளங்குறித்து நின்றானப் பொழுதின்கண். (உஎ)

குலவுகாம் பீலிவளர் கோபால சாமியெனு
நிலவுவயி ணவமறையோ னிகழுமவன் மனைக்குரியா
ளிலவுபுரை செவ்வாயா ளிலக்குமியென் ஞெருபெயராள்
கலவுகொடுங் குணம்பூண்டாள் கணவன்மன மழிந்திருந்தான். (உ௯)

அயலார்தோள் கலப்புறும்பே ராசையுளாண் மணவாள
னியலார்நன் னயமொழிக ளெள்ளளவுங் கொள்ளாளாய்
வியலார்தன் புன்ஞெழிலே மேற்கெண்டா ளதுகண்டு
மயலார்மற் றவட்சினந்தான் வைணவனு மக்கொழுநன். (௩0)

ஊருக நீயிருந்த லொன்றுமுற்று தெனக்கென்று
மாறுக நஞ்சூட்டி மடித்தாளக் கணவனைப்பின்
வேறுகத் தன்செயலே மேற்கொடலைத் தொழிந்ததற்குப்
பேறுகக் கொள்ளிவாய்ப் பேய்ாகி யுழிதருவாள். (௩0)

அந்தவனத் தகஞ்சார்ந்தா ளந்தணன்முன் பணிந்துநிற்கும்
பந்தமிகு மதர்மன்முகம் பார்த்தனள்பற் றுறநினைந்து
முந்தவழல் வாய்திறந்து முடுகுதலு மவனடுங்கச்
சந்தமுனி யுங்காரஞ் செய்துதடைப் படுத்திஞன். (௩௧)

ஆயவண்மற் றம்முனிவ னடிபணிந்து குணுங்கினுக்கு
மேயதியற் றிடநினைந்தேன் விலக்கியதெ னிவ்வுருவம்
போயதெனப் புரியிலையேற் புன்மையனைக் கொடுவென்று
ணயகவம் முனிவரனு நகைத்திதுகூ றுவதாஞன். (௩௨)

புருடனைக்கொன் மாபாவி போற்றியென மொழிந்தார்க்கு
மருடனைக்கொல் யோகாம்பா வெனப்புகனின் வாயார
வருடனைக்கொ லதர்மாநீ யான்மநா தாவெனச்செ
லிருடனைக்கொ லிருவீரு மெய்துவீர் பெருந்துறைக்கே. (௩௩)

பெருந்துறையென் பதுபாண்டி நாட்டகத்தே பிறங்கிடுமாங்
கருந்துறைத்தீர்த் தங்களெலா மடைந்துநா டொறுந்தோய்மின்
குருந்துறையும் பெருவாழ்வைக் கோமளயோ காம்பிகையை
மருந்துறைநோய்க் கெனத்தொழுது வழிபடுமி னினுஞ்சொல்வாம். (௩௪)

அருளான்ம நாயகருக் கன்னையோ காம்பிகைக்குத்
தெருளாள்வோ ராட்டியநீர் தேங்குதொட்டிக் கரையடைந்து
வெருள்சாரா விதமொண்டு மொண்டாடி வெண்ணீறே
பொருளாக நினைந்துடம்பெ லாம்புனைமி னினும்புகல்வாம். (௩௫)

அன்னநீ ருடற்பிணியு மமையாத் புவிப்பிணியு
மென்னபா தகமுந்தீர்த் திடுவதுசத் தியங்கண்டீர்
சொன்னமார் திருவீதி வலஞ்சூழ்மின் றுதித்திடுமின்
பன்னமே வாச்சிறப்புப் படைத்துய்வீர் போமென்றான். (௩௬)

அந்தமுனி வரன்பாத மன்புகொடு துதித்திறைஞ்சிச்
சந்தமிகு பெருந்துறையாந் தலஞ்சாரும் வழிக்கொண்டு
முந்தவவ னன்மகா தாவென்று மொழிதருவான்
பிந்தவிவள் யோகாம்பா வென்றுபே சுபுநடப்பாள். (௩௭)

ஓயாம விருவோரு முளைக்குமா மந்திரத்தாற்
சாயாம லோங்கியபா தகமனைத்துந் தலைசாய்ந்த
மாயாம லன்போங்க வந்துபெருந் துறையடைந்தா
ராயாமன் றுன்னைநா ளடுகொடும்பா தகம்புரிந்தோர். (௩௮)

தூயபெருந் துறையடையப் பேயுருவந் தொலைந்ததவட்
காயவதர் மனும்பிரம தேசுமரீஇ யவனானான்
பாயபுகழ்ச் சாபாலி முனிவரன்பன் னியபடியே
நேயமுற விருவோரு நிதமுஞ்செய் தேத்தெடுப்பார். (௩௯)

மிடைகொடுமை பலசெய்து வெவ்வினைக்கே யாளாகிக்
கடையரினுங் கடையேனாய் நரகமெலாங் கைக்கோடற்
குடையவனா யுடைந்துழலிவ் வொருத்தனையு மாட்கொண்டா
யடைசெறிபைங் குருந்தவனத் தண்ணாவோ வண்ணாவோ. (௪௦)

பொல்லாத பாவமெலாம் புரிவதற்கே யுடம்பெடுத்தே
னெல்லாத நரகமெலா மொருங்குதுவா வதற்கமைந்தேன்
கல்லாத கடையேனைக் கைகொடுத்தா டலுந்தகுமோ
வெல்லாத வளக்குருந்த வனத்தமரும் வித்தகவோ. (௪௧)

பஞ்சமா பாதகமும் பண்ணாளுஞ் செய்துழன்ற
வஞ்சனே னித்தலத்து வருவதற்கும் யோக்கியனோ
தஞ்சநீ யென்றடையுந் தன்னைளிசெய் தாட்கொண்டா
யஞ்சலூர் துறைக்குருந்த வனத்தமரு மண்ணாவோ. (௪௨)

அருவருக்கு மெனையுநின தடியருளுஞ் சேர்த்தாண்டாய்
பெருநெருப்புக் கீரமிலை யெனப்பேசல் விளக்கிடவோ
திருவிலிக்கோர் கதியில்லை யெனத்தேர்ந்த திருவுளமோ
மருமலர்ப்பைங் குருந்தவன வள்ளானீ யருளென்றான். (௪௩)

புருடனைக்கொல் பாவியான் புண்ணியனே பெற்றபடிநின்
னருடனைக்கொள் வதற்கடைந்தே னழுகிற்றே யழுகிற்றே
வெருடனைக்கொன் றடியானை மேன்மேலு முயர்த்திமிகு
தெருடனைத்தந் தருள்கருணைச் சிவயோகாம் பிகைத்தாயே. (௪௪)

விதவையெனற் கிருபொருளு மேவவுழ லிவ்விழிநாய்
கதவயிர நமனழுத்துங் கருநரகப் பெருங்கடற்கோர்
மிதவையென நின்னருடந் தாட்கொண்டாய் வியப்பிதுவே
சிதவயிரக் கலன்பூண்ட சிவயோகாம் பிகைத்தாயே. (௪௫)

காயுருவிற் கடையாகி நரகுழக்கப் போமெனது
பேயுருவந் தவிர்த்தாய்நின் பெருங்கருணைத் திறமென்னே
சேயுருவிற் கிரங்காரியார் சிவயோகாம் பிகைத்தாயே
வேயுருவத் தோளாயென் றிலக்குமியு மிகத்துதித்தாள். (௪௬)

அதர்மனென்போன் றன்பெயர்முன் னகன்றவொரு பெயர்புனைந்தான்
பதமருவு மிலக்குமியு மிலக்குமியே யெனப்பட்டா
ளிதமருவுந் தனுமதியி னெய்துபெருந் தரிசனத்தின்
சுதமிலிரு முதுகுரவர் களுமிவர்க்குத் துணைந்தருள்வார். (௪௭)

மறையோனைக் கணநாத ருக்கிவளர் திருக்கைலை
யுறைவாயென் றுய்த்தனரா லாட்கொண்ட வுமாபதியார்
கறைதீரு மவ்வளாகம் பணிசெய்யுங் காதலியாய்க்
குறைதீர வுறையென்று ளிலக்குமியைக் கோமளையே. (௪௮)

வாளுடையப் பொலியும்விழி யிலக்குமியை மறைக்குலத்துத்
தாளுடையப் பிறந்தானை யாளுடைய தன்மைகண்டே
வேளுடைய விழிதிறந்த பெருந்துறைவாழ் வித்தகரே
யாளுடைய ராளுடையா ரென்றகில மெடுத்தேத்தும். (௪௯)

மிக்கதவச் சாபாலி யருள்வழிமே விருவோரு
மிக்கபுகழ்க் கைலாய மேயதிற மெடுத்துரைத்தா
மிக்கவளப் பெருந்துறையுண் மேவியமற் றொருநால்வர்
மிக்கவருட் டிறம்பெற்று விளங்கியகா தையும்விரிப்பாம். (௫௦)

அதர்மனும் இலக்குமியும் முத்தியடைந்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௫௭௩.

---

# வேடன் முத்தியருளிய நால்வர்
## அருள்பெற்றபடலம்.



புத்தியெய் தூர்களும் பொலிசு வர்க்கமுற்
சித்தியெய் தூர்களுந் தீரத் தீர்த்தியர்
முத்தியெய் தூர்களு முனிவர் வாதவூர்
நித்தியர் திருவடி நேசித் தார்களே. (க)

வேறு.

ஓங்குமல யாசலத்தி னொருசாருள் ளதூஉன்மை
தேங்குதிற மருவாத சிலைவேடர் செறிசேரி
யாங்கெறிகுத் தடிபறிகொல் லெனுமார வாரமலாற்
பாங்குபெறு மிரக்கமொழி யெந்நாளும் படுதலிலை. (உ)

அனையகுறச் சேரியிடை யாழிசூ ழிலங்கையிடை
வினையநிசா சரர்குலத்துள் வீடணன்போ லொருவனுளன்
ரிர் சிவலிங்க மாலைபுனை தருமுடியா
பெருமா னடிக்கன்பு நீங்காதான். (ங)

அன்னவனுக் குரியமனை யாளிரதி யெனப்பொலிவாள்
பன்னருங்கற் பினிற்சிறந்தாண் மணவாளன் பணிபுரிவா
ளின்னமுத நிகர்வளோ டியல்குறவ னிறடி விளைத்
தென்னகிழங் குங்கவரா வினிதுண்டு வாழ்தருநாள். (ச)

ஆயகிரா தச்சேரிக் கதிபனு மொருகொடியோன்
மேயவிவன் மனைவியெழில் விழைந்தொருநாட் கண்ணுற்றான்
பாயமத வேள்விடுக்கும் பல்கணையாற் புண்ணுற்றா
னேயவினிச் செயலாவ திஃதென்றே யெண்ணுற்றான். (ரு)

தனனுடைய கணவனுயிர் தபச்சாடி னலன்றி
மின்னுடையப் பொலிமருங்குல் விரும்பெனக்கு வசமாகாண்
முன்னுடைய நல்வினையான் முடிப்பதற்காம் வலியுள்ளேன்
கொன்னுடைய விக்காலங் குறித்தபடி செயல்வேண்டும். (சு)

என்றுகரு தியதுணர்ந்தா னென்செய்வேன் சிவனேயென்
றன்றுமனை வியுந்தொடர வந்நின்றும் வெளிப்பட்டுத்
துன்றுமிரா வழிநடந்து துட்டன்விழி காணாமே
மன்றுணட நவில்பெருமான் பெருந்துறையை வந்தடைந்தான். (எ)

கேடில்பெருந் துறையடைந்த கோதனரு மனைவியொடு
காடியவா னவதீர்த்த நயந்தாடி நீறணிந்து
கூடியபே ரருளான்ம நாயகர்சந் நிதிகுறுகிச்
சாடியவா தனையுடையா னுய்த்தாழ்ந்து தாழ்ந்தெழுவான். (அ)

இராமுழுதுந் துயிலானு மியல்வீதி வலஞ்சூழ்வான்
பராபரனே யடியேனைப் பாதுகாத் தருளென்பான்
விராயபகை வன்வலியோன் வெங்கொலைசெய் திடல்குறித்தா
னராவணிவா யடியேனு னடைக்கலங்கா ணெனப்புகல்வான். (௯)

அற்புமிக விவனிவ்வா றறைதரமற் றவன்மனைவி
வெற்பரைய னினிதீன்ற விளங்கிழையோ காம்பிகையே
பொற்பமையுந் தாயேநின் புத்திரியா னென்னுடைய
கற்புவழு வாவண்ணங் காத்தருள்வா யெனக்கரைவாள். (௧௦)

இந்தவா றமர்தருநா ளிறவுளர்தங் குலத்தலைமை
யந்தமா பாவியிவ னணங்கினொடு மெங்கொளித்தான்
முந்தநீர் தேடுமென முற்றியசில் வேடரொழுந்
தெந்தலூ ருந்துருவிப் பெருந்துறைவந் தெய்தினர். (௧௧)

மனைவியொடுஞ் சிவப்பிரியம் வாய்ந்தமர்வே டனைக்கண்டு
துனையவிறை யவன்பாற்போய்ச் சொற்றூரப் பொழுதத்தே
கனையிருண்மால் களிற்றுமதன் கடுஞ்சமருக் காற்றானுய்ப்
புனையிழையக் கையினெழுந்தான் போர்குறித்துப் படைஞரொடும். (௧௨)

வந்துபெருந் துறைபுகுந்தான் மாதேவன் சந்நிதியிற்
கொந்துமலர் புனைந்தகுழற் குறக்கோதை யுடன்பணிந்து
நந்துவிருப் பொடுநிற்கு நல்லவே டனைக்கண்டான்
சந்துமுசறி வரைக்குறவர் தமக்கிறையோ னுங்கொடியோன். (௧௩)

எடாநீ யெனைத்தப்பி யிங்குற்று யுய்திகொலோ
தேடவரும் பொருளிறைவற் சேர்வதென வுணராயோ
கூடமனை வியைக்கொடுத்தி கொடாயேலுன் னுயிர்வீப்பன்
மூடவிடுத் தொழிதியென மொய்படைஞ ரொடுவளைத்தான். (௧௪)

அதுதெரிபு நடுநடுங்கி யருளான்ம நாயகவோ
முதுவிடமுண் டுலகளித்த முழுமூல காரணவோ
கதுமெனவந் தெனைவளைத்தான் கடும்பாவி யானினிச்செய்
வதுதெரியே னபயமென வாய்திறந்து முறையிட்டான். (௧௫)

ஆலமெழ நடுநடுங்கி யன்றயன்மா லுள்ளிட்டார்
சாலவும்வந் தபயமெனத் தளராது புரந்தனைவெங்
காலனைக்கண் டபயமெனக் கைகுவித்தல் செய்தசிறு
பாலனைக்காத் தவற்கொன்ற பண்ணவனு நீயலையோ. (௧௬)

வெங்காள மெடுத்தயின்ற விமலவோ யோகமயில்
பங்காள வோமலரோன் படுதலையிற் பலிகொண்ட
கங்காள வோகொடியோன் கடியேனைக் கடியாம
லிங்காள வேண்டுமெனக் கென்றுமடைக் கலமென்றான். (௧௭)

புலிவலையப் பதைக்குமான் போற்பதைக்குங் குறக்கொடியு
மெலிவமைநின் மகட்கிரங்க வேண்டும்யோ காம்பிகையே
வலியவன்பன் மூர்க்கரொடும் வளைத்தனனியா னென்செய்கேன்
கலிபொருமீற் றவற்றுரந்தென் கற்புநிலை காவென்றாள். (௧௮)

வருந்தாமே யுலகனைத்து மீன்றெடுத்த மாதாவே
பொருந்தாதா னெனைத்தீண்டிற் போவதொழி யாதெனுயி
ரருந்தாநஞ் சயின்றவர்பா லமர்ந்தருள்யோ காம்பிகையே
கருந்தார்வண் டமர்குழலாய் காப்பதுநின் கடனென்றாள். (௧௯)

அம்மையருள் சுரந்தெங்க ளான்மநா யகற்பாராச்
செம்மையடி கேள்பரா முகஞ்செய்கை தகாதென்னக்
கொம்மைவிடை யுடையானுங் குறுமுறுவல் கொண்டருளி
வெம்மையொரா யுதமவன்கை மேவவிடுத் தருள்செய்தான். (௨0)

அந்தவாள் கையுறல்கண் டையாரு ளனறெரிந்து
சந்தமார் வரைக்குறவன் றுப்புலிப்போத் தெனப்பாய்ந்து
வந்தயா வருஞ்சிதைய மாட்டியிறை வனைத்துள்ளி
யுந்தமார் பாவுதங்கொண் டேன்றிழிதித் துயிர்குடித்தான். (௨௧)

யாவருங்கண் டதிசயித்தா ரான்மநா யகர்புரிந்த
மேவரும்பே ரருணினைந்து விடாதபெரு விருப்பினொடும்
பாவருந்தன் மனைவியொடும் பரம்பரனு லயத்துள்ளா
லோவருந்தே வாய்நின்றான் மற்றிருவர் திறமுரைப்பாம். (௨௨)

மாதங்க னெனுமொருவன் மனைவிமா தங்கியொடும்
பாதங்க மரியயனு லறியாதார் பதம்பணிவா
னுதங்க மொழிந்தானுய்க் கோடுகுறிப் பதினமைந்தா
னுதங்க வவன்றுதியோவிற்றுமொரு திறம்பூண்டான். (௨௩)

இந்தவிதம் பற்பலநாண் மனைவியொடு பிலவரியங்கச்
சந்தமறைப் பொருளானு ரவற்கிரங்கித் தாரணியி
லெந்தவிடத் தினுமுளபுன் றெய்வமெலாங் கோடே
மூந்தமகிழ் தரும்பறைக்கு மவ்வாறே மகிழ்முயங்கும். (௨௪)

பறையடித்துக் கோடேப் பிரசன்னப் படுமென்றே
றறைவரந்தங் தனநீயு மனையவரைக் குறவன்போன்
முறையினிலை கிற்றியென முன்னவன்பே ரருள்புரிந்தா
னிறைமனைவி யொடுநின்று னிகழுமொரு மாதங்கன். (௨௫)

குறவன்முத னல்வருக்குங் கோமான்பே ரருள்புரிந்த
வறமலிகா தையையுரைத்தா மருந்தவஞ்செய் நைமிசத்துத்
திறமலிமா முனிவரெலாம் பெருந்துறைசேர்ந் தருச்சித்து
கிறமலியுந் திருவருள்பெற் றமர்ந்ததிற நிகழ்த்துவாம். (௨௬)

வேடன் முதலிய நால்வர் அருள்பெற்றபடல முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௫௧௧.

# நைமிசமுனிவர் பெருந்துறையடைந்து பூசித்தபடலம்.



சேல்காட்டி மிளிர்வயல்சூழ் தில்லைவா ழந்தணர்தம்
பால்காட்டி வாசகவாச் சியம்பகர வேண்டுமென
மால்காட்டி யிடாச்சபையிற் கைகாட்டி வழிவிட்டார்
கால்காட்டி யெமையாளுங் கருணையுடை யுவரானோர். (௧)

தாதநெறி முதலனைத்துந் தகப்பயின்ற சவுனகன்முன்
மாதவமா முனிவரெலாம் பெருந்துறைமான் மியம்டகர்ந்த
சூதமுனி வரன்பாதந் தொழுதெழுந்து முன்னிருந்து
காதவொரு விண்ணப்ப நாஞ்செய்வ துண்டென்றார். (௨)

அன்னதெவ னெனவினவ வருமறையா கமமுதலா
வென்னபல நூலுமெடுத் தியம்புதலம் பெருந்துறையென்
றுன்னருளி னானுணர்ந்தே மாங்கடைந்து தரிசிக்கத்
தன்னமிலா வேணவாத் தலைக்கொடுநின் றனவென்றார். (௩)

என்றவுரை செவியுறலு மிருந்தவத்துச் சூதமுனி
நன்றமையு மிவ்வாலை நமக்குமுன் மேயுளதா
லன்றலிலா நீவிரெலாம் புறப்படுமி னியாமுமுடன்
றுன்றவரு வேமென்றான் மகமுடித்துத் தொழுதெழுந்தார். (ச)

அந்தணா ணன்றுளே யாகனி மனமகிழ்ந்து
நந்தவான் வழிக்கொண்டு நடக்கின்ற ரக்காலை
முந்தனே யெனுஞ்சூத முனிசவுன காதியரைச்
சந்துமார் தரநோக்கித் தலமனைத்துந் தெரித்திடுவான். (ரு)

தனகனடைந் திறந்தவா ரினிப்பிறவாத் தகையருளிப்
புன்கணொழித் திடுதலமிப் பொழிலடுத்தோன் றிடல்காண்மி
னன்கணியன் மாறுகப் பொதுநாமஞ் சிறப்பாக்கி
வன்கண்மல மாற்றியமர் வரையிதுகண் டிறைஞ்சிடுமின். (சா)

வெள்ளியமா மலைபெயர்த்தான் மிகமுயன்றும் பெயர்க்கரிய
வொள்ளியமா பலவிலிங்க முறைதான மதுகாண்மி
னுள்ளியசீர் வடவெழுத்தச் சுட்சூறிநீர் நெடிலுண்முதல்
புள்ளியகவ் வேறமுதற் புணர்தார மிதுகாண்மின். (எ)

சரநாக மொருமூன்றுட் டாநாக மல்லாத
வுரனாக விரோதித்துத் தொழுவரைமற் றுதுகாண்மின்
கரவார்பால் வஞ்சமிலார் வஞ்சநிழல் காதலித்து
விரவாதன் கமர்தான மெய்த்தவத்தி ரிதுகாண்மின். (அ)

புண்ணியநா வலர்கோவைச் சங்கிலியார் பொருட்டவர்பே
ரண்ணியமெல் லொற்றைவல்லொற் றுக்கியவூ ரிதுகாண்மி
னெண்ணியவோர் தாதுவைக்கொண் டெழுதாதுஞ் சண்பையர்கோ
னண்ணியமுன் னிரப்பவொளிர் நற்றலமற் றிதுதொழுமின். (௯)

பேயுருவ் முறவடைந்தும் பிஞ்ஞகனே யிவ்வுருவந்
தாயுருவ மெனப்பட்டார் தொழுந்தலமற் றிதுகாண்மின்
ஆயுருவ மறைமாவார் மறைமாவி னடியமர
வேயுருவத் தோளிதொழு மெய்த்தலமற் றதுகாண்மின். (௧௦)

---

ச. ஸ்ரீகாசி. அ. திருக்காளத்தி. ௧௦. திருவாலங்காடு
,, ஸ்ரீசைலம். ,, திருப்பாசூர். ,, திருக்கச்சியேகம்
எ. திருக்கோகர்ணம். ௯. திருவொற்றியூர். பம்.
,, திருக்கேதாரம். ,, திருமயிலாப்பூர்.

ஒருகழுகு காணாத வொண்முடியா ரருணோக்கி
யிருகழுகு தொழுமவர்சொல் லெனும்விலங்க லிதுகாண்மின்
மருவுபல நூன்மொழிக்கு மாறாக வயங்கழலாய்ப்
பொருமிருவ ரகத்தினிருள் போக்குமலை யதுகாண்மின். (கக)

புரமூன்று மொருகணையாற் பொடித்ததல மிதுகாண்மி
னுரமார்ந்த வந்தகனை யுருட்டுதல மதுகாண்மின்
பரவான்ற மாணிவழி பட்டகுழி யுதுகாண்மின்
சிரமேந்தி தினைப்புனத்துறப் பவித்ததே மிதுகாண்மின். (கஉ)

நீர்செலுத்தல் போற்குளத்து நிதிசெலுத்து மணிமுத்தப்
பேர்செலுத்து நதிசூழும் பெரும்பதிமற் றிதுகாண்மி
னூர்செலுத்து மொருவனைக்கல் லொடுஞ்சுமந்து நனிநாலைப்
பேர்செலுத்து புனல்செலுத்தப் பிறங்குபதி யதுகாண்மின். (கங)

ஆக்கறம ருகமியற்ற வளித்தவுப யம்புரியப்
போக்கலழற் சிகையாக்க மறைத்தலொரு தாள்புரிய
நீக்கலொரு குஞ்சிதத்தா ணிகழ்த்தமறை முதலின்பந்
தேக்கவுயி ருறநடிக்குந் திப்பியத்தே மிதுகாண்மின். (கச)

கைத்தோணி கரவாது கடல்கிடந்த படிகாப்பக்
கைத்தோணி விடுத்தனைத்துங் காத்தார்கண் ணிதுகாண்மி
னெய்த்தோவென் றடைந்தார்தம் பிணியனைத்து மிரியவெல்லா
மெய்த்தோதஞ் சூழுமருந் தீவார்தே மதுகாண்மின். (கரு)

வழுவாத மலர்க்கணையான் மாணெழில்சே ருடம்பையழ
லெழுநாவுஞ் சுவைகாண விட்டதல மிதுகாண்மின்
கழுதாடு காட்டாடு கால்காலா லெனக்கடூம்
பொழுதேவன் மார்பமுறப் பொருத்துதல மதுகாண்மின். (கசு)

குடைவார்த மொருகுளக்கட் கண்மலரொன் றுறக்கொடுக்கு
மடைவார்கண் மலர்பலவா மூக்குளக்கண் ணதுகாண்மி
னுடையார்நெஞ் சொருவாத வுலகீன்ற வரமைஞ்ஞை
விடைவூர்கே தனற்போற்றி விழைந்ததல மிதுகாண்மின். (கஎ)

---

கக திருக்கழுக்குன்றம். கஉ திருத்தினைநகர். கரு புள்ளிருக்குவேளூர்.
,, திருவண்ணாமலை. கங. திருமுதுகுன்றம். கசு. திருக்குறுக்கை.
கஉ. திருவதிகை. ,, திருப்பாதிரிப்புலியூர். ,, திருக்கடவூர்.
,, திருக்கோவலூர். கச. சிதம்பரம். கஎ. திருவெண்காடு.
,, திருமாணிகுழி. கரு. சீகாழி. ,, திருமயிலாடுதுறை.

புரகரன்வெங் கரியுரித்துப் பேர்த்திடுதே மிதுகாண்மின்
வரமிகுமா துலன்வேள்வி மடித்தவிட மதுகாண்மின்
றரமிகுவெஞ் சலந்தரனைச் சாடியதே முதுகாண்மின்
பரவரிகண் ணிடந்தவனை பெற்றபதி யிதுகாண்மின். (கஅ)

ஒன்பதுகோ டியர்சித்த ரொருங்குதொழக் கற்பத்தும்
வன்பதுசார்க் தரசுநிலை மாத்தலமற் றிதுகாண்மி
னன்பதும மாதிகொடு நலங்கொள்பதி ஞெருகோடி
யன்பூதவா யுருத்திரரேத் தெடுத்ததல மதுகாண்மின். (ககூ)

பரவுபெரு நதியனைத்தும் பன்னிரண்டாண் டிற்கொருகால்
விரவுதிற மடைந்தாட விழைபுனற்றே மிதுகாண்மின்
கரவுதவிர் திருநந்தி காதலித்துத் தவஞ்செய்தே
யுரவுமிக நினைத்தவெலா முற்றதல மதுகாண்மின். (உ0)

கோழியர்கோ னுளங்களிப்பக் காவிரிநீர் கொளுமாரம்
வாழியநீ ரொடுங்கொண்டார் வாழிடமற் றிதுகாண்மின்
வீழியவா யொருத்திக்காத் தாயுமாய் வியக்கவரு
ளாழியநஞ் சுண்டபிரா னமர்வரைமற் றதுகாண்மின். (உக)

அரதனமா விலங்கலென வறைவிலங்கி லிதுகாண்மின்
மரகதமா மலையென்ன வழங்குமலை யதுகாண்மி
னுரவியம னதிகாரம் பெற்றதல முதுகாண்மின்
பரனுமையோ ருருவாகிப் பரிந்தமர்தே மதுகாண்மின். (உஉ)

கடனுகைக் காயாரோ கணரளித்த பரியுகைக்கு
மடலார்குஞ் சரமுகைக்க வருளியதே மிதுகாண்மின்
கெடல்சார வரசசபை கெழுமிமுனி வரர்காண
மிடலார்கோன் றையர்நடஞ்செய் மாத்தலமற் றதுகாண்மின். (உங)

கொழுவலையின் சாரமறக் குடித்தவர்தே மிதுகாண்மின்
பொழுதினுற விகள்பூசை புரிந்ததல மதுகாண்மின்
செழுமலரோன் சிரங்கொய்த திப்பியத்தே முதுகாண்மின்
முழுவலிமா றலைவினுனி முருக்கியதே மிதுகாண்மின். (உச)

| | | |
|---|---|---|
| கஅ. திருவழுவூர். | உ0. திருக்குடந்தை. | உஉ. திருச்செங்கோடு. |
| ,, திருப்பறியலூர். | ,, திருவையாறு. | உங. திருவஞ்சைக்களம். |
| ,, திருவிற்குடி. | உக. திருவானைக்கா. | ,, திருப்பேரூர். |
| ,, திருவீழிமிழலை. | ,, திருச்சிராப்பள்ளி. | உச. திருக்கற்குடிமாமலை. |
| கக. திருவாவடுதுறை. | உஉ. இரத்தினகிரி. | ,, திருவெறும்பியூர். |
| ,, திருவிடைமருதூர். | ,, திருவீங்கோய்மலை. | ,, திருக்கண்டியூர். |
| | ,, திருப்பைஞ்ஞீலி | ,, திருவாரூர். |

புண்டரிக முனிவனையா ரோகணஞ்செய் புரப்பெருமா
னண்டர்தொழ வீற்றிருத்தற் காயதல மதுகாண்மின்
பண்டரிய மறையனைத்தும் பூசித்துப் பயன்பெற்ற
வண்டரிக வாய்பொழில்சூழ் வளம்பதிமற் றிதுகாண்மின். (உரு)

பண்டுதச முகற்செகுத்த பழிதீர விராகவன்முன்
மண்டுபெருங் காதலொடு வழிபடுதே மிதுகாண்மின்
விண்டுவனத் திடைப்பிறந்த வெண்முத்தே யெனக்கரைந்து
தொண்டுபடு வார்க்கருளுஞ் சுந்தரர்வைப் பதுகாண்மின். (உசு)

வினமணக்கு முருவமெனன் மாறிநறுங் கொன்றைதும்பை
யினமணக்கு மருவுருவ மியைந்ததே மிதுகாண்மின்
கனமணக்கு முடிமுதலாக் கைதொழுமூன் றிடங்கொண்டெம்
மனமணக்கும் படியமரு மால்வரைமற் றதுகாண்மின். (உஎ)

எம்மறையு மொழிந்தார்கை யேட்டெழுத மொழிபெயர்த்தே
யம்மறைசொற் றவருதித்த வருந்தலமற் றதுகாண்மின்
மும்மறையும் புகழ்சைவத் திறமுழங்கு நீருநெருப்
பும்மறையா வெளிப்படுத்தப் பொலிதலமற் றிதுகாண்மின். (உஅ)

தானகக ரத்திணொடு சம்பந்தஞ் செய்தவளை
யானதிரு கண்டிடுமி னழகியபி ரானேயென்
றீனமிலாள் கபோலத்திற் கிள்ளிமுத்த மிடப்பெற்ற
வானவர்நா யகருறையு மாத்தான மதுகாண்மின். (உகூ)

ஆயவசு கசப்பெயரா லலங்குதல மதுகாண்மின்
மேயபுகழ்ச் சிதளிசேர் மெய்த்தலமற் றிதுகாண்மின்
றூயதுணை மாலைபுணர் தோளார்தே முதுகாண்மின்
மாயவிடைக் காளைபயில் வண்கான மதுகாண்மின். (௩0)

மாலறையாப் பாசுரந்தங் கியவாய்மற் றதுகாண்மின்
சீலமெனும் பெயர்பூண்டு கிளர்தான மிதுகாண்மின்
சாலவிருத் தேசுரப்பர் தரித்தார்கள் ணுதுகாண்மின்
கோலமிகுத் தரமுதற்சார் கோசமங்கை யதுகாண்மின். (௩க)

---

உரு. திருநாகைக்காரோணம்.
,, வேதாரணியம்.
உசு. இராமேச்சுவரம்.
,, திருநெல்வேலி.
உஎ. திருக்குற்றாலம்.
,, கொடுங்குன்றம்.
உஅ. திருவாதவூர்.
,, திருவாலவாய்.
உகூ. திருப்பரங்குன்று.
,, திருப்பூவணம்.
௩0. திருவாடானை.
,, திருப்புத்தூர்.
,, திருச்சுழியல்.
௩0 காளையார்கோயில்.
௩க. திருவேடகம்.
,, திருவாப்பனூர்.
,, திருப்புனவாயில்.
,, திருவுத்தரகோசமங்கை.

இன்னமுள தலங்களெலா மெடுத்திலும்ப முற்றுவவோ
ன்னருள நாங்கருதிற் றணித்தாக நண்ணியதா
லன்னதலத் தினையின்னே யடைந்துதொழு துய்வாமென்
றுன்னரிய பெருந்துறைநே ருற்றார்நூல் கற்றாரே. (கூஉ)

தூயபெருந் துறைவலமாச் சூழ்ந்துநிலத் திறங்கினார்
பாயவளங் கண்விடுத்துப் பார்த்தனர்தம் மினைந்திகைத்தார்
மேயவிதற் குயர்வொப்பில் விளம்பலா மிதற்கிதுவென்
றாயுமகிழ்ச் சியர்முனிவ ரனைவரும்வீ தியிற்பணிந்தார். (கூகூ)

கோனுநா ளுந்தவழுங் கோபுரமு னடைந்திறைஞ்சி
யானுநா யகர்கோயி லுட்புகுந்தக் கினிதீர்த்த
மூனுமா கமவிதியாற் படிந்தெழுந்து முனைகர்கொளா
நானுமா னைந்தமருள் வெண்ணீறு நயக்கணிந்தார். (கூச)

கண்மணிமா லிகைபுனைந்தே யஞ்செழுத்துங் கணித்தாராய்
விண்மணியால் விடலுவக்கு மழகளிற்றின் முனமேவி
யெண்மணியே யொருகோட்டுக் கற்பகமே யெனுமடியார்
வண்மணியே யெனத்துதித்து மலரடிபோற் றுபுசென்றார். (கூரு)

ஆளுடைய பெருமானை யரவமெலா மெடுத்தணியெண்
டோளுடைய சுந்தரனைச் சுடர்மூன்று நனிவட்கும்
வாளுடைய மெய்யானை வருமறலி யுயிர்குடித்த
தாளுடைய வான்மநா தனைக்காண்பா னுட்புகுந்தார். (கூசா)

சொக்கவிநா யகர்பாதந் தொழுதுகுருந் தடிநீழன்
மிக்கபொன்னு லாஞ்சபைமுன் விரைந்தேகிக் கண்ணுற்று
ரக்கரவா ரணியான்ம நாயகனை யப்போதத்
தக்கவர்மே வியமகிழ்ச்சி யாமேயோ சாற்றவல்லேம். (கூஎ)

இருகண்ணுநோக் குறவிடுத்தா ரிருகைதலை மேற்குவித்தா
ரருகலிலா வரவோமென் றடுத்தடுத்து வாய்நவின்றார்
பெருகுமுரோ மஞ்சிலிர்த்தார் விழிப்புனலும் பெருக்கினார்
வெருவழல்சான் மெழுகென்ன மிகவுடைந்துள் ளுருகினார். (கூஅ)

இந்நாளே பிறந்தபய னெய்தியநா ளெனப்புகல்வா
ரிந்நாளே பசுபோத மிரித்துயர்ந்த நாளென்பா
ரிந்நாளே கண்படைத்த பேறெய்த நாளென்பா
ரிந்நாளே யின்பமுத்தி யெய்தியநன் னாளென்பார். (கூக)

அழுவாரு மழுதழுதாங் கன்பினாற பரவுவாராய்
விழுவாரு முடனெழுந்து மேனியுரோ மஞ்சிலிர்ப்பத்
தொழுவாரு நாக்குழறத் துதிப்பாரும் பவக்கடனின்
றெழுவாரு நாமேயென் றிசைப்பாரு மாயினார். (ச௦)

இந்தவிதம் பரவுபுநீ றேற்றுநுத லகத்தரித்துப்
பந்தமிலா ரொருவாறு வெளிவந்து பணைதளிசூழ்ந்
தந்தமிலாக் குருந்தடியா சாரியனை யடிவணங்கிச்
சந்தகடா ராசர்முத லியாவரையு முறத்தாழ்ந்து (சக)

படைத்தளித்துத் துடைத்துமறைத் தருளலெனப் பகரைந்து
முடைத்தலையிற் பலிகொண்டார்க் குடனிருந்து முடித்தருளி
யடைத்தவுல கத்தனைக்கு மாதார மாயெல்லா
முடைத்தனியோ காம்பிகைதன் றிருமுனமுற் றுருரவோர். (சஉ)

ஆங்குமுன முரைத்தபடி யகலெங்கும் பிட்டணைந்து
வீங்குபுகழ்த் திருவாத வூரர்முன மேவினார்
நீங்குதலின் மகிழ்ச்சியராய் நெஞ்சுருக நனிதொழுது
தேங்குபெருஞ் சிவயோகச் செழுந்தேறல் வாய்மடுத்தார். (சங)

அரிதுபுறம் போந்தொருசா ராச்சிரமஞ் செய்தமர்ந்து
பிரியமிகக் காலங்க டொறும்பேணிப் போய்த்தொழுவார்
விரிதிரைத்தீர்த் தங்களெலாம் விருப்பினொடு படிதருவார்
தெரியமகிழ் வுணர்த்தமருஞ் சிவக்கொழுந்தை யுந்தொழுவார். (சச)

ஓயாத முயற்சியரா யிவ்வண்ண முறைதருநாண்
மாயாத பெருங்கீர்த்தி மாணிக்க வாசகர்க்குச்
சாயாத வன்புடையார் தனுமாத விழாவெடுத்நா
ரேயாத வதுதரிசித் திடுவாஞ்சை யுடையவராய். (சரு)

ஆயவா ரோகணமுன் னலங்கவரோ கணமளவு
மேயவுலா விருபோதும் விளங்குறக்கண் டினிதேத்தி
நாயனார் குருந்தடியி னகவருளுந் தரிசனமும்
பாயவிருப் புறப்பெற்றார் பெறப்படுவ தினியென்னே. (சசு)

எல்லாரு மிந்தவித மேத்தியா னந்தமுற்றுச்
சொல்லாருங் குருந்தவனச் சோதிபால் விடைபெற்றுச்
செல்லாரு நைமிசமாந் தம்மிருக்கை யுறச்சேர்ந்தார்
வில்லாரும் புகழ்ச்சூத முனிபூசை மேற்கொள்வார். (சஎ)

அரியபுரா ணந்தாங்க ளறிபாக்கு விரித்துரைத்த
பெரியபுகழ் முனிவரனைப் பிறங்குமா சனத்தேற்றி
யுரியமலர் சந்தமுத லுபகரணம் பலகொண்டு
விரிவெருக் கியமாதி விசேடமுறத் தாபித்து. (சஅ)

பரசிவனே யிவனென்னப் பாவித்துப் பூசித்து
வரசன்மா னமுங்கொடுத்து முகமனுரை வழங்கியபி
விரவுமவன் மாணுக்க ரனைவருக்கு மேதகவிற்
கரவிறுகி லாதிகொடைத் தொழினிரம்பக் கண்டதற்பின். (சகூ)

ஏற்றமிகு சூதமுனி யிருக்கைசெல வுய்த்ததற்பி
னூற்றவவ னருளியவா றூன்மரா தனைக்கருணை
மாற்றரும்யோ காம்பிகையை வாதவூர்ப் பெருமானைத்
தேற்றமுறச் சிந்தித்துத் தெளிந்துவாழ்ந் திருந்தனரால். (ருo)

இத்தகைய புராணத்தை யெழுதுவோ ரெழுதுவிப்போ
ருத்தமமே வப்படிப்போ ருண்மையுறப் படிப்பிப்போர்
வித்தகமாம் பொருள்கேட்போர் கேட்பிப்போர் விளம்பிவர்கட்
கத்தமெடுத் துதவிடுவோ ராகியமற் றனைவோரும். (ருக)

இம்மையிலே பெருஞ்செல்வ மியையமனை மக்களொடுஞ்
செம்மைபெற வாழ்ந்திருந்திந் திரன்முதலோர் பதங்களெலாம்
வெம்மையற வனுபவித்து முற்றியபின் மேலாய
வம்மையொரு பாலான்பொன் னடிமலர்சார்ந் தின்புறுவார். (ருஉ)

நோயடையார் மிடியடையார் நுண்ணியர்மே வியசபையின்
வாயடையார் தீயகுண மனையடையார் மாண்பில்லாச்
சேயடையா ரினும்பலவாந் தீங்கடையார் செறிதளிர்பூக்
காயடையார் குருந்தவனப் புராணமது கற்போரே. (ருங)

புண்ணியமார் பெருந்துறைப்பு ராணத்தோர் கவிகற்றோர்
திண்ணியவான் பெருஞ்சைவ சித்தாந்தச் செல்வரா
யண்ணியசித் தாந்தசைவ மடைந்தின்ப நிலைபெறுவார்
நண்ணியமுற் றுந்தெரிவார் நலமுரைக்க வல்லவரியார். (ருச)

தூயவள மோங்குபெருந் துறைப்புரா ணம்பொறித்த
நேயமலி புத்தகமோர் சிறுமனைவாய் நிலைபெறினு
மாயமனை பெருமனையா யளப்பரிய திருவுடையு
மேயபுன்றே வம்மனையூ ரெல்லையினு முறுதன்றே. (ருரு)

வேறு.

வாதவூ ரடிகளுக்குப் புரூரவனேற் படுத்தியவா வளஞ்சால் சாறு
பேதமிலா கமப்படியே நடந்ததுமுன் வைதிகத்தாற் பின்னுண் மாறிற்
றோதவமை யாவதுதெய் வீகத்தா லுணர்ந்திநா ளுறத்தா பித்த
போதமலி துறைசையெஞ்சுப் பிரமணிய முனிவர்பிரான் புகழ்மேல் வாழ்க.()

தூயதிரு வெண்ணீறுங் கண்மணியு மைந்தெழுத்துஞ் சுரந்து வாழ்க
வாயபெருந் துறைவாழ்க வான்மா யகர்வாழ்க வருள்சூற் கொண்டு
மேயசிவ யோகபரா பரைவாழ்க வாதவூர் விமலர் வாழ்க
சேயமலி யம்பலத்து நடநவிலுங் குஞ்சிதத்தா ணீடு வாழ்க. (௩௭)

நைமிசமுனிவர் பெருந்துறையடைந்து பூசித்தபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௧௫௬.

---

திருப்பெருந்துறைப்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதி துணை.

# அரும்பதவுரை

## கடவுள் வாழ்த்து

க. மா - திருமகள். மோடு - பெருமை. ஆமை முதுகு-மந்தரமலையைத் தாங்குதற்குத் திருமால்கொண்ட ஆமைவடிவத்தின் முதுகு. ஓட்டை. தற்கு— தனக்கு; (விநாயகமூர்த்திக்கு). அருச்சிப்பார் - அங்கபூசை செய்பவர். என்பு ஆதி - எலும்பு முதலியவைகள். திருமாலின் அவதாரமாகிய கூர்மத்தைவென்ற விநாயகர் அதன் முதுகோட்டைச் சிவபெருமான் திருமார்பில் அணிந்தனரென்னும் புராணவரலாறு இங்கே அறிதற்பாலது.

உ. இலவு - இலவம்பூ. எம்பெருமாட்டி பார்வை - உமாதேவியாரின் திருக்கண்; சந்திரன். இருக்குமுன் நூல் - வேதமுதலிய நூல்கள். நம்பெருமான் பார்வை - பரமசிவனுடைய திருக்கண்; சூரியன். பலாபலாமரம். குருந்து - குருந்தவிருக்ஷம். நிலவு-பிறை. விநாயகக்கடவுள் இத்தலத்தில் நிலவையுடைய சடைமுடியையும் வெயிலையுடையதிருமேனியையுமுடையராயிருத்தல் இம் முதுகுரவர்களுடைய பார்வைகளிரண்டையும் இவர் ஒருங்கே பெற்றிருத்தற்சிறப்பைப் புலப்படுத்தியதென்றபடி. மூத்தபிள்ளையிடத்தே தந்தைக்கும் இளையபிள்ளையிடத்தே தாய்க்கும் மிக்கவிருப்பநிகழுமென்பதைக் கம்பராமாயணம், மிதிலைக்காட்சிப் படலம் கஉ0-ஆம் செய்யுள் முதலியவற்றிலுள்ள அம்பரீடன் கதையாலும், மூத்தப்பிள்ளையிடத்தேமட்டும் தந்தைக்கு விருப்பம் நிகழுமென்பதை, "மூத்தமகனிடத்தார்வ மீன்றெடுத்த பிதாமகற்கே முதிரும்" என்னும் விநாயகபுராணச் செய்யுளாலும் அறியலாகும். இவர் இத்தலத்தில் திருக்கோயிலின்றியே எழுந்தருளி யிருக்கின்றனர்.

ங. தக்க - தக்கனே!. வினவு - கேட்டு. அகல் மறை - விரிவான வேதத்தின். மேகக் கவினாய் - மேகம்போன்ற அழகையுடைய திருமாலே!. மகச்சாலையின் அகல் - யாகசாலையினின்றும் நீங்குவாயாக. ததீசி இங்ஙனம் கூறியதை, கந்தபுராணம், ததீசி யுத்தரப்படலத்தாலுணர்க. கணிப்பு - அளவு. புக்கு-புகுந்து. ஆய் அகன் அமர்ந்து அவ்வின் முதலானாய் - ஆராய்கின்ற உள்ளங்கள்தோறும் எழுந்தருளியிருந்து அகரவுயிர்போல் முதற்பொருளாயினாய். மிக்க விநாயகன் எனவும் இக்கவி நாயகன் எனவும் பிரித்துப் பொருள்கொள்க. துன் ஊறு-வருகின்ற இடையூறு. என் என்பது இன்மைப் பொருளில் வந்தது.

ச. வண்டு அகம் பாய் - வண்டுகள் உள்ளிடத்தே பாயப்பெற்ற. கவுத்துவப்பேர் ஓர் பானு - கௌஸ்பது

மணியாகிய ஒரு சூரியனையணிந்த. மார்பான் - திருமால். நார் - அன்பு. ஆர் - நிறைவு.

௫. அருவம் - அருவத்திருமேனி. உருவம் - உருவத்திருமேனி. ஒரு தோன்றல் - சிவபெருமான். எனல்- என்று ஆகமங்கள் கூறுதலை. நாதம்- நாததத்துவம். அமர்தற்கு - அரு வத்திருமேனிகொண்டு எழுந்தருளி யிருத்தற்கு. மேய - அருவத்திரு மேனியுடன் மேவிய.

௬. அரை - திருவரை, ஓர்எண். கால் - பாதம், ஓர்எண். காற்புலி- வியாக்கிரபாதர்; காலாற் புலியென்க. ஒருபாம்பு - பதஞ்சலிமுனிவர். மேக்கு - மேலிடம்; சடைமுடியில். திரை பயம் மாது - அலைகளையுடைய நீர்வடிவமாகிய மாது; கங்காதேவி யார்; திரையையும் அச்சத்தையு முடைய முதுமகளென்பது மற் றொருபொருள். அலைஇ - அலைந்து. கிழக்கு - கீழிடம், கீழ்த்திசை. இளங்கன்னிகை - சிவகாமியம்மை. இதில் முரண் தொடையமைந்திருத் தல் பாராட்டற்பாலது.

௭. மாறு - கைம்மாறு. உடல் வளம் - உடம்பிற்கேயுரிய வளம். மின் முன் ஊறு - மின்னல் முதலிய இடையூறுகள். இடையீடு - இங்கே சிலகாலம் பெய்யாதிருத்தல். உயிர் கள் வளமேவி. நடம் - தாண்டவத் தை. பெற - உயிர்கள் பெற.

௮. கரியவன் - திருமால், அவன் மனைவி - பூமிதேவி. வாதவூர்ப்பெரி யர் - திருவாதவூரடிகள், சிவபோக மாகியமது.

௯. நூலளவை - ஆகமப் பிரமா ணம், ஒருவருக்கா - திருவாதவூரடி கள் பொருட்டு, தலைச்சாத்து - தலைக்கட்டு; தலைப்பாகை. உரிய ஒரு பரி- வேதமாகிய குதிரை.

௧௦. கழுவாய் - பிராயச்சித்தம். அன்றிக்கழுவாய் வேறின்று என்னும் மறைக்கு. வாள்கைக்கொண்டு அறுத் துச்சிதையச்செய்த; "செருக்கொ டுஞ்சிவ கிஞ்சைசெய் வார்க்கிலை தீர்வு" என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளைப்பார்க்க.

௧௧. அஞ்சு - ஞானேந்திரியங் களைந்தும். பிறகருவி-வேறு ஆயுதங் களை. நஞ்சு - விஷத்தை. மால் களிறு - கயமுகாசுரன். திங்கட் பிஞ்சு - இளம்பிறை; "மாமதிப் பிஞ் சுமிளை தேர்குயிற் குஞ்சுமுயிர் வாய் மடுத் துண்டொழிவதே" என்பது மதுரைக்கலம்பகம்; ௪௦. களிநிறை மாட்டி.

௧௨. புரமுதல் - திரிபுரம், கா லன், காமன் முதலியோர். புகழ் - புராரி, காலகாலர், காமதகனர் முத லிய திருநாமங்கள். யானை - கய முகாசுரன். அதனொடு - அப்புக ழோடு. ஊர்தி - வாகனம். கய முகாசுரனே விநாயகக்கடவுளுக்கு வாகனமாயினனென்பது புராணவர லாறு; "அத்திக்கிரங்கியருள் பதித் தூர்த்த வகத்திய வாரணமே" என் பது மாயூரபுராணம். முன்னோன் - விநாயகர். பரவுற - கொண்டாட. சூர் - சூரபன்மன். அவற்றோடு - புகழோடும் வாகனத்தோடும். கேத னம் - (கோழிக்) கொடி. மருந்து - சிவபெருமான்.

௧௪. முறையே அவற்றிற்கு எதிர் மறை - குறுமை, நெடுமை, இழிவு, உயர்வு. எண்மை - எளிமை. அரம்- பாதாளம். என்னும் - என்று பெரி யோர்களால் துதிக்கப்படுகின்ற. பெரியகடலைச் ஆசமித்தமையின், நெடுமையைக் குறுமை செய்தலும், குறிய தமது வடிவப்பொறையால் தென்றிசையைச் சமமாகும்படி செ ய்தமையின், குறுமையை நெடுமை செய்தலும், மிக்குயர்ந்த விந்தமலை யை அடக்கினமையின் உயர்பை இழி பாக்குதலும் திருக்குற்றாலத்தில் திரு மாலைச் சிவமாக்கினமையின் இழி யை உயர்பாக்குதலும் வெளியாயின

௧௫. பாலை அளவில்லாத நாளு ண்டு, ஆன் - பசு, தொறுவியர் -

இடைச்சியரை. பார்த்து உவந்த. மால்- கண்ணபிரான். அளவில்லாதநாண்.ஆன்-ரிஷபதேவர். அளவு -கலந்த. நூலளவு ஒருநூல் - பலநூற்பொருள்களும் கலக்கப்பெற்ற ஒரு நூல்; தேவாரம். சோன்மை யானை -வன்மையையுடையவனை.

௧௬. பாலிடை - பாற்கடலினிடத்தே. நூலிடை -நூல்போன்ற இடையையுடைய உமாதேவியாரை. ஓர்பாலவர்-சிவபெருமான். பாலிடை நஞ்சம் - சைனர்கள் பாலிற்கலந்து கொடுத்தவிடத்தை.

௧௭. உந்தி - கடல், ஆறு. மால் -இராமர். திருவையாற்றிற்குச் செல்லுகையிற் காவிரி வழிவிட்டமை இங்கே அறியற்பாலது.

௧௮. இந்தியம் ஒன்றற்கா - நேத்திரேந்திரியத்தால் தரிசிக்கும் பொருட்டு. முருந்தன் ஏமாற. ஐந்தும் - ஞானேந்திரியங்கள் ஐந்தும்.

௧௯. ஆத்திமுதல் - ஆத்திமரத்தின் அடியில். இடையில்லா ஆத்தி-ஆதி; சிவலிங்கப்பெருமான். திகழும் ஆவின்பாலை ஆட்டி. பொல்லாத தியக்கமுள்ளது. அடி - தந்தையின் பாதத்தை. ஆத்தி - ஆப்தி; உமாதேவியார். ஆத்தன் - ஆப்தன்.

௨0. செயற்கருஞ்செயல் - மாது சொன்னகுளால் இளமை துறந்தது முதலியன. பரிவு -அன்பையுடைய.

௨௧. குரவருளொருவன்-உமாபதி சிவாசாரியார். அவர்கூறியதை, திருத்தொண்டர் புராணவரலாற்றில், ௪0-ம் செய்யுளில் வந்துள்ள, "தொண்டர் சீர் பரவவல்லார்"என்பது முதலியவற்றாலுணர்க.

௨௨. தில்லைமூவாயிரவர்களைப் போல் இவர்கள் இத்தலத்தில் ஸ்வாமியைப்பூசிக்கும் குழாத்தினர்.

௨௩. எழாவகை - மனம் எழாதபடி.

௨௪. இறையில் - இறைப்பொழுதில். அவை-மனிறயோதல் முதலியவை.

௨௫. வந்து இவண் யாம் உறைவாம். இந்தத்தலத்தில் நந்தி தேவர்

௨௬. ஆவடுதுறையில் தோன்றி. மாமலம் - ஆணவம். அடியை முடியிற் செறித்து.

௨௭. உணவு உதவுவேனென்று புகன்று இருந்தினேன்.போதவிலைவு-பசுஞானம். ஆரியன்பசிக்கவுண்பான் என்பதை"அந்தமொன்றில்லாவானந்தம் பெற்றேன் யாது நீ பெற்றனை யென்பால்" என்னுந்திருவாசகத்தால் அறிக.

## அவையடக்கம்.

௨. தருதி என்ன - தருவாயென்று சொல்ல. புலம் - அறிவு.

௩. இறி - வஞ்சனை. ஒருவர்-சாக்கியநாயனார். கலும்-கல்லையும். மேனி ஏற்றதை.

௪. நிலையது=நிலைஇயது - நிலைத்தது. எள்ளின் உலைவு இல் நெய் - எண்ணெய். வேறொன்று- கணம்புல். தலை விளக்கு எரித்து உய்ந்தார் -கணம்புல்லநாயனார்.

௫. மணிமணி யாகத்தோன்றும் வார்த்தை - திருவாதவூரடிகளுடைய சொற்கள். வறிய சொல் - பொருளில்லாதசொல். உற்கை - விண்வீழ்கொள்ளி; வானம் விலக்கும்; வாவி போக்கும்.

௬. மூவர். - பிரமன்முதலியமும்மூர்த்திகள், சைவசமயாசாரியர். முடிவில் இன்பு

௭. மறையினும் - உருபுகள் மறைந்தாலும். அந்த முறைதவறிய தொகை - உருபுகள் மறைந்தபொழுது வேறு பொருள்படும் தொகை.

௮. முடிய - முற்ற. மெய்ஞ்ஞானம் - மெய்ம்மையாகிய அறிவு நாற்பொருளை. பதி பசு வென்னும்

இரண்டனுள், பதி உணர்த்தும் சித்து; பசு உணர்த்த வுணரும் சித்து. கொடியது என்றதற்கு எனது வாக்கு என்பது தோன்றுமெவழுவாய்.

௯ ஞானுன்மநாத மெனறனறுப் பொதுப்பட ஆன்ம நாதரென்னுந் திருநாமத்தைக் கொண்டிருத்தலின், ஞானமில்லாத என்னையும் ஆட்கொண்டருளுவாரென்றபடி. நாவலூரர்- சுந்தரமூர்த்திநாயனுர். வெண்ணெய்- திருவெண்ணெய் நல்லூர். அன்று - அடிமையோலையைக்காட்டி ஆட்கொண்டகாலத்தில். 'அருச்சனை பாட்டே' என்றதை, "மற்றுநீ வன்மை பேசி வன்றொண்ட'னென்னு நாமம், பெற்றனை நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க, அர்ச்சனை பாட்டே யாகு மாதலான் மண்மே னம்மைச், சொற்றமிழ் பாடுகென்றார் தூமறை பாடும் வாயார்" என்னும் திருவாக்கா லுணர்க;(பெரிய. தடுத்தாட்.௭௦)

## திருநாட்டுப்படலம்.

௧. சிமிழ்க்க - கட்ட. மேக்கும் கிழக்கும் - மேலிடத்தும் கீழிடத்தும்; சுவர்க்கத்திலும் நரகத்திலும். பவம் - பிறப்பு.

௨. சூல் - கருப்பம். தலம் - திருப்பெருந்துறை.

௩. படியகத்தில் - பூமியில். அவிரும்படி - விளங்கும்படி. அரும்பு அன்பாம் அடி - உண்டாகுகின்ற அன்பாகிய முதன்மையையுடைய. ஒருவர் - வரகுணபாண்டிய தேவர். தன்னென்றது பாண்டிய நாட்டை. செய்தன்று - செய்தது.

௪. குமரி - கன்னியாகுமரியாறு. பொருநை - தாம்பிரபர்ணி. வெண்குடிநை - வெள்ளாறு. என்று, எண்ணிடைச் சொல். இந்நாட்டில் குமரிமுதலிய ஆறுகள் நான்கும் அறமுதலியநால்வகைப் பொருள்களாகவும் விளங்குகின்றன.

௫. வலன் - வெற்றி. வறப்பவென்ற அடியையும் முகிலை வென்ற முடியையும் உடையதாகிய குலநகர் - திருவாலவாய். கோண் - மாறுபாடு; ஐ அசை.

௬. கும்பம் - நடுக்கம்; குரனுண்டாகியது. வம்பு - கச்சினை. யானை - தெய்வயானை. ஓர்குன்று. திருப்பரங்குன்று. நம்முடைய பந்தத்தை அறுப்பவன் - முருகக்கடவுள். இப்படலத்துள்ள ௪௬ - ம்பாடலைப் பார்க்க.

௭. அடிப்பிணிப்பு - கால்விலங்கு. முன்பு உக்கிரபாண்டியரால் சிறையிடப்பெற்றமையின், மேகங்கள் அஞ்சின. சந்தம் - அழகு.

௮. பருவரை - பொதியில்மலை.

௯. சரியையாதி - சரியை, கிரியை, யோகம், ஞானம். சனனத்தெவ்வை - பிறப்பாகிய பகைவனை.

௧௦. இது, திருக்குறளில், நாடென்னும் அதிகாரத்துள்ள, "தள்ளா விளையுள்", "பெரும்பொருளால்", கேடறியா" என்னும் பாடல்களின் பொருளைத்தழுவியது.

௧௧. துறை - வழி. முறை ஒலி - முறையான புகழை. புக்கு என்சொற்றும். மறை ஒலி படு - வேதங்களின் முழக்கங்கள் உண்டாவதற்குக் காரணமான.

௧௨. சுரும்பு அலங்கல். உருப்பம் நீங்கு - வெம்மை நீங்கிய. இந்திரநீலப் பருப்பதம் - ஒரு சிவஸ்தலம்.

௧௩. வேந்தன் - இந்திரன். கூண்ட - திரண்ட. முடியைச்சிதர்த்தது, இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடல். புகழால் நீண்ட நாடு - பாண்டி நாடு.

௧௪. தருப்பம் - ஒருவகைத்தீக் குணம்.

கடு. வேலை - கடல். வடுகநாயகன் - பைரவமூர்த்தி. மேனியை. வானர் - தேவர்.

கசு. இளையவன் - உபேந்திரர்; திருமால். மகள்-பூமிதேவி. இடி பாம்பை அஞ்சச்செய்யும்.

கஎ. பருவம் ஆறு - கார்முதலியவை. பொருவ ஒன்றும் இல் அருள்- ஒத்தற்கு யாதொருபொருளும் இல்லாத அருள். செம்மல் பொழிந்தன.

கஅ. வள்ளியர் - வண்மையையுடையோர்; அவர்திறம் - கைம்மாறு கருதாமற் கொடுத்தல். ஒளித்தன்று - ஒளித்தது.

கக. 'நம்புனலெலாம்' என்பது முதலியன கடலின் உட்கோள். உண்டவன்-அகத்தியமுனிவர். பொதியில் அவருக்கு இருப்பிடம். ஆழி, எழுவாய். கவிழ்திறம் - கவிழ்க்குந்திறம்; பொழியும்விதம்.

உ0. நாணமுற்றோர் விளர்ப்பர். அனை - வருத்தம். அவித்து விளர்த்தன.

உக. கலுழி - காட்டாறு. வனம் சார் தரை - முல்லை. ஓடை - நீண்டுள்ளது; நீர்நிலை.

உஉ. கயிரவப்பகை - சூரியன். குறள் உ - குற்றியலுகரம்.

உங. மாட்சி கடுக்கும்.

உச. அடுத்ததை - அடுத்தது; ஐ - சாரியை.

உரு. உட்லூழ் - பிராரத்துவம். ஊற்றம் - ஊறுதல்.

உசு. வாரி - கடனீரை. மழை - மேகம். தளிப்பணி - ஆலயப் பணிவிடை. வேம்புடையான் - வேப்பமாலையையுடைய பாண்டியன்.

உஎ. நண்பகல் - நடுப்பகல். உதித்து - தோன்றி.

உஅ. மாயகாரியப்பொருள்கள் - மணி, பொன் முதலியவை. நவிலொணு இன்பமாய வான் பயன் - முத்தியின்பம்.

உக. படமாடம் - கூடாரம். விசிகயிறு - இழுத்துக்கட்டியகயிறு.

ங0. கவுணியர் - ஞானசம்பந்தர். தகைபோல் திகைத்த.

ஙக. ஐந்திணைவளம்- குறிஞ்சித்திணை முதலிய ஐந்திணவளம்.

ஙஉ. வரை பயந்தவள் - உமை. மான்மகள் - வள்ளி நாயகியாரை. வரை - கிரௌஞ்சகிரி. சேய்- முருகக்கடவுள்.

ஙங. பஃறரு - பலமரங்கள். வேங்கை மலரும், செண்பகமலரும் வண்டுணுதலை.

ஙச. போகட்டு - போட்டு. இனைவு இல்லா - வருந்துதல் இல்லாத. தாம் தெரியாதவர்கள் இழிந்ததை உயர்ந்ததாகவும் உயர்ந்ததை இழிந்ததாகவும் எண்ணுவார்கள்.

ஙரு. கவணில் மணியைவைத்து. குரல் - (தினைக்) கதிர். ஒருபக்கத்துக்கயிறு அற்றகவணிற்குப் படப்பாம்பு உவமை.

ஙசு. தௌ - ஓடம். குரங்கி - சந்திரன்; மானையுடையவன் என்பது பொருள்; குரங்கை யுடையவனென்பது மற்றொரு பொருள்.

ஙஎ. தெளித்தாங்கு - தெளிவித்தாற் போல. அடையுடுப்பார்- தழையாலாகிய வுடையை உடுப்பார்கள்.

ஙஅ. பிறையின் கோட்டினால் உடைந்த தேனடை. மது அருவி- தேனருவி. இது செந்நிறமுடையது- யானையின் கடாம்-யானையின் மதம். இது கருநிறமுடையது.

ஙக. மந்தி - பெண்குரங்கு. கடுவன் - ஆண் குரங்கு. அந்தில் - அவ்விடத்தே. மற்றொன்று - வேறோர் ஆண் குரங்கு; மாது-உருமை. இவள் சுக்கிரீவன் மனைவி. கவியிரண்டு- வாலியும் சுக்கிரீவனும்.

ச0. கயமுனிக்குலம்- யானைக்கன்றின் கூட்டத்தோடு. கணம் - கூட்டம். அறை - பாறை. தினைக்குரல் - தினைக்கதிர். மறம் - வீரம். எயின்குடி - வேடக்குடி.

சக. கடமை - ஒருவகை விலங்கு.

காளத்தியார்-காளத்தியிலுள்ள சிவ பெருமான். இவர், இறைச்சியைத் தேனிற்றோய்த்துக் கண்ணப்பநாயனார் அருத்த உண்டருளியது இங்கே அறிதற்பாலது.

சஉ. யானைக்கோடுகளில் முத்துண்டென்பர்.

சங. பிண்டியந்தளிர் - அசோகந் தளிர். ஆரம் - சந்தனம். இரத்தல் தலைவர்களின் தொழில். கொள்வார் - கொள்ளும் தலைவியர்கள்,

சச. எறும்பும் அல்லாத உயிர்களுமாகிய யாவும். குறும்பலாவுடைக் குன்றம் - திருக்குற்றாலத்துள்ள திரிகூடாசலம். இது, பாண்டிநாட்டிலுள்ள கச தலங்களுள் ஒன்று. தெறுகின்றபடநகளையும் ஆயிரம் வாயினையுமுடையவன் - ஆதிசேடன்.

சரு. வானமேவிய வாழ்க்கையர் - தேவர். புளிஞர் - வேடர்கள். கொடுங்குன்றம் - பிரான்மலை. ஏனம் நாடொணார் - ஆதிவராகத்தால் தேடியறியப்படாத சிவபெருமான். ஆங்கு ஞாலம் முன்காட்டியிருப்பின் - அவ்விடத்தே பூமி, அந்தரிக்ஷம் சுவர்க்கம் என்னும் மூன்று இடங்களைக் காட்டி எழுந்தருளியிருப்பாராயின். இம்மலையில் பூமியிலிருந்து மூன்று சிவசந்நிதிகள் உள்ளன. மானம் - பெருமை.

சசு. சூர் - சூரபன்மன். இறைவன் - முருகக்கடவுள். யானை தோள் - தெய்வயானையாருடைய தோளை. திருப்பரங்குன்றம், தெய்வயானையாரை முருகக்கடவுள் மணஞ்செய்தருளிய தலம்.

சஎ. மான் - மாரீசனாகிய மானை. வாளியால் தபுத்தானெனினுமெனக. மான் உருத்தழூஉம் - திருமகளாகிய மானின் வடிவத்தைத் தழுவிய. திருமகள் மான் வடிவமுற்றிருந்ததை கந்தபுராணம் வள்ளிநாயகியார் திருமணப்படலத்தால் உணர்க. மாலை - திருமாலை. மான் உருத்தகான் - மான் அழகு பெற்ற காடாகிய முல்லை நிலமானது.

சஅ. வனம் - துளசி. துளசியால் திருமாலுக்கு மயக்கம் நீங்கின மைகந்தபுராணத்தால் அறியப்படும். மீப்பாய - மேலே பரவிய. படர்ந்து - நினைந்து. அவண் - அவ்விடத்தே.

சகூ. தேரிலுள்ள அசைந்தாடு மாலைகள் சரக்கொன்றைப் பூங்கொத்திற்கு உவமம். மதலை - கொன்றை. கூவிளம் - வில்வம். ஓதிமம் - அன்னம். இப்பறவை மருதநிலத்திற்குரியது.

ருய. மூவகைத்தொழில் - படைத்தல் காத்தல் அழித்தல். இடைத்தொழில் - காத்தற்றொழில். தேவன் - திருமால். ஆவயின் - அவ்விடத்து. தோழம் - பசுக் கொட்டில். தீவு - இடங்கள். பரப்பிச்செறிவர்எனக.

ருக. புதல் - சிறு தூறுகள். கலையத்துப் பால்பாயுமோதை - பசுக் கறக்கும் ஒலி.

ருஉ. முளிபடேஉ - காய்ச்சப்பட்டு. பெருகு - தயிர். வெருகு - காட்டுப்பூனை. யந்திரம் - வண்டி முதலியவை.

ருங. வேய்ங்குழல் - புல்லாங்குழல். ஏறு - இடபம். பனித்த - குளிர்ச்சியைச் செய்த. மௌவல் - முல்லை. வில் - இந்திரவில். தொழிப்பு - முழக்கம். தனித்தமங்கையர் - கணவனை விட்டுப் பிரிந்தோர். மகளிர் தனித்திருத்தல் முல்லைக்குரிப்பொருள். இருக்கை சாய் - இருத்தலைக் கெடுக்கின்ற.

ருச. நகையரும்பிட - பற்களைப் போலவே தோன்ற. குழல் கனிந்திட - கூந்தலைப் போலவே பழுக்க. களவு - களாச்செடி.

ருரு. குறும்பொறைநாடர் - முல்லை நிலத்தலைவரின். இமிலுக்குத் தோளிணையுயர்ந்தன, கொங்கைகட்கு அவை ஒத்தனஎன்று சொல்லும்படி.

ருசு. இறுங்கு - சோளம். மூற்கம் - பயறு. கோத்திரவம் - வரகு. புல் - கம்பு. கானகத்தில்வரை நன்

ணிய வென்ன.
ருஎ. குருந்து குருந்தமரம். தூர்வை - அறுகு. ின் ஐந்து - பஞ்ச கவ்வியம். ுன்களம் பழம் - இனிய களாப்பழம்.
ருஅ. பூவை - காயா.
ருக. கானம் - புழுகு. தானப் பேரரசு - இந்திரன். வான் அப்பு ஏர் முடியாய் - ஆகாய கங்கையை அணிந்த சடைமுடியை யுடையீர். கானப்பேர் - காளையார் கோயில். புறவம் - முல்லைநிலம்.
சுO. ஆடானை - திருவாடானை.
சுக. புத்தூர் - திருப்புத்தூர். இத்தலத்தில் பிரணவம் தன் பொருள் சிவபெருமானே என்பதை அறிவிக்க வேண்டித் தவம்செய்து கொன்றை மரமாகிச் சிவபெருமானுக்கு நிழல் செய்கின்றது என்பது புராணவரலாறு.
சுஉ. அகரு - அகில். ஒருவரை - பொதியில் மலை. வாரி - கடலின்.
சுந. குறள் - பூதம்; குண்டோதரன். நீர்நசை - தண்ணீர்த்தாகம் அழைத்தவாறு - அழைத்தபடியே.
சுச. செங்கையின் ஆடல்கொண்டார் - திருவாதிரை நாளில் தாண்டவமாடியருளிய, சிவபெருமானது; கையால் ஆடல் கொண்டாரென்பது மற்றொருபொருள்; "செங்கையாட்டினர்" (நைமிச.) என்றார் திருநாகைக் காரோணப் புராணத்தும். வெள்ளாறு — ... ளாறு
சுரு. மதகின் ஊடு. வெள்ளம் காட்டிற்று.
சுசு. கொள்கைக்கு - கொள்ளுதற்கு.
சுஎ. சாதி - கள், ஜாதி. பழையர் - கள்விற்போர். மூவர் - பரசுராமன் முதலியவர். அலம் - கலப்பை.
சுஅ. ஏர்க்கால். நத்தம் தக - இருவையொப்ப. தாழ்வு உயர்பு. முட்கோல் - தாற்றுக்கோல்.
சுக. புரத்தல் செய்பவன் திருமால். பாங்கு - அழகு. முன் ஏர் நடக்கும் உழு விளாப்படைச்சாலை மாய்க்கும் தாத்தது பின் ஏர்.
எO. குறிகொள்ளும்பகடு - குறித்துக்கொள்ளும் எருமைக்கடா. நாஞ்சில் - கலப்பையின்; ஊழ்த்தல் - பதழிதல்.
எக. தழைதரல் - செழித்தல், தழைகளைத்தருதல். கங்கு - வரம் பின் பக்கம். பழையது ஈது அகரு (அகில்) தேய்த்த பான்மையது.
எஉ. கரம்பு - தரிசுநிலம். அவல் - பள்ளம். பரம்பு - ஒருவகைப்பலகை. தோடம் பாறியநாளில் - தோஷம் நீங்கிய நாளில். வரம்பு - வரப்பு, அளவு. நிரப்பு - தரித்திரம்.
எந. சேய் - பிள்ளை. விலங்குறு - விலகாத. குலம் - கூட்டம், உயர்வு. கூழ் - பயிர்.
எச. நாறு - நாற்று. விழைய - ஒப்ப.
எரு. பிழி - கள். "மீன்கணின வவும்வெற் றிடங்க ளின்மையால்" என்பது சிந்தாமணி. ஆற்றுக்காலாட்டிமார் - உழத்தியர். நாற்றுக்களைச் சாய்த்து நடுவது மரபு. சாய்வு - மெலிவு, நிமிர்ந்தவை, நாறுகள்.
எசு. சரோருகம் - தாமரை.
எஎ. களைகளைக் களையும் காலம். தளை - வயல். விளையும் நடையை.
எஅ. 'சிறியபகையெனினுமோம்புத றேற்றார்,பெரிதும் பிழைபாடுடையார்' என்பது, நீதிநெறிவிளக்கம். அல்லார் - பகையை ஓம்பியவர். தாமரைப்பூ திருமாலின் உந்தியாயும். நள்ளா - நட்புக்கொள்ளாத, ஒவ்வாத.
எக. தோட்டி - அங்குசம். வெள்ளாம்பல் - ஒருவகைமலர், வெள்ளை யானை. கை எவால் - கையாகிய பாணத்தால். தாமரை - ஒருவகைக் கொடி, தாவுகின்ற மரையென்னுமிருகம். புல் புற்கள், புலி. அங்கிரி - பாதம், அழகியமலை.
அO. புண்டரீகம் - வெண்டாமரை. கோகனகம் - செந்தாமரை.

-க்கரைகின்ற - சொல்லுகின்ற. கொடிய-கொடிகளாக உள்ளன, கொடுமையையுடையன.

அ௨. விண் அமைபவர் - தேவர். சூர் - சூரன். பயிர் - நெற்பயிர். பிணைத்தல்-இளைத்தல். கழைகொல் - மூங்கிலோ.

அ௩. வயிர் ஈட்டிபோலும் நீர நிறத்தைக்காட்டி வெளிப்பட்டு. மதி விடுகதிர்-சந்திரிகை. நிமிரச்சாய்ந்த.

அ௪. கொல்லரம் - கொல்லனது அரம். கொடும்பிறை இரும்பு - அரிவாள். சொல் - நெல். தார் - அடி. வரிந்து - கட்டி.

அ௫. பிணையல் - பிணைத்தல்.

அ௬. ஊர்தரும் இறைவன் - யமன். கடா, எழுவாய். வை, பலாலம் - வைக்கோல்.

அ௭. ஆற்ல ஒன்று மகாறறவன் கொளக்கொடுத்து. தொன்று - பழமை. ஆர்ப்பு செய்யும்.

அஅ. கழை - கரும்பு. வடிக்கும் சாற்றை. அரிசனம்-மஞ்சள். புழைமனம்-உள்ளீடில்லாத மனம். உழைமான்.

அ௯. இறை - சோமசுந்தரக்கடவுள். ஆடல் எட்டெட்டு - ௬௪ திருவிளையாடல். எவர்க்கும் - எல்லா மூர்த்திகளுக்கும். மூத்தி மூளைத்தமை, "மூளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" என்னும் திருவாக்கால் விளங்கும்.

௯0. பொன் போல்வாள்-பொன்னனையாள். வண்ணமாலை எவாகக் கொண்டவர்.

௯௧. ஏட்டை அகத்தே கொண்டதாய ஏடகம்-திருவேடகம். மூன் - முதலிய தலங்கள். கூடிய அகங்கொண்ட. மென்பால் — மருதம்.

௯௨. "கடலுக்கு நதிபதியென்று ஒரு பெயருண்டு.

௯௩. சுறாமருப்பு - சுறாமீனுடைய கொம்பு. கோட்டினின்றும் - அக்கொம்பினின்றும்; சுறாமீன்கொம்பில் வருணனைப்பூசிப்பது நெய்தனிலத்தார் மரபு. திருவம் - செல்வத்தை.

௯௫. படருற - துன்பமுற. பக்னை - புலிநகக்கொன்றை. இதன் பூவிற்குத் தூண்டில் உவமை.

௯௬. இறையவன் - பரமசிவன். மொய்த்த பலவகையான புலால் நாற்றம் மாறும்படி.

௯௭. பிண்டிவைப்பு - குறிஞ்சி. முல்லைவைப்பு - முல்லை. நீலம் - கருங்குவளைப்பூ; இஃது ஐந்து பாலங்களுள் கொலைப்பாணம்.

௯அ. துகிர் - பவழம். நாகங்கள் - புன்னைகள். புன்மையடைமொழி, 'புன்னாகம்' என்னும் பெயரில் உள்ளதாகக் கொள்க.

௯௯. ஆர் ஒலி - நிறைந்த ஒலி. நாவாய் - கப்பல், நாவையுடைய வாய்கள்.

௧00. முண்டகம் - தாழை. உல்லம் - ஒருவகை மீன்.

"௧0௧. நன்கு அல்லது - தீயது.

௧0௨. மருநிலம் - பாலை; உமணர் - உப்பளப்போர். உப்பின் ஓங்கல் - உப்பின் குவியல்.

௧0௩. கடலாலும், கேணியாலும்; நிரனிறை.

௧0௬. கொற்றி - துர்க்கை.

௧0௭. மாலை - இயல்பு. வேலையில். விறற்று - விறலையுடையது.

௧0அ. ஈந்து - ஈச்சந்தோகை. குரம்பை - குடிசை. புள்ளுவர் - மறவர். விந்தை - வீரலக்ஷ்மி. நீர்மையராய் வாழ்குவர்.

௧0௯. இறுக்கர் - பாலைநிலமாக்கள். புறா - தூதுணம் புறா.

௧௧0. கர்ச்சூரம் - பேரீந்து. பாடலம் - பாதிரி. தொடுதல் - தோண்டப்படுதல்.

௧௧௧. இவர் சம்பந்தம் - ஏழும் சம்பந்தம். வேப்ப மாலை பாண்டியர்களுக்கு உரியது. அந்தநாயகன் பாண்டியன். ஸ்ரீவரகுணபாண்டியதேவர் திருவிடைமருதூரில் வேப்பங்கனிகளைச்சிவலிங்கங்களாகப் பாவித்து

அம்மரங்களுக்கு விதானம் கட்டுவி த்த அருமைச்சரிதை இங்கே அறியத் தக்கது; "வேம்புகட் கெல்லாம் விதான மளித்தும்" என்பதனாலும் அறிக; இது, திருவிடை மருதூர்மும் மணிக்கோவை.

கஉ. எருவை -கழுகு. பொருள் கருத்துறப்போமவர் -பொருள் வயிற் பிரியும் ஆடவர். செலவு அழுங்குவிக் கும் - வருந்தச்செய்து, செல்லுகலைத் தடுக்கும். நெட்டராக்கள்-நீண்ட பா ம்புகள். புரி-வைக்கோற் புரி.

கக௩. கன்னிகாரம் - கோங்கு. பஞ்சிகள் - பஞ்சுகள்.

கக௪. உறந்து - மிகுந்து. பாலை கள் - பாலை மரங்கள். இப்பழங்கள், உண்பவர்களின் உதடுகளை ஒன்றோ டொன்று சேரும்படி செய்யும். அத ரம் - கீழுதடு. ஓட்டம் - மேலுதடு.

கக௫. மால் அயன் காடியது, அக் கினிமலையை முன்னின் இகழார். மயக்கம் - கல ப்பு.

கக௬. பாகல்-பலா. கறி-மிளகு. கான்வாரணம் - காட்டுக்கோழி. குறிஞ்சியும் முல்லையும் மயங்கினமை கூறப்பட்டது.

ககஎ. ஆன் குழக்கன்று-பசுவின் இளங்கன்று. அவலகம் - பள்ளத்தி னிடத்தே. உலகெடுத்துச் சொல்லு வது, "பழம் நழுவிப் பாலில் விழுந் தது" என்னும் பழமொழி. முல்லை மருதங்களின் மயக்கம்.

கக௮. முண்டகம் - தாமரை, தா ழை. தையல் - அழகு. புதுக்கடி - புதுமணம். மருதம், நெய்தல் இவ ற்றின் மயக்கம்.

கக௯. வயலைக்கொடி - பசலைக் கொடி. நெடி - ஒருவகை வண்டு. பூ வை-காயாமரம். இதற்குத் திருமால் உவமும். நெய்தல், மருதம், முல்லை இவற்றின் மயக்கம்.

க௨0. வேழம் - யானை. ஆன் - பசு. இடல் - இடுதல். மதுரகத்தலர்- இருப்பைப்பூ.கறை- உரல். கரும்பு மருதத்திற்கும், யானை குறிஞ்சிக்கும், பசு முல்லைக்கும், இருப்பை பாலைக் குமுரியன. இஃது, ஐந்திணைமயக்கம கூறிற்று.

## திருநகரப்படலம்.

க தேசு - ஒளி. வீசுதல் - கொடு த்தல். விண்டு - திருமால்.

௨. பொலி பெருந்துறை.

௩. பாடும் எல்லை - கொண்டா டப்படுகிற தலத்தின் எல்லை.

௪. விமானம் - தேவர்க்குரியன. உண்ணு - உண்டு. அளி - வண்டு.

எ. மதிசெய்-சந்திரனை யொத்த. வெள்ளை நதி - வெள்ளாறு.

௯. ஆசை - விருப்பம், பொன். வெறுக்கை - வெறுப்பு, பொன்.

க0 சிறுதுறை - சிறுவழி.

கக. குரவு-ஆசிரியத்தன்மை. புர வு-காத்தல். குரவு எற்று.

க௨. கதி - முத்தி.

[illegible] மணி நிறத்தவன் - நீலமணி போன்ற நிறத்தையுடைய திருமால். படலை - மாலை.

க௪. அவை - அம்மாங்கனிகளை.

க௫. நிரையலின் கொழுந்து-வெ ற்றிலைக் கொடியின் கொழுந்து, அலை யின் கொழுந்து; அல்லும் இன்னும் சாரியைகள். சிதநதி - வெள்ளாறு.

க௬. நிலாம் -விளங்கும். இலாங் கலி - தென்னை. அஃது-அம்மறைப் பிணை.

கஎ. தாய் - தாவி. வலிமுகம் - குரங்கு. ஆவி - தடாகம். அதனை -அவ்வாவியை. தாவிச்செய்வது.

க௮. கந்தியஞ்சூழல் - பாக்குத் தோட்டம். கூன் உறல் - மந்தா யின் கூன்முதுகை அடைதலை. அலை க்கு வில்லும், பாக்குப்பழத்திற்கு மண் உருண்டையும், வாழைக்குலைக்கு மந் தரையின் கூன்முதுகும் உவமைகள்.

கக. தேத்தடை - தேனடை. வளை - சங்கு.

உ0. நால்வகை மலர்கள், கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ. மலர்கள் தேவர்களுக்கு இருப்பிடம். வண்டுகளுக்கு அசுரர்களுவமை.

உக. மூவகைநகர்-புறநகர், இடைநகர், உண்ணகர். படை - சேனை.

உஉ. கோடு - சிகரம், கொம்பு. மணி - ரத்நம், ஒலிக்குமணி.

உங. புகர்முகவரை — யானை. கண் - இடத்தே. உறை - துளி. மூவகை-மும்மதம்,மூன்று நீர். பிறை உணர்ச்சியர் - பிறைபோல வளரும் அறிவினை உடையார். வாரி - கடல், யானைக்கூடம்.

உச. கடாம் - மதம்.

உரு. தொடர் - சங்கிலி. பன்முறை காலெழும் செவி.கால்-காற்று. எதற்கு - எதன்பொருட்டு.

உசு. மருவலர் - பகைவர், மணத்தையுடைய அலர். வால்நகம்-வெள்ளிய நகங்கள். கயங்குற -கசங்குற. நிரியாணம் - கடைக்கண்.

உஎ. பரியென -சுமப்பாயென்று. அரி புணர்ச்சி மெய் -திருமால் புணர்தலையுடைய மெய்; பூமியினுடம்பு.

உஅ. முரணுடைத்து, கடலுக்கு.

உகூ. பூப்பு - பூத்தல். பாடலம் -பாதிரி. கந்துகம் - பந்து. குதிரைக்குக் கொக்கு, படலம், கோரம், கந்துகமென்று பெயர்களுண்டு.

ங0. உருவை. ஆதிநூல் - வேதம். இளைத்த திங்கள் - பிறை. அதன் மிசை அவ்வேதக்குதிரையின் மேலே. அம் கள் மாலையான் - பிரமசிவன்.

ஙக. குரம் - குளம்பு. உகைக்கும் - செலுத்துகின்ற. தன்மை இல்லாத. மந்திரம் - குதிரைப்பந்தி.

ஙஉ. உதன்மிசை - அதன்மேல். மேதகம்- கோமேதகம். பிருதுவிமுதலிய ஐம்பூதங்களினிறம் முறையே பொன்னிறமுதலியன.

ஙங. வெற்றம் - வெற்றி. சயந்தனம் - தேர் -தேர்க்காற்கடுப்பு-நேதருருளையின் வேகம். காற்கடுப்பு-காற்றின்வேகம். அரைக்கால் - ஒருசிற்றெண்.

ஙச. சூரியனது தேர்செல்லுதலை மட்டு முடையது ; இத்தேர் செல்லுதலையும் மீளுதலையுமுடையது.

ஙரு. வியாளம் - பாம்பு ; ஆதிசேடன். எய்த்து - அறிந்து. நுதலி - நெற்றியை யுடைய சிவபெருமான் ; ஆவாது தேர் - பூமி.

ஙசு. துவையல் - துகையல்.

ஙஎ. இதன்முதலடி, "விழித்த கண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி, னோட்டன்றோ வன்கணவர்க்கு" என்னுந்திருக்குறளின் பொருளையுடையது. சள் நிவப்புறு. கண்ணி - கருதி.

ஙஅ. மாசை நேர்வுறு - குற்றத்தைத் தருவது. தேசை - ஒளியை. ஈசை - அம்பிகை. இளமுளை - முருகக்கடவுள்.

ச0. தோற்றுநர் - தோன்றச்செய்பவர். முனைய - கூர்மையையுடைய.

சக. பசல் - பகற்காலம். ஒருவ- (ஒலியை) நீங்க.

சங. பற்ற ஆம் நளி. தோம் அற்ற.

சச. சற்றே கையை நீட்டி. பாடு, பீடு - பெருமை.

சரு. பல வில்-பலவகையொளி. நபச்சுரபி-காமதேனு;நபம்-ஆகாயம்.

சசு. கொடிய - கொடிகளையுடைய. மகவாக்கம் - புத்திரப் பேறு; "அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார், வழுக்கியுங் கேடீன் பது" என்பது திருக்குறள்.

சஎ. முகை செய் - தோன்றுதலைச் செய்கின்ற. முறி - தளிர். உகைத்தல் - செலுத்தல்.

சஅ. கைய்தாம் - தூய்மையையுடையதாகிய. மை அளாவலால்.

சகூ. உட்கோல - உள்ளத்தைச் சூழ. ஐங் கோலன்-ஐந்து அம்புகளையுடைய மன்மதன். தக்கோலத்தைமென்றவளுய். குறுங்கண் -சாளரம்.

ரு0. இலக்கம் - லக்ஷ்யம். அலக்

கண் - துன்பம்.

இக. ஆகாயத்தைப் புகைகிற மூடையதென்பர்.

இஉ. முல்லை - கற்பு. பங்கம் - குற்றம், சேறு.

இங. துணை - ஒப்பு. தமிழ் முனி - அகத்தியர். வரை - விந்தியம்.

இச. தாமரைப்பூ வேதியர்க்குரியது.

இரு. ஆவிவாய் - தடாகத்திலே. எவின் - அம்பைப்போலவே.

இசு. கிள்ளை - கிளி, கிள்ளுதலை. அம்கையா.

இஎ. வேட்டு - விவாகம் செய்து. உலாவுதல் - பவனிவருதல். நறுமொறுப்பன் - பொறுமையை அடைவன்.

இஅ. பூ வண்ணத்தொடை - பூவாலாகிய அழகியமாலை.

இகூ. கண்டும் - கற்கண்டும். தேம் - இடம்.

சுo. நியமம் - நியதி, வீதி.

சுக. கடை - முடிவு.

சுஉ. குசை - தருப்பை. தாழ்ந்த - பொருள் ஆழ்ந்த. வீழ்ந்த - விரும்பிய.

சுங. பண்ணிய - பண்ணுக.

சுச. குடிக்கும் - குடிப்பான். தெவ் - பகைவனுகிய இந்திரன். சேரிய - சேர்தற்கு.

சுகூ. ஆதியாகியவீ வெளியுற. கராம் - முதலை. உடு - அகடு. அகத்தே நலத்தையும் புறத்தே தீய வேடத்தையும் ஏற்றபுத்தர் - சாக்கிய நாயனுர்.

சுஅ. கொடியது - கொடுமையையுடையது, கொடிகளையுடையது. கோணை - மாறுபாடு; ஐ-சாரியை. சால் -மிகுதி. பொறி -யந்திரங்கள். கடியது - காவலையுடையது.

எo. பொறி - இந்திரியங்கள், யந்திரங்கள். பண்கப்புலம் - பகைமையையுடைய விஷயங்களை; பகைவருடைய இடங்களை.

எக. அதிர்வு - நடுக்கம். மூடுறுப்புதவு - மூடாததகதவு.

எஉ. ஓரா - நீங்காத.

எங. அணியல் - மாலை. கண் ஆடில. சுவர்ப்புறம் நிற்ப. படர்ந்தது - வந்ததை.

எச. தகைத்திறம் - தடுக்குந்திறம்.

எரு. மூரிநீர் - பெரியநீரையுடைய கடல் சூழ்ந்த. பெட்டு - விரும்பி.

எஎ. வன்னி - நெருப்பு. காமத்தீ, ங்கிற் சுடுமென்பதை, "நீங்கிற் றெறூஉங் குறுகுங்கால் தண்ணெனுந் தீயாண்டுப் பெற்றாளிவள்" என்பதனுலறிக.

எஅ. தருமம், ஊருணி, முத்தி ..வகள் பொதுவாதலறிக; ஊருணி -ஊரரால் உண்ணப்படுவது; குளம்.

எகூ. குலமகளிர் கருவுயிர்த்திருத்தலையும் பூத்திருத்தலையும் பரத்தையர் சேரியிலுள்ள தலைவர்க்குத் தெரிவிக்கவரும்மகளிர் முறையே வெள்ளணியையும் செவ்வணியையும் அணிந்து வருதல்மரபென்பர். பூந்தளி மங்கையர் - நாமகளும் திருமகளும்.

அo. வேர் - வியர்வை, தெய்வமகளிர்க்கு ஆடை அழுக்குறாது; வியர்வையுண்டாகாது; மாலை வாடாது. புவியகத்தீரம்பைமார் - பூமியிலுள்ள தெய்வப்பெண்கள்.

அக. பூசுரர் - பூமியிலுள்ள தேவர்.

அஉ. வேளாளர் - கங்கா குலத்தார்.

அங. முளகர் - கீழ்மக்கள்.

அச. வேளாளர் விருந்தை ஓம்புவரிலராயின். இச்செய்யுள், "பெயற்பான் மணிழபெய்யாக் கண்ணும்" என்னும் நாலடியாரின் பொருளை உட்கொண்டது.

அரு. வேளாளர் நீலோற்பலமாலையையுடையர்.

அஎ. கமலராகம் - பதுமராகம்; மாணிக்கம். வித்துருமம் - பவளம். வலன் அவிந்ததேம் - வலாசுரனிறந்த இடம்; இறந்தபின் தன்னுடைய உடம்பிலிருந்து நவமணிகளும் உண்டாக

வேண்டுமென்று இவன் வரம்பெற்ற வன்; திருவிளையாடல் மாணிக்கம் விற்றபடலம் பார்க்க.

அஅ. இனம் சுட்டலாவது, 'பய றளதோவணிசேர்'என்பார்க்கு அஃதி ல்லையாயின், 'உழுந்துண்டு' என்றல். கேட்டபொருளையே கொடுப்பாரென் றபடி. இம்மி-ஒருவகை அரிசி; சிறிய தோரளவு. கதுவுதல் - கொள்ளுதல்.

அகூ. அள்ளுநாள்-கொள்ளுநாள்.

கூ0. உயிர்வரினுக்குறண் மெய்வி ட்டோடலைக்கற்பவர். 'நம்தொழில்' என்றது, சிறிதுகொடுத்துப் பெரிது கொள்ளுதலை.

கூக. தோன்றலில் - தோன்றல் விகாரத்தில். தாளினால் திருஆதும்.

கூஉ. அவர்திருவை. மண் - மண் ணில். ஆண்டு - ஆட்கொண்டு, பெரு மனின்-சிவபெருமான்போல.

கூ௩. நகம் - மலை. இகவு-இகத் தல்; நீங்குதல்.

கூ௪. வண்டு — அம்பு. பகை வரைத் தேவராக்குவார். கண்டுசேர் -கற்கண்டை ஒத்த.

கூ௫. அரியுகைப்பவள் - தார்க் கை. அம்புயம்-அழகியபுயம். பரிக்கிரி -தேர்.

ஓடலும் வாடலுமுள்ள பகை வா ந்தவர்.

கூ௭. மறைக்கொடி - வேதத்துவ சம்.

கூஅ. சாலை ஊட்டலால்.

தங்கள் நெஞ்சில். சுதம் - அழிவு.

க00. கொற்படை - தொல்லு நிலையுடைய படை. பொற்பு அடை.

க0க. கற்பிற்கு அழல் உவமை; "தழலோவென்னுங் கற்புடையதனி நாயகி" - (பாரதம், சூது. உஉ௪).

க0உ. பொறை - பொறுமை. ஆன்மார்த்தபூசை, பரார்த்தபூசை.

க0௩. மறைமுடி - உபநிடதம். இறையும் - சிறிதும்.

க0௪. மூவகைத் தீக்கை-சமயம், விசேடம், நிருவாணம். பாவனம் - பரிசுத்தம்.

க0௬. கவிமுன் நால்வர் - கவி, கமகன், வாதி, வாக்கி.

க0எ. மூரிவு - ஒடிதல். மூரல்- அன்னம். கருணை - பொரிக்கறி. பாகு - குழம்பு. பரிவு - அன்பு.

க0அ. தெவ்வி-கொண்டு. தோறும் - சால்கள் தோறும். சம் -எலுமிச்சை. வாக்கி- வார்த்து. ஓர்கனி - நெல்லிக்கனி.

கக்க. கோடிய-வளைந்த.

கக௩. கோள்கள் நம்மதிலென.

கக௫. ஞானம் ஐந்தாவன: ஞான நூலை ஓதல், ஓதுவித்தல், அதன் பொருளைக் கேட்டல், கேட்பித்தல், சிந்தி;

ககஎ. அருவென - அருபமாக. நள்ளிய - நள்ள; பொருந்த.

க௧அ. கதிர் - சூரியன்.

ககக. ஆவி-புகை. தாய்- தாவி.

க௨0. மூறை - மூறையே.

க௨உ. அறுபகை - காமமுதலிய வை.

## நைமிசப்படலம்.

க. மந்திரிப்பவர் - ஜபிப்பவர். கன்மத்தைத் திரிப்பவர், சுமந்து ரிப்பவர். மந்திரிப்பவர்-மந்திரியா கிய பிறப்பையுடையர்; பவம்-பிறப்பு.

உ. மந்தி - வண்டு' ஒருவன் - பிர மன்.

௩. வந்து வழங்க. எந்திடத்து - எந்த இடத்து. அந்தஇடத்து. நந்து- சங்கு- வயங்குவாய், விளி. தேம் - விராவி இசைப்பாய்.

௬. எகின்கொடி - அன்னக்கொடி. கேமி-வயம்,

எ. அருள்திறங்குறித்து. வருட்டி (=வருடி) - தடவி.

அ. உதக்கு - வடக்கு.

கூ. மணிமார்பினன் - திருமால்.

க0. அகைக்கும் - வருத்துகின்ற.

முளைக்கும்-தோன்றும். அரசு அவன்று அமர்ந்து. உகைக்கும் - செலுத்தும்.
௧௨. சிருக்கு - வேள்விக்குரிய ஒரு வகைக்கருவி. வென் - முதுகு. ஒருரு எய்தின் - சாரூபத்தை அடைந்தால். தழால்-தழுவுதல்.
௧௩. தாமரைக்கு நாயகன் - சூரியன். சரு - தேவருணவு. குமுதநிரைக்கு நாயகன் - சந்திரன்.
௧௪. அருகுநீர் - சுருங்குதலில்லாத. யாகாக்கினியின் கொழுந்தால் தேவருலகம் உருகி வீழாதிருத்தற்பொருட்டே மேகத்தையும் ஆகாயகங்கையையும் கீழேயிருக்க அமைத்தனர்.
௧௫. யாகப்புகையால் மேகங்களும் அவற்றின் சம்பந்தத்தால் கடலும் கறுத்தன.
௧௭. நாதம் - ஒரு தத்துவம். போத ஆம் - மிக ஆகிய. இதிலுள்ள முனிவர் அடிசிலுண்ணு திருத்தல், இங்கேயுள்ள பலாக்கனி முதலியவற்றின் சுவையை நினைந்தே.
௧௮. சுதரிசனம்- நல்ல தரிசனம், சக்கரம். தண்மைதவா.
௧௯. ஒரு முனிவரன்-துருவாசர். உறந்து - மிகுந்து. ஒருவன்-கண்ணபிரான். கற்பகவனத்திலும் இது
உ௦. பன்ன - சொல்ல.
உ௧. வமனபதம் - வாந்திபண்ணின சோறு. இந்திரன் முதலியவர்களின் பதவிகளை மதியாதவர்கள். அருட்பவர் - திருவருளாலுண்டானவர்.
உ௨. எதிர்மறை -தன்பம்
ஊழ் - பிராரத்துவம். வரை - மலை. நன்பயச்சுரதேனு-நல்லபாலையுடைய காமதேனு.
உ௩. முடிய - முற்ற.
உ௪. அருட்குறி - சிவலிங்கம். நிகமம் - வேதம். பவஞ்சம் - பிரபஞ்சம்.
உ௫—௩௨. முனிவர்களுடைய பெயர்கள்.
உ௫. சுநீகூணர்.
உ௬. அரபத்தர். கோண் இரண்டு காலினன் - அஷ்டகோண மஹருஷி. மாண் இரப்பியர்.
உ௭. உரோமசர்.
உ௮. கூஷ்மாண்டர் தாலப்பியர். அசிதர். சித்திசால- சித்தி மிகுந்த. அகமருஷணர்.
உ௯. வல்ல சுகர். தநிசிப்பெயரை ஆள்பவர். நல்ல சனுதர். நகு சாதர்.
௩௦. கலைச்சிருங்கன்- கலைக்கோட்டு முனிவர். நாரதர். ஒற்கம்இல் - வறுமையில்லாத. தூமபானர்.
௩௧. முது . மொழி- சொல்லப்படுகிற.உக்கிரவீரியர். வீறு முடி- சந்திரனை அணிந்தமுடியையுடையவர்.
௩௨. சவுபரி. பருப்பதன் - பர்வதமுனிவர். ஆசுவலாயனர். காலவர். திரணவிந்து.
௩௩. இமவரைத்தோன்றுகொடி- உமாதேவியார். உறந்த- மிக்க. ஓரியாகம்-தீர்க்கசத்திரம்.மறம்- பாவம்.உபக்கிரமித்தார்- தொடங்கினுர்.
௩௪. பன்னியர்- பத்தினியர்.மனு- மந்திரம்.
௩௫. சவுநகர் முனிவர்களுக்கு முகம் போல்வார். தளி -கோயில்.
௩௬. அருவும் உருவும். உபயம்- ரூபாரூபம்.
௩௭. ஒதின் நின்னலது. பரமசிவன் அருவத்திருமேனிகொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்தலத்தைக் கேட்கவிரும்பினுர்.
௩௮. ஓர்தரு நசை - ஆராயும் இச்சை. அன்று நீர் - விரோதம் நீங்கிய.
௩௯. அந்த வேலை - அந்தச்சமயத்தில். அளவா - கலந்து- சந்தம் - அழகு. பந்தம் - கட்டு.
௪௦. வரவு போக்கு இலான் - பரமசிவன். புரவு - காத்தல். கரவு-கள்ளம். மாணுக்கர் கலப்ப.
௪௧. விகசிதம் - மலர்ச்சி.
௪௨. மயிலின் - மயில் போல. நந்த ஓர்நகில் - மிக உணரு மாணுக்கர்

